குருபர் துணை

# மெய்கண்ட சாத்திரம்

## (சித்தாந்த சாத்திரம்)




மெய்கண்டார்

இஃது

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீன

24வது குருமகாசந்நிதானமாக எழுந்தருளியிருக்கும்

**ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த**

**பரமாசாரிய சுவாமிகள்**

ஆக்ஞையின்படி வெளியிடப்பெற்றது.


ராப்பர் பயிண்டு ரூ. 0—8—0

**1942**

காலிகோ பயிண்டு ரூ. 0—11—0



*திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதினம்*

**24**-வது மஹா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக பரமாசாரிய சுவாமிகள்

சிவமயம

திருச்சிற்றம்பலம்

சித்தாந்தத் தேசிவன் முத்திசித் தித்தலால்
சித்தாந்தத் தேநிற்போர் முத்தி சித்தித்தவர்
சித்தாந்த வேதாந்தம் செம்பொரு ளாதலால்
சித்தாந்த வேதாந்தம் காட்டும் சிவனையே.

—திருமந்திரம்.

சித்தாந்த சாத்திரம் பதினான்கின் மூலம் திருக்கயிலாயபரம்பரைத் தருமபுர ஆதீனத்தின் பிரசுரமாக இப்போது வெளியிடப்படுகின்றது. இப்பதிப்பில் ஏட்டுப்பிரதிகளை வைத்து ஒப்புநோக்கியதின் பயனாக மூலபாடம் பற்பல இடங்களில் செம்மையாகவும் திருத்தமாகவும் அமைந்துள்ளது. பாடபேதங்கள் ஒவ்வொரு பக்கத்திலும் அடியிற் குறிக்கப்பட்டுள்ளன. பாடல்கள் தெளிவாகவும், அழகாகவும் அச்சிடப்பட்டுள்ளன. திருவுந்தியாரை முதல் நூலாகக்கொண்டுள்ள திருக்களிற்றுப்படியார் செய்யுட்களின் அடைவு ஒரு ஒப்புமை அட்டவணையில் (6-ம் பக்கம் பார்க்க) தரப்பட்டுள்ளது. சிவஞானபோதமூலம் இதுவரையில் வெளிவராத புதிய முறையில் ஆங்காங்கு கண்ணழிவுரை, சூர்ணி, வார்த்திகம் முதலியவற்றோடு மிகத் தெளிவாக அச்சிடப்பட்டுள்ளது. பிற்சேர்க்கையாகவுள்ள பல அட்டவணைகள் (59–86-ம் பக்கம் பார்க்க) மிகுந்த பயன் தருவனவாகும்.

சிவஞானசித்தியார், உண்மைவிளக்கம், சிவப் பிரகாசம், நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக் கம், சங்கற்ப நிராகரணம் ஆகிய நூல்களில் பொருட் பாகுபாடுகள் பொருத்தமான தலைப்புக்களில் ஆங் காங்கு தரப்பட்டுள்ளன. துகளறு போதம் என்ற நூல் இப்பதினான்கு சாத்திரங்களுள் ஒன்றெனக் கருது வதற்கு இடமுண்டாகலின் அதன்மூலம் சேர்க்கப் பெற்றுள்ளது. திருவுந்தியார் முதல் திருவருட்பயன் ஈறுகவுள்ள எட்டு நூல்களுக்குப் பல ஏட்டுப்பிரதி களும், ஏனைய ஏழு நூல்களுக்குச் சில பிரதிகளும் ஒப்புநோககப் பயன்பட்டன. இவற்றால் பாடம் திருந்திய இடங்கள் பல எடுத்துக் காட்டுக்களாகச் சிலவற்றைக் கவனிப்பாம். சங்கற்ப நிராகரணத் துள் 8. உ. நிமித்த காரண பரிணாமவாதி நிரா கரணத்தில் 114-வது அடியில் (329-ம் பக்கம் பார்க்க) "தெரித்திடும் அதீதத்து" என்ற பாடம் தரப்பட்டுள்ளது. "சிவன் விசுவாதீதனாயிருக்கையி னாலே" என்ற உரைக்கு இப்பாடமே பொருந்தும், "தெரித்திடும் மதித்த" என்ற பாடம் பொருந்தாது. உண்மை விளக்கத்துள் 44-வது செய்யுளின் மூன்று வது அடியில் (227-ம் பக்கம் பார்க்க) "ஆறாறுக் கப் பாலாம்" என்ற பாடம் தரப்பட்டுள்ளது. "தத்து வாதீதமாகிய" என்ற உரைக்கு இப்பாடமே சிறந் தது. சிவஞான சித்தியார் பரபக்கம் 223-வது பாட்டில் (131-ம் பக்கம் பார்க்க) "இசையும் இரவி இருங்கதிர்கள்" என்ற பாடமே "ஆதித்த கிரணங் கள் தோன்ற" என்ற உரைக்குப் பொருந்துவ தாகும். இவ்வாறே பற்பல இடங்களில் பாடங்கள் செப்பம் செய்யப்பெற்றுள்ளன.

பல நூல்களை வெளியிட்டும் பல அறிஞர் கூட்டங்களைக் கூட்டுவித்தும் சைவசமயத்தை வளர்த்து வரும் திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர ஆதீன இருபத்துநான்காவது மகா சந்நிதானம் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள் இந் நூலைப் பலரும் கற்றுப் பயனடைய வேண்டும் என்னும் பெருங்கருணை கொண்டு இப்பதிப்பு வெளிவரத் திருவுளம் பற்றினார்கள். கார்காத்தவேளாள சைவ பரம்பரைத் தோன்றலும், சென்னைப்பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சி மாணவரும், ஏடுகளைப் பரிசோதிப்பதில் நிரம்பிய பயிற்சி யுடையவருமாகிய சைவத் திருவாளர் மு. அருணைசலம் பிள்ளை எம்.ஏ., அவர்கள் பாடங்களைச் செப்பம் செய்தும் பாடபேதங்களைக் குறித்தும் வேறுபல வழிகளில் உழைத்தும் இப்பதிப்பின் மேன்மைக்காக உழைத்துள்ளதை அறிஞருலகம் பாராட்டக் கடமைப்பட்டுள்ளது.

இப்பதிப்பு சித்தாந்த சைவர்கட்கும் ஏனையோர்கட்கும் பெரும்பயனளித்துச் சிவஞானத்தையும், சித்தாந்த முத்தியையுந் தருவதாக.

இங்ஙனம்,

மயிலாப்பூர்,
5-12-'42.

ம. பாலசுப்பிரமணியன்,
சென்னைச் சைவசித்தாந்த மகா சமாசக் காரியதரிசி.

# Preface.

The Fourteen Siddhantha Shastras are the most authoritative works expounding the Saiva Siddhantha System of philosophy. They belong to the 12th, 13th, and 14th centuries of the Christian Era. The first of them, *Tiruvunthiyar* is a short and cryptic work of Tiruviyalur Uyyavandadeva Nayanar written in 1147 A. D. It is composed in a very attractive metre, which children employ while singing to the butterfly and contains several philosophic maxims in mystic language. The style reminds one of the prince of mystics St. T i r u m o o l a r. The next work, *Tirukalittruppadiyar* is the work of Tirukada-voor Uyyavandadeva Nayanar, written in 1177 A. D. It follows Tiruvunthiyar faithfully, and explains in a fuller measure, the aphorisms of the earlier work. These two works are in a way, the precursors of Meikanda Deva's classical and immortal work.

The most important of the fourteen group is undoubtedly Meikanda Deva's *Sivagnana Bodham*. The Life of Meikanda Deva and the origin of his work are too well known to need repetition. He belonged to the first half of the

13th century A. D. In recent times, a good deal of research has been directed to the question, whether Meikanda Deva is an original author or a mere translator. The older orthodox view seems to be that he found the original in twelve sanskrit sutras of the Raurava Agama, while the modern view holds that there is considerable disparity between the sanskrit sutras and his own sutras and vital difference in many essential aspects. A decision on this question, acceptable to all parties, has yet to be made.

Meikanda Deva stands at the head of the *Santhana Parambarai.* His preceptor, St. Paranjothi is the last link in the Celestial Chain (called the Aghachandanam). Arulnandi Sivacharya, who is Meikanda's father's family preceptor, became the chief disciple of Meikanda Deva. His elaborate treatise, the *Sivagnana Siddhiyar* deals exhaustively with the tenets of other systems of philosophy, refutes the conclusions which they adumbrate, sets out in great detail the doctrines of the Saiva Siddhantha System, and takes care to answer all the criticisms which could possibly be levelled against them. It is thus a very valuable piece of polemical literature. Arulnandhi Sivacharya is also the author of the *Irupa Irupathu* which contains many eulogistic references to his master.

Among the forty-nine disciples of Meikanda Deva was one Manavachakam Kadanthar of Tiruvathikai, whose book called the *Unmai Vilakkam* ranks as the sixth of the series. It is a manual which catalogues the tatwas, deals with the Panchakshara as embodied in the Nataraja idol, and the way to salvation.

Umapathy Sivacharya, one of the traditional-three-thousand-priests of the Chidambaram Temple is a prolific author who accounts for the remaining eight of the series. These eight go by the collective name of *Siddhantha Ashtakam.* Of these *Sivaprakasam* stands foremost, and *Tiruvarul Payan* and *Sankalpa Nirakaranam* come next; *Vinavenba, Pottrippahrodai, Kodikkavi, Nenjuviduthoothu, and Unmainerivilakkam* are the remaining five. These five are small pieces dealing with some special aspects of the system. There is a tradition about the occasion for singing the Kodikkavi. The author gives the saka year for the composition of *Sankalpa Nirakaranam* as 1235 from which its date has been calculated as 1313 A. D.

Of these fourteen shastras, Sivagnana Bodham, Sivagnana Siddhiyar, & Sivaprakasam are the three, mostly studied and referred to by other authors. They form a class by themselves

and are respectively called the Primary, the Secondary, and the Derivative (முதல், வழி, சார்புநூல்கள்), and it is for these three works that we find several commentaries. Of all the commentaries on the Sivagnana Bodham, the best is the Bashyam of Sivagnana Swamigal. An unpublished commentary on the Sivagnana Siddhiyar called the "Gnanabharanavilakkam" by Sri-la-Sri Velliambalavana Munivar of the Dharmapuram Mutt is the most exhaustive treatise based on this work. The best commentary on the Sivaprakasam is that of Sivaprakasa Swamigal of Madura.

Let us now pass on to consider some of the eternal truths which the fourteen shastras teach us. From very ancient times, man has studied the environments around him, postulated the existence of God, listed His actions and attributes, discussed the relationship of the Universe unto himself, and prayed to God to bless him with eternal happiness. All men are not alike; so are their thoughts and conclusions. We therefore find considerable divergence of opinion on several of these fundamental matters. The fourteen shastras divide the Universe into three eternal categories Pati, Pasu and Pasa. They co-exist for all times Of these Pati or God has two aspects, the transcendental and the immanent.

He has eight attributes namely self control, purity, intuition, omniscience, freedom, grace, omnipotence, and happiness. All these are perfect and absolute in Him. He is the Supreme Lord of the Universe and the Supreme Regulator of the destinies of the soul. He is the Supreme Director of the Panchakrityas or the five great cosmic actions (Creative Evolution, Protection, Transformative Extinction, Involution and Blissful Absorption). In all these actions He is indissolubly united to Shakti. He is the Efficient Cause, His Shakti is the Instrumental Cause, and Maya the Material Cause. This theory of causation is based on Sath-Karya-vadha and differs from other theories like the Maya-vadha and the Ekatmavadha.

The soul is as perennial as God Himself. It has five stages of consciousness called the Jagratha, the Swapna. the Sushupti, the Turiya, and the Turiyatheetha. In these stages, it is related to the 96 tatwas in various groups. The soul is called Pasu because it is in immemorial bondage. Deliverance from this bondage is its salvation called Mukti. The bondage is the working of Pasa which is subdivided into Anava, Karma, and Maya. These are the three malas or impurities. Anavamala is the root cause of the soul's misery and is also called the Moola

Mala. It may, in a way, be likened to the instinct of self-assertion found in the human and other species of creation. Maya is the great cosmic illusion and karma is the chain of action and reaction. Though all the three are bonds or bandhas, they differ among themselves in this way that Anava is Pratibandha (the Inimical Bond), Maya is Sambandha (the allied Bond), and Karma is Anubanda (the Appendix Bond). When these bonds fall off, the soul passes through three definite stages viz., Iruvinai-oppu or Samatwa Buddhi, Malaparibhaga and Saktinipadha, and becomes a Jeevanmukta. When the body falls off, the Jeevanmukta attains Sayujya.

There are four well defined processes by which the above results are achieved in easy grades. These processes are known as Charya, Kriya, Yoga, and Gnana. Each of these has four sub-divisions bearing these very names. These sixteen grades, like the steps of a ladder, are discussed in detail and the benefits which the soul derives from them are clearly defined. The company of salved souls, the wills desires and actions of such souls, and the ways in which God bestows His grace on them are all clearly set out. The essence of Panchakshara or the holy Five Letters, the methods of chantation and their effect on the soul and its encasement

are all set out in great detail, in such a way, that it takes one's breath away.

The importance of a spiritual preceptor, the indispensable necessity for his initiation and upadesa, and the methods which he adopts are fully described and none is left in doubt as the futility of unaided self-endeavour.

These and hundreds of other matters are found in the Fourteen Shastras. They represent the cream of Tamilian thought and Tamilian self realisation. They are unique in several respects and go far beyond the limits which other well known systems have reached.

The Dharmapuram Adheenam deserves the grateful thanks of the saivite world for bringing out this bare text edition of the *Fourteen Shastras* and for marking a very low price for the book in these troublous times of paper scarcity. The present head of the Mutt is doing his level best for the propagation of the Saiva-faith in all possible ways. The series of publications which has seen the light of day, since the ascent of His Holiness **Sri-la-sri Shunmuga Desiga Gnanasambanda Paramacharya Swamigal**, on the holy gadi of the Dharmapuram Adheenam Mutt, has served to dispel darkness in the minds

of hundreds of saivites and has flooded them with the light of the Lord. The present publication will rank along with these and occupy a very prominent place.

May the authors of the Fourteen Shastras and the Lord whose grace they abound in, bless all the readers of this book and bestow on them the choicest favours. May peace prevail in every quarter of the Globe.

Om Shanti ! Shanti !! Shanti !!!

Mylapore,
5—12—42.

M. BALASUBRAHMANYA MUDALIAR, B.A.,B.L.,
Advocate & Honorary Secretary of
The Madras Saiva Siddhantha Mahasamajam.

# பொருளடக்கம்

சிவமயம

திருச்சிற்றம்பலம்

## திருவியலூர் - உய்யவந்ததேவ நாயனார்

அருளிச்செய்த

# 1. திரு உந்தியார்

அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்ததென் றுந்தீபற. க

பழக்கந் தவிரப் [1]பழகுவ தன்றி
உழப்புவ தென்பெணே உந்தீபற
ஒருபொரு ளாலேயென் றுந்தீபற. உ

கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர்
பிண்டத்தில் வாராரென் றுந்தீபற
பிறப்பிறப் பில்லையென் றுந்தீபற. ந

[2]இங்ஙனிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அங்ஙனிருந்ததென் றுந்தீபற
அறியும் [3]அறிவதன் றுந்தீபற. ச

ஏகனு மாகி அனேகனு மானவன்
நாதனு மானானென் றுந்தீபற
நம்மையே ஆண்டானென் றுந்தீபற. ரு

நஞ்செயு லற்றிந்த நாமற்ற பின்னாதன்
தன்செயல் தானேயென் றுந்தீபற
தன்னையே [4]தந்தானென் றுந்தீபற. சு

---

[1]பழகுவதன்றியும். [2]எங்ஙன். [3]அறிவதென்று. [4]தந்ததென்று.

உள்ளம் [1]உருகில் உடனுவர் அல்லது
தெள்ள அரியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென் றுந்தீபற. எ

ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று
மீதானத் தே[2]செல உந்தீபற
விமலற் கிடமதென் றுந்தீபற. அ

ஆக்கில்அங் கேயுண்டாய் அல்லதங் கில்லையாய்ப்
பார்க்கிற் [3]பரமதன் றுந்தீபற
[4]பாவனைக் கெய்தாதென் றுந்தீபற. கூ

அஞ்சே அஞ்சாக அறிவே அறிவாகத்
துஞ்சா துணர்ந்திருந் துந்தீபற
துய்ய பொருளிதென் றுந்தீபற. க0

தாக்கியே தாக்காது நின்றதோர் [5]தற்பரம்
நோக்கிற் குழையுமென் றுந்தீபற
[6]நோக்காமல் நோக்கவென் றுந்தீபற. கக

மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியரென் றுந்தீபற
தவத்தில் தலைவரென் றுந்தீபற. கஉ

ஓட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்
தேட்டற் றிடஞ்சிவம் உந்தீபற
தேடும் [7]இடமதன் றுந்தீபற. கந

இடந்த கிழவியைக் கிள்ளி யெழுப்பி
உடந்தை யுடனேநின் றுந்தீபற
உன்னையே கண்டதென் றுந்தீபற. கச

பற்றை அறுப்பதோர் பற்றினைப் பற்றில்அப்
பற்றை அறுப்பரென் றுந்தீபற
[8]பாவிக்க வாராரென் றுந்தீபற. கரு

---

[1]உருகி. [2]செல்க. [3]பரமதென்று. [4]பாவனைக் கெய்தான். [5]தற்பரன். [6]நோக்காமை நோக்குமென்று. [7]இடமதென்று. [8]பாவிக்கில் வாராதென்று.

கச, கரு-ம் பாட்டுக்கள் பிரதிகளில் முன் பின்னுக மாறி யிருக்கின்றன.

உழவா துணர்கின்ற யோகிகள் ஒன்றேடுந்
தழுவாமல் நிற்பரென் றுந்தீபற
[2]தாழ்மணி நாவேபோல் உந்தீபற. கசு

திருச்சிலம் போசை ஒலிவழி யேசென்று
நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற
நேர்பட அங்கேநின் றுந்தீபற. கஎ

மருளுந் தெருளும் மறக்கும் அவன்கண்
அருளை [3]மறவாதே உந்தீபற
அதுவேயிங் குள்ளதென் றுந்தீபற. கஅ

கருதுவ தன்[4]முன் கருத்தழியப் பாயும்
ஒருமகள் கேள்வனென் றுந்தீபற
உன்ன அரியனென் றுந்தீபற. ககூ

இரவு பகலில்லா இன்பவெளி யூடே
விரவி விரவிநின் றுந்தீபற
விரைய விரையநின் றுந்தீபற. உ௦

சொல்லும் பொருள்களுஞ் சொல்லா தனவுமங்(கு)
அல்லனை் ஆனனென் றுந்தீபற
அம்பிகை பாகனென் றுந்தீபற. உக

காற்றினை மாற்றிக் கருத்தைக் [5]கருத்தினுள்
ஆற்றுவ தாற்றலென் றுந்தீபற
அல்லாத தல்லலென் றுந்தீபற. உஉ

கள்ளரோ டில்ல முடையார் கலந்திடில்
வெள்ள வெளியாமென் றுந்தீபற
வீடும் எளிதாமென் றுந்தீபற. உங

எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்கொண் டேநின்றார்
விட்டார் உலகமென் றுந்தீபற
வீடேவீ டாகுமென் றுந்தீபற. உச

---

[1]தழுவாது. [2]தாழ்ந்த மணிநாபபோல். [3]மறவாதென்று. [4]முன்னம். [5]கருத்தினில். [6]ஆற்றுதல். [7]அல்லாத தல்லாதென்று.

சித்தமுந் தீய கரணமுஞ் சித்திலே
ஒத்ததே ஒத்ததென் றுந்தீபற
ஒவ்வாத தொவ்வாதென் றுந்தீபற. உரு

உள்ளும் புறம்பும் [1]நினைப்பறில் உன்னுள்ளே
மெள்ள அமுதாமென் றுந்தீபற
முளையாது பந்தமென் றுந்தீபற. உசு

அவிழ இருக்கும் [2]அறிவுடன் நின்றவர்க்(கு)
அவிழும்இவ் வல்லலென் றுந்தீபற
அன்றி அவிழாதென் றுந்தீபற. உஎ

வித்தினைத் தேடி முளையைக்கை விட்டவர்
பித்தேறி னாகளென றுந்தீபற
[3]பெறுவதங் கென்பெண்ணே யுந்தீபற. உஅ

சொல்லும் இடமன்று சொல்லப் புகுமிடம்
எல்லை சிவனுக்கென் றுந்தீபற
என்றால்நாம் என்செய்கோம் உந்தீபற. உகூ

வீட்டில் இருக்கிலென் நாட்டிலே போகிலென்
கூட்டில்வாள் சாத்தி[4]நின் றுந்தீபற
கூடப் படாததென் றுந்தீபற. ௩௦

சாவிபோம் மற்றைச் சமயங்கள் [5]புக்குநின்(று)
ஆவி [6]யறுதேயென் றுந்தீபற
அவ்வுரை [7]கேளாதே உந்தீபற. ௩க

துரியங் கடந்தஇத் தொண்டர்க்குச் சாக்கிரந்
துரியமாய் நின்றதென் றுந்தீபற
துறந்தார் அவர்களென் றுந்தீபற. ௩உ

பெற்றசிற் றின்பமே [8]பேரின்ப மாய்அங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முளையாது [9]மாயையென் றுந்தீபற. ௩௩

---

[1]நினைப்பொழியினுள்ளே, நினைப்பறின் நின்னுள்ளே, நினைப் பொழியில் உன்னுள்ளே. [2]அறிவுடையார்கட்கு. [3]பெறுவதிங்கு. [4]என்று. [5]புக்கிருந்து. [6]அறுதென்று. [7]கேளாதென்று. [8]பேரின்ப மாம். [9]பந்தம்.

பேரின்ப மான பிரமக் கிழத்தியோ(டு)
ஓரின்பத் துள்ளானென் றுந்தீபற
உன்னையே [1]ஆண்டதென் றுந்தீபற. ௩௪

பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக்
கண்டாரே கண்டாரென் றுந்தீபற
காணாதார் காணாரென் றுந்தீபற. ௩௫

நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடின்
நாலாம் நிலையாமென் றுந்தீபற
நாதற் கிடமதென் றுந்தீபற. ௩௬

சென்ற நெறியெல்லாஞ் செந்நெறி யாம்படி
நின்ற பரிசறிந் துந்தீபற
[2]நீசெயல் [3]செய்யாதே உந்தீபற. ௩௭

பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதென்
அக்கொழு நீயறிந் துந்தீபற
அறிந்தறி யாவண்ணம உந்தீபற. ௩௮

அதுஇது [4]என்னு அனைத்தறி வாகும்
அதுஇது என்றறிந் துந்தீபற
அவிழ்ந்த [5]சடையானென் றுந்தீபற. ௩௯

அவனிவ னன(து) [6]அவனருளா லல்ல(து)
இவனவ னகானென் றுந்தீபற
என்றும இவனேயென் றுந்தீபற. ௪0

முத்தி [7]முதலுக்கே மோகக் கொடிபடர்ந்(து)
அத்தி பழுத்ததென் றுந்தீபற
அப்பழ முண்ணுதே உந்தீபற. ௪௧

அண்ட [8]முதலாம அனைத்தையும் உட்கொண்டு
கொண்டத்தைக் கொள்ளாதே உந்தீபற
[9]குறைவற்ற செல்வமென் றுந்தீபற. ௪௨

---

[1] ஆண்டானென் றுந்தீபற. [2] நீ சில. [3] செல்லாதே. [4] என்னு(து). [5] சடையார். [6] அவனருளல்ல(து). [7] முதற்கொடி. [8] முதலாய். [9] குறைவற நின்றதென்று, குறைவறறு நின்றதென்று.

[1]காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே
மாயக்கள் ளுண்டாரென் றுந்தீபற
வறட்டுப் பசுக்களென் றுந்தீபற. சங

சிந்தையி னுள்ளும்என் சென்னியி னுஞ்சேர
வந்தவர் வாழ்கவென் றுந்தீபற
மடவா ளுடனேயென் றுந்தீபற. சச

வைய முழுதும் மலக்கயங் கண்டிடும்
உய்யவந் தாளுரை உந்தீபற
உண்மை யுணர்ந்தாரென் றுந்தீபற. சரு

## திருவுந்தியாருக்கு நேர் கருத்துள்ள திருக்களிற்றுப்படியார் பாட்டெண்கள்

| உந்தியார் | களிற்றுப்படியார் | உந்தியார் | களிற்றுப்படியார் |
|---|---|---|---|
| க | ச - ரு | உங | சஉ - சங |
| உ | சா - எ | உச | சச - சரு |
| ங | அ | உரு | சசா - ரு0 |
| ச | கூ - க0 | உசா | ருக - ருஉ |
| ரு | கக | உஎ | ருங - ருசா |
| சா | கஉ - கங | உஅ | ருஎ |
| எ | கச - உக | உகூ | ருஅ - சாஉ |
| அ | உஉ | ங0 | சாங - சாச |
| கூ | உங - உச | ஙக | சாரு - சாஅ |
| க0 | உரு | ஙஉ | சாகூ - எரு |
| கக | உசா | ஙங | எசா |
| கஉ | உஎ - உஅ | ஙச | எஎ |
| கங | உகூ | ஙரு | எஅ - எகூ |
| கச | ங0 | ஙசா | அ0 - அக |
| கரு | ஙக | ஙஎ | அஉ - அங |
| கசா | ஙஉ | ஙஅ | அச |
| கஎ | ஙங | ஙகூ | அரு - கூக |
| கஅ | ஙச | ச0 | கூஉ |
| ககூ | ஙரு | சக | கூங - கூச |
| உ0 | ஙசா - ஙஎ | சஉ | கூரு - கூசா |
| உக | ஙஅ - ச0 | சங | கூஎ - கூகூ |
| உஉ | சக | சச | க00 |

[1]காயத்து.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

* திருக்கடவூர் - உய்யவந்ததேவ நாயனார்

அருளிச்செய்த

# 2. திருக்களிற்றுப்படியார்

---

அம்மையப்ப ரேஉலகுக் கம்மையப்பர் என்றறிக
அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர் - அம்மையப்பர்
எல்லா உலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்
அல்லார்போல் [1]நிற்பர் அவர். ௧

தம்மில் தலைப்பட்டார் பாலே தலைப்பட்டுத்
தம்மில் தலைப்படுதல் தாமுணரின் - தம்மில்
நிலைப்படுவர் ஓரிருவர் நீக்கிநிலை [2]யாக்கித்
தலைப்படுவர் தாம்அத் தலை. ௨

என்னறிவு சென்றளவில் யானின்(று) அறிந்தபடி
என்னறிவி லாரறிக என்றொருவன் - சொன்னபடி
சொல்லக்கேள் என்றொருவன் சொன்னான் எனக்கதனைச்
சொல்லக்கேள் யானுனக்(கு)அச் சொல். ௩

அகளமய மாய்நின்ற அம்பலத்தெங் கூத்தன்
சகளமயம் போல்உலகில் தங்கி - நிகளமாம்
ஆணவ மூல மலம்அகல [3]ஆண்டான்காண்
மாணவக என்னுடனாய் வந்து. ௪

ஆகமங்கள் எங்கே அறுசமயம் தானெங்கே
யோகங்கள் எங்கே உணர்வெங்கே - பாகத்(து)
அருள்வடிவுந் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு. ௫

---

[1]நிற்பார். [2]ஆக்கில், ஆகத். [3]ஆண்டனன்காண்.

சாத்திரத்தை [1]ஓதினர்க்குச் சற்குருவின் தன்வசன
மாத்திரத்தே [2]வாய்க்குநலம் [3]வந்துறுமே - ஆர்த்தகடல்
தண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் [4]தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாய்இதனைச் செப்பு. சா

இன்று பசுவின் மலமன்றே இவ்வுலகில்
நின்ற மலமனைத்தும் [5]நீக்குவதிங்(கு) - என்றால்
உருவுடையான் அன்றே உருவழியப் பாயும்
உருவருள வல்லான் [6]உரை.

கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவரே
[7]அண்டத்தின் அப்புறத்த தென்றதே - அண்டத்தின்
அப்புறமும் இப்புறமும் ஆரறிவுஞ் [8]சென்றறியும்
எப்புறமும் கண்டவர்கள் இன்று. அ

அன்றுமுதல் ஆரேனும் ஆளாய் உடனாகிச்
[9]சென்றவர்க்கும் இன்னதெனச் சென்றதிலை - இன்றிதனை
[10]எவ்வா றிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அவ்வா றிருந்த தது. கூ

ஒன்றுங் குறியே குறியாத லால்அதனுக்(கு)
ஒன்றுங் குறியொன் றிலாமையினால் - ஒன்றோ(டு)
உவமிக்க லாவதுவுந் தானில்லை [11]ஓவாத்
தவமிக்கா ரே[12]யிதற்குச் சான்று. கய

ஆற்றால் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை
மாற்றிஅவ் வாற்றான் மறித்தாற்போல் - தோற்றிப்
புலன்களெனப் போதம் [13]புறம்பொழியும் நந்தம்
மலங்களற மாற்றுவிக்கும் வந்து. கக

பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனைஅன் றேவிக் கராங்கொண்ட - பாலன்
மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்
கரணம்போல் அல்லாமை காண். கஉ

---

[1]ஓதவே. [2]வாய்த்தவளம். [3]வந்துறுமோ. [4]தணிந்திடுமே. [5]நீங்குவதெங்கு; நீக்கினதாஙகு. [6]உணர். [7]அண்டத்ததப்புறத்தது. [8]சென்றழியும். [9]சென்றவர்க்குள். [10]இவ்வாறு. [11]ஒவ்வாத். [12]அதற்குச். [13]புறம்பொழியில்.

தூங்கினரைத் [1]தூய சயனத்தே விட்டதற்பின்
தாங்களே சட்ட உறங்குவர்கள் - ஆங்கதுபோல்
ஐயன் அருட்கடைக்கண் ஆண்டதற்பின் அப்பொருளாய்ப்
பைய விளையுமெனப் பார். கங

உள்ள முதலனைத்தும் [2]ஒன்ருய் உருகவரின்
உள்ளம் உருகவந் [3]துன்னுடனும் - தெள்ளி
உணருமவர் தாங்கள் [4]உளராக என்றும்
[5]புணரவர நில்லாப் பொருள். கச

நல்லசிவ தன்மத்தால் நல்லசிவ யோகத்தால்
நல்லசிவ ஞானத்தால் [6]நானழிய - வல்லதனால்
ஆரேனும் அன்புசெயின் அங்கே [7]தலைப்படுங்காண்
ஆரேனுங் காணு அரன். கரு

மெல்வினையே யென்ன [8]வியனுலகில் ஆற்றரிய
வல்வினையே யென்ன வருமிரண்டும் - சொல்லிற்
சிவதன்மம் [9]ஆமவற்றிற் சென்றதிலே [10]செல்வாய்
பவகன்மம் நீங்கும் படி. கசு

ஆதியை [11]அர்ச்சித்தற் கங்கமும் அங்கங்கே
தீதில் திறம்பலவும் [12]செய்வனவும - வேதியனே
நல்வினையாம் [13]என்றே நமக்குமௌளி தானவற்றை
மெல்வினையே என்றதுநாம் வேறு. கஎ

வரங்கள்தரும் செய்ய வயிரவர்க்குத் தங்கள்
கரங்களினல் அன்றுகறி யாக்க - இரங்காதே
கொலவினையே செய்யுங் கொடுவினையே [14]யானவற்றை
வலவினையே என்றதுநாம மற்று. கஅ

[15]பாதக மென்றும் பழியென்றும பாராதே
தாதையை வேதியனைத் தாளிரணடும - சேதிப்பக்

---

[1] தூய்ய. [2]ஒன்ற உருகவரில், ஒன்ற உருகவரும், ஒன்ருய் ஒருவ வரின். [3] துன்னிடனும். [4]உளராகில். [5]புணருவானில்லாப். [6]நானழியும். [7]தலைப்படுவன். [8]வியனுள்ளார்கட்கரிய, வியனுலகுளோர்க் கரிய. [9]ஆகுமிதிற், ஆமதனிற். [10]செல்வார். [11]அர்ச்சித்தாறங்கமும். [12]செப்பினவும். [13]இன்று. [14]யானதனை. [15]பாதகமே யென்றும்.

ககூ, உ0-ம் பாட்டுக்கள் பிரதிகளில் முன் பின்னுக மாறியிருக்கின்றன.

கண்டஈசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
தண்டஈசர் தஞ்செயலால் தான். கக

செய்யில் உகுத்த திருப்படி மாற்றதனை
ஐய இதுஅமுது [1]செய்கென்று - பையவிருந்(து)
ஊட்டி அறுத்தவர்க்கே ஊட்டி அறுத்தவரை
நாட்டியுரை [2]செய்வதென்னோ நாம். உ௦

செய்யும் செயலே செயலாகச் சென்றுதமைப்
பையக் கொடுத்தார் பரங்கெட்டார் - ஐயா
உழவும் [3]தனிசும ஒருமுகமே யானல்
இழவுண்டோ சொல்லாய் [4]இது. உக

ஆதார யோகம் நிராதார யோகமென
மீதானத் தெய்தும் விதியிரண்டே - ஆதாரத்(து)
ஆக்கும் பொருளாலே ஆக்கும பொருளாமொன்(று)
ஆக்காப் பொருளேயொன் றும். உஉ

ஆக்கி ஒரு[5]பொருளை ஆதாரத் தப்பொருளை
நோக்கி அணுவில் அணு[6]நெகிழப - பார்க்கில்
இவனுகை [7]தானொழிந்திட் டேகமாம ஏகத்(து)
அவனுகை ஆதார மாம. உ௩

கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயிற்
[8]கொண்டவனும் அப்பரிசே கூறுபடும் - கொண்ட
இருபொருளும் [9]அன்றியே இன்னதிது [10]என்னு(து)
ஒருபொருளே யாயிருக்கும் உற்று. உச

அஞ்செழுத்து மேஅமமை அப்பர்தமைக் காட்டுதலால்
அஞ்செழுத்தை ஆருகப் [11]பெற்றறிந்தே - அஞ்செழுத்தை
ஓதப்புக் குள்ள மதியுங் கெடில்உமைகோன்
கேதமற [12]வந்தளிக்குங் கேள். உரு

---

[1]செய்கவெனப். [2]செய்வதே. [3]தனுசும், தரிசும். [4]இதற்கு. [5]பொருளா. [6]நிகழப பார்க்கில், நிகழப் பார்க்க. [7]காணொழிந்திட்டு. [8]கொண்டதுவும். [9]இன்றியே. [10]என்ன. [11]பெற்றிருந்தும், பெற்றிருந்தவ். [12]வந்தளிப்பன்.

உரு, உசு-ம் பாட்டுக்கள் பிரதிகளில் முன் பின்னுக மாறியிருக்கின்றன.

ஆக்கப் படாத பொருளாய் அனைத்ினிலும்
தாக்கித்தான் ஒன்றோடும் தாக்காதே - நீக்கியுடன்
நிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாய்
[1]நிற்கை நிராதார மாம். உசு

காண்கின்ற தோர்பொருளைக் காண்கின்ற யோகிகளே
காண்கின்றார் காட்சியறக் கண்ணுதலைக் - காண்கின்றார்
காண்பானுங் காணப் படும்பொருளும் [2]அன்றியே
காண்கையினாற் கண்டனரே காண். உஎ

பேசாமை பெற்றதனிற் பேசாமை கண்டனரைப்
பேசாமை செய்யும் பெருமபெருமான் - பேசாதே
எண்ணொன்றும வண்ணம் இருக்கின்ற யோகிகள்பால்
உள்நின்றும் போகான் உளன். உஅ

ஓட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்
தேட்டற்று நின்ற இடஞ்சிவமாம் - [3]நாட்டுற்று
நாடும் பொருளனைத்தும நாளு விதமாகத்
தேடுமிடம் அன்று சிவம். உகூ

உணராதே யாதும் உறங்காதே [4]உன்னிப்
புணராதே நீபொதுவே நிற்கில் - உணர்வரிய
காலங்கள் செல்லாத [5]காத லுடன்இருத்தி
காலங்கள் மூன்றினையும கண்டு. ௩௦

பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து
[6]பற்றிப் பரிந்திருநது பார்க்கின்ற - [7]பற்றதனைப்
பற்றுவிடில அந்நிலையே தானே பரமாகும
[8]அற்றமிது சொன்னேன் [9]அறி. ௩க

அறிவறிவாய் நிற்கில அறிவுபல வாமென்(று)
அறிவின் அறிவவிழ்த்துக் கொண்டவ் - அறிவினராய்
வாழ்ந்திருப்பார் [10]நீத்தோர்கள் மானுடரின் மாணவகா
தாழ்ந்தமணி நாவேபோல தான். ௩உ

---

[1]நிற்க. [2]இன்றியே. [3]நாட்டற்று. [4]உன்னிற். [5]காலத்துடன். [6]பற்றைப். [7]பற்றதனிற் பறறிவிடில். [8]மற்றம், மற்றும். [9]மதி. [10]நீத்தவர்கள்.

௩௦, ௩க-ம் பாட்டுக்கள் பிரதிகளில் முன் பின்னாக மாறியிருக்கின்றன.

ஓசையெலாம் அற்றுல் ஒலிக்குந் திருச்சிலம்பின்
ஓசை [1]வழியேசென் ெறுத்தொடுங்கின் - [2]ஓசையினின்
அந்தத்தான் அத்தான் அரிவையுடன் அம்பலத்தே
[3]வந்தொத்தான் அத்தான் மகிழ்ந்து. ௩௩

*சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் என்றமையால்
[4]சார்புணர்தல் தானே தியானமுமாம் - சார்பு
கெடவொழுகின் நல்ல சமாதியுமாம் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று. ௩௪

அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாதே
நின்றபடி யே[5]நிற்க முன்னிற்கும் - சென்று
கருதுவதன் முன்னம் கருத்தழியப் பாயும்
ஒருமகள்தன் கேள்வன் உனக்கு. ௩௫

உண்டென்னில் உண்டாகும் இல்லாமை இல்லையெனில்
உண்டாகும் ஆனமையின் ஓரிரண்டாம் - உண்டில்லை
என்னும் [6]இவைதவிர்ந்த இன்பத்தை எய்தும்[7]வகை
உன்னில்அவன் உன்னுடனே யாம். ௩௬

தூல உடம்பாய முப்பத்தோர் தத்துவமும
மூல [8]உடம்பாம் முதல்நான்கும் - மேலைச்
சிவமாம் பரிசினையுந தேர்ந்துணாநதார் சேர்ந்த
பவமாம் [9]பரிசறுப்பார் பார். ௩௭

எத்தனையோ தத்துவங்கள் எவ்வெவர்கோட் பாடுடைய
அத்தனையும் சென்றங்(கு) அளவாதே - சித்தமெனும்
[10]தூ துதனைப் [11]போக்கிப்போய்த் தூக்கற்ற சோதிதனிற்
பாதிதனைக் கும்பிடலாம பார். ௩௮

சாம்[12]பொழுதும் ஏதும் சலமில்லை செத்தாற்போல்
ஆம்பொழுதி லேஅடைய ஆசையறில - [13]சோம்புதற்குச்
சொல்லுந் [14]துணையாகும் சொல்லாத தூய்நெறிக்கட்
செல்லும் துணையாகும் சென்று. ௩௯

[1]வழிச் சென்றங்கொதடுொடுங்கின், வழி யொற்றிச் சென்ெறுத்தொடுங்கில். [2]ஓசையுடன். [3]வந்தததானததான். [4]சார்புணரத், சார்புணர்வு. [5]நிற்கில். [6]அவை. [7]நிலை என்னில் அவனுடனே. [8]உடம்பாய. [9]துரிசறுப்பார. [10]தூ துவனைப. [11]போக்கிற்போய்த். [12]பொழுதில். [13]சோம்பி. [14]துணையாகச்

* குறள் மெய்யுணர்தல் 9.

*வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்
[1]வேண்டின்அஃ தொன்றுமே வேண்டுவது - வேண்டினது
வேண்டாமை வேண்டவரும் என்றமையால் வேண்டிடுக
வேண்டாமை வேண்டுமவன் பால். ௪0

அரண உணர்வுதனில் அவ்வுணர்வை மாற்றில்
கரணமும் காலும்கை கூடும் - புரணமது
கூடாமை யுங்கூடும் கூடுதலுங் கூட்டினுக்கு
வாடாமை யுங்கூடும் வந்து. ௪௧

இன்றிங் கசேதனமாம் இவ்வினைகள் ஓரிரண்டும
சென்று [2]தொடருமவன் சென்றிடத்தே - என்றுந்தான்
[3]தீதுறுவன் ஆனால [4]சிவாபதிதான் கைவிடுமோ
மாதொருகூ றல்லனோ மற்று. ௪௨

அனாதி சிவனுடைமை யால்எவையும் ஆங்கே
அனாதி யெனப்பெற்ற அணுவை - அனாதியே
ஆர்த்த துயரகல அம்பிகையோ(டு) எவ்விடத்தும
காத்தல் அவன்கடனே காண். ௪௩

தமமிற் சிவலிங்கம் கண்டதனைத் தாம்வணங்கித்
தம்மன்பால் மஞ்சனநீர் தாமாட்டித் - தம்மையொரு
[5]பூவாக்கிப் [6]பூவழியா மற்கொடுத்துப் பூசித்தால்
[7]ஓவாமை யன்றே உடல். ௪௪

தன்னைப் பெறுவதன்மேற் பேறில்லைத் தானென்றும்
தன்னைத்தான் பெற்றவன்தான் ஆரென்னில் - தன்னாலே
எல்லாந்தன் னுட்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே
எல்லாமாய் நிற்கு மிவன். ௪௫

துன்பமாம் எல்லாம [8]பரவசனாய்த் தான்துவளில்
இன்பமாம் [9]தன்வசனாய்த் தானிருக்கில் - என்பதனால்
நின்வசனா யேயிருக்கில் [10]நின்னுடனாம் நேரிழையாள்
தன்வசனா யேயிருப்பன் தான். ௪௬

[1]வேண்டும். [2]தொடருமிவன். [3]தீதொருவன். [4]சிவபதி. [5]பூவாகப். [6]பூவழியாதே, பூவொழியாதே. [7]ஓவாதேயாஙகே உளன். [8]பரவசமாய்த். [9]தன்வசமாய்த், தன்வசனாயேயிருக்கில். [10]நின்வசமாம்.

* குறள் - அவாவறுத்தல் 2.

செத்தாரே கெட்டார் கரணங்கள் சேர்ந்ததனோ(டு)
ஒத்தாரே யோக [1]பரராஞர் - எத்தாலும்
ஆராத அக்கரணத் தார்ப்புண்டிங் கல்லாதார்
பேராமற் செலவர்அதன் பின். சஎ

கண்ணும் கருத்தும் கடந்ததொரு பேறேயும்
கண்ணும் கருத்தும் களிகூர - நண்ணி
[2]வடம்அடக்கி நிற்கும் வடவித்தே போல
உடனடக்கி [3]நிற்பர்காண் உற்று. சஅ

வானகமும் மண்ணகமு மாய்நிறைந்த வான்பொருளை
ஊனகத்தே உன்னுமதென் [4]என்றனையேல் - ஏனகத்து
வாதனையை மாற்றும் [5]வகையதுவே மண்[6]முதலாம்
ஆதனமே அன்றோ அதற்கு. சக

கல்லில் கமரில் கதிர்வாளில் சாணையினில்
வல்லுப் [7]பலகையினில் வாதனையைச் - [8]சொல்லும்
அகமார்க்கத் தாலவர்கள் [9]மாற்றினர்காண் ஐயா
சகமார்க்கத் தாலன்றே தான். ருo

உள்ளும் புறம்பும் நினைப்பொழியில உன்னிடையே
வள்ளல் எழுந்தருளும் மாதினொடும் - தெள்ளி
அறிந்தொழிவா யன்றியே அன்புடையை [10]யாயின்
செறிந்தொழிவாய் ஏதேனுஞ் செய். ருக

*கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யென்றமையாற்
கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக் - கூண்ணப்பர்
[11]தாமறிதல் காளத்தி யாரறிதல் அல்லதுமற்(று)
[12]யாமறியும் அன்பன் றது. ருஉ

அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை
அவிழந்த மனத்தால் அவிழ்க்க - அவிழந்தசடை
வேந்தனார்க் கின்னமுத மாயிற்றே மெய்யன்பிற்
சேந்தனார் செய்த செயல். ருங

---

[1]பரரானவர்கள். [2]வடவடக்கி. [3]நிற்பர்கள். [4]என்றமையால். [5]வகையது காண். [6]முதலா. [7]பலகைதனில். [8]சொல்லில். [9]மாற்றினர்கள், மாற்றினர். [10]ஆகிச். [11]தாமறிவர். [12]ஆரறியும்.

* திருவாசகம் - திருக்கோதகும்பி 4.

சுரந்த திருமுலைக்கே துய்ய[1]சிவ ஞானம்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச் - சுரந்த
தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையாள் அன்பிருந்த வாறு. ௫௪

அன்பேயென் அன்பேயென் றன்பால் அழுதரற்றி
அன்பேஅன் பாக அறிவழியும் - அன்பன்றித்
தீர்த்தந் தியானஞ் சிவார்ச்சனைகள் [2]செய்யுமவை
சாற்றும் பழமன்றே தான். ௫௫

[3]எலலா அறிவுகளின் தாற்பரியம் என்னறிவு
செல்லு மிடத்தளவும் சென்றறிந்தேன் - வல்லபடி
விர்த்தனையை மாற்றும் [4]வகையிதுவே மற்றவற்றுள்
ஏதமறக் கண்ட [5]விதம். ௫௬

வித்தும்அதன் அங்குரமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானம்
வித்தும்அதன் அங்குரமும் மெய்யுணரில் - வித்ததனிற்
காணாமை யால்அதனைக் கைவிடுவர் கண்டவர்கள்
பேணாமை யால்அற்றார் பேறு. ௫௭

ஒன்றன்(று) இரண்டன்(று) உளதன்(று) இலதன்று
நன்றன்று தீதன்று [6]நானன்று - நின்ற
நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று
தலையன்(று) அடியன்று தான். ௫௮

செய்யாச் செயலைஅவன் [7]செய்யாமை கண்டுதனைச்
செய்யாச் [8]செயலிற் செலுத்தினால் - எய்யாதே
மாணவக அப்பொழுதே வாஞ்சைக் கொடிவளர்க்கும்
ஆணவமும் [9]அற்ற தறி. ௫௯

ஏதேனும காலமுமாம் ஏதேனும் தேசமுமாம்
ஏதேனும் திக்கா சனமுமாம - ஏதேனும்
[10]செய்தா லொருவனுமாம் செய்யாச் செயலதனைச்
[11]செய்யாமை செய்யும் பொழுது. ௬0

---

[1]திருஞானம். [2]செய்யுமிவை, செய்வதெல்லாம். [3]எல்லார். [4]வகையதுவே, வகையதுகாண். [5]இடம், (அ) இது. [6]நானென்று. [7]செய்யாமற் செய்ததனைச். [8]செயலைச. [9]அற்றாலறி, இத்தாலறி, அறறானறிவு. [10]செய்வா னொருவனுமாம். [11]செய்யாமற்.

செய்தற் கரிய செயல்பலவுஞ் செய்து[1]சிலர்
எய்தற் கரியதனை [2]எய்திஞர் - ஐயோநாம்
செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு. கூகூ

இப்பொருள்கள் யாதேனும [3]ஏதெனினும் ஒன்றுசெய்தல்
எப்பொருளும் செய்யாதொழிந்திருத்தல்-மெய்ப்பொருளைக்
கண்டிருத்தல் செய்யாதே கண்ட மனிதரெலாம்
உண்டிருப்ப தென்னே உரை. கூஉ

வீட்டிலே சென்று [4]வினையொழித்து [5]நின்றிடிலென்
நாட்டிலே நல்வினைகள் [6]செய்திடிலென் - கூட்டில்வாள்
சாத்தியே நின்றிலையேல் தக்கனூர் வேள்விசெய்த
மாத்திரமே யாங்கண்டாய் வந்து. கூங

சிவன்முதலே அன்றி முதலில்லை என்றும்
சிவனுடைய தென்னறிவ தென்றும் - சிவனவன(து)
என்செயல தாகின்ற தென்றும் [7]இவையிற்றைத்
தன்செயலாக் கொள்ளாமை தான். கூச

இன்(று)இச் சமயத்தின் அல்லதுமற் றேழையுடன்
ஒன்றுசொலி மன்றத்து நின்றவரார் - இன்றிங்கே
அங்கம் உயிர்பெறவே பாடும [8]அடியவரார்
எங்குமிலை கண்டாய் இது. கூரு

ஆதனமும் ஆதனியு மாய்[9]நிறைந்து நின்றவனைச்
சேதனனைக் கொண்டே தெளிவுற்றுச் - சேதனனைச்
சேதனனி லேசெலுத்திச் சிற்பரத்த ராய்இருப்பர்
ஏதமறக் கண்டவர்கள் இன்று. கூசு

விரிந்தும் குவிந்தும் விழுங்குவர்கள் மீண்டும்
தெரிந்தும் [10]தெரியாதே நிற்பர் - தெரிந்தும்
தெரியாது நிற்கின்ற சேயிழைபால் என்றும
பிரியாது [11]நின்றவனைப் பெற்று. கூஎ

---

[1]பலா. [2]எய்தினர்கள். [3]ஏதேனும். [4]வினையொழிந்து. [5]நின்றிடினும், நின்றாலும். [6]செய்திடினும், செயதாலும். [7]சிவனுரைத். [8]அடியவர்கள். [9]அன்றி. [10]தெரியாது. [11]நிறபவனைப்.

கூசு, கூஎ-ம் பாட்டுக்கள் பிரதிகளில் முன் பின்னாக மாறி யிருக்கின்றன.

தாமடங்க இந்தத் தலமடங்கும் தாபதர்கள்
தாமுணரில் இந்தத் தலமுணரும் - தா[1]முனியில்
பூமடந்தை தங்காள் புகழ்மடந்தை போயகலும்
நாமடந்தை நில்லாள் நயந்து. ௬அ

துரியம் கடந்தசுடர்த் தோகையுடன் என்றும்
பிரியாது நிற்கின்ற பெம்மான் - துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யும் தன்மைகளும்
[2]ஆக்கியிடும் அன்பர்க் கவன். ௬௯

ஓடம் சிவிகை உலவாக் கிழியடைக்கப்
பாடல் பனைதாளம் பாலைநெய்தல் - [3]ஏடெதிர்வெப்(பு)
என்புக் குயிர்கொடுத்தல் ஈங்கிவை[4]தாம் ஓங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல். ௭௦

கொல்கரியின் நீற்றறையின் நஞ்சிற் கொலை[5]தவிர்த்தல்
கல்லே [6]மிதப்பாய்க் கடல்நீந்தல் - [7]நல்ல
மருவார் மறைக்காட்டில் [8]வாசல்திறப் பித்தல்
[9]திருவாமூ ராளி செயல். ௭௧

மோகம் அறுத்திடின்நாம் முத்தி கொடுப்பதென
ஆகமங்கள் சொன்ன அவர்தம்மைத் - [10]தோகையர்பால்
தூதாகப் போகவிடும் வன்றொண்டன் [11]தொண்டுதனை
ஏதாகச் சொல்வே னியான். ௭௨

[12]பாய்பரியோன் தந்த பரமானந் தப்[13]பயனைத்
தூயதிரு வாய்மலரால் சொற்செய்து - மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தேன். ௭௩

அம்மையிலும் இம்மையிலும் அச்சந் தவிர்த்தடியார்
எம்மையுமாய் எங்கும் இயங்குதலான் - மெய்ம்மைச்
சிவயோக மேயோகம் அல்லாத யோகம்
அவயோகம் என்றே அறி. ௭௪

---

[1]முனியப். [2]ஆக்குவிப்பன், ஆக்கிடுவன். [3]ஏடெரி. [4]காண். [5]தவிர்தல். [6]மிதப்பக். [7]சொல்லும். [8]வாய்தல். [9]திருவாகீசன்றன், திருவாமூராதி. [10]தோகைபால். [11]தொண்டதனை, தொண்டிதனை, தொண்டுகளை. [12]பாய்பரியொன் றந்தப். [13]பரனைத்.

மன்னன்[1]அருள் எவ்வண்ணம் மானுடர்பால் மாணவக
அன்ன [2]வகையே அரனருளும் - [3]என்னில்
அடியவரே எல்லாரும் ஆங்கவர்தாம் ஒப்பில்
அடியவரே எல்லாம் அறி. ௭௫

உடம்புடைய யோகிகள்[4]தாம் உற்றசிற் றின்பம்
அடங்கத்தம [5]பேரின்பத் தாக்கில் - தொடங்கி
முளைப்பதுமொன் றில்லை [6]முடிவதுமொன் றில்லை
இளைப்பதுமொன் றில்லை இவர். ௭௬

பேரின்ப மான பிரமக் கிழத்தியுடன்
ஓரின்பத் துள்ளானை உள்ளபடி - பேரின்பம்
கண்டவரே கண்டார் [7]கடலுயிர்த்த இன்னமுதம்
உண்டவரே உண்டார் சுவை. ௭௭

நங்கையினான் நாமனைத்தும் செய்தாற்போல் நாடனைத்தும்
நங்கையினாற் செய்தளிக்கும் நாயகனும் - நங்கையினும்
நம்பியாய்த் தான்நடுவே [8]நாட்டப் பெறுமிதுகாண்
எம்பெருமா னார்[9]தம் இயல்பு. ௭௮

[10]பொன்னிறம் கட்டியினும் பூணினும் நின்றாற்போல்
[11]அந்நிறம் அண்ணலும் அம்பிகையும் - செந்நிறத்தள்
எந்நிறத்த [12]ளாயிருப்பள் எங்கள் [13]சிவாபதியும்
அந்நிறத்த னாயிருப்பன் ஆங்கு. ௭௯

தாரத்தோ டொன்றாவர் தாரத்தோர் [14]கூறாவர்
தாரத்தோ டெங்குந் தலைநிற்பர் - தாரத்தின்
நாதாந்தத் தேயிருப்பர் [15]நாற்றானத் தேயிருப்பர்
வேதாந்தத் தேயிருப்பர் வேறு. ௮௦

ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரங்கள் ஒன்றாக
நின்றுரைத்து நிச்சயிக்க [16]மாட்டாவால் - இன்றுரைக்க
என்னால் இயன்றிடுமோ என்போல்வார் ஏதேனும்
சொன்னால்தான் ஏறுமோ சொல். ௮௧

---

[1]முறை. [2]வகைய(து). [3]உன்னில். [4]பால். [5]பேரின்பத்தாக்கத், பேரின்பமாக்கில். [6]முடிப்பதும். [7]கடலீன்ற. [8]நாட்டம். [9]செயல், தம் இயல். [10]பொன்னினிறம். [11]அந்நிற வண்ணனும், அந்நிறமா மண்ணலும், அந்நிறமா மவ்வண்ணம். [12]ளாயிடினும், ராயிடினும். [13]சிவபதியும். [14]கூறுறுவர். [15]நற்றானத்தே. [16]மாட்டாத.

[1]யாதேனும் [2]காரணத்தால் எவ்வுலகில் எத்திறமும்
மாதேயும் பாகன் இலச்சினையே - ஆதலினால்
பேதமே செய்வாய் அபேதமே செய்திடுவாய்
பேதாபே தஞ்செய்வாய் பின். அ௨

நின்றபடி நின்றவர்கட் கன்றி நிறந்[3]தெரியா
[4]மன்றினுள்நின் றாடல் மகிழ்ந்தானும் - சென்றுடனே
எண்ணுறும்ஐம் [5]பூதமுதல எட்டுருவாய் நின்றானும்
பெண்ணுறநின் றாடும் பிரான். அ௩

சிவமே சிவமாக யான்நினைந்தாற் போலச்
சிவமாகி யே[6]யிருத்த லன்றிச் - சிவமென்(று)
உணர்வாரும் [7]அங்கே உணர்வழியச் சென்று
புணர்வாரும் உண்டோ புவி. அ௪

அது[8]இது என்றும் [9]அவன்நானே என்றும்
அதுநீயே [10]யாகின்றாய் என்றும் - அதுவானேன்
[11]என்றுந் தலைமயுணர்ந்தார் எல்லாம் இரண்டாக
ஒன்றாகக் கொள்ளுவரோ உற்று. அ௫

ஈறாகி [12]அங்கே முதலொன்றாய் ஈங்கிரண்டாய்
மாறாத [13]எண்வகையாய் [14]மற்றிவற்றின் - வேறாய்
உடனாய் இருக்கும உருவுடைமை என்றுங்
கடனா யிருக்கின்றான் காண். அ௬

உன்னுதரத் தே[15]கிடந்த கீடம் உறுவதெல்லாம்
உன்னுடைய [16]தென்னாநீ உற்றனையோ - மன்னுயிர்கள்
அவ்வகையே காண்இங் கழிவதுவும் [17]ஆவதுவும்
[18]செவ்வகையே நின்றசிவன் பால். அ௭

அவனே அவனி[19]முத லாகிநின் றானும்
அவனே [20]அறிவாய்நின் றானும் - அவனேகாண்

---

[1]ஏதேனும். [2]காலததால். [3]தெரியான். [4]மன்றினில், மன்றில். [5]பூதமுடன். [6]இருப்பது. [7]ஆஙகே. [8]இதுவே. [9]அது நானே. [10]ஆகின்றாய். [11]என்று. [12]அங்கமுதலொன்றாய். [13]எண்வகையால். [14]மறறவறறில், மற்றவற்றுள். [15]பிறந்த. [16]தெனனாய். [17]அதுவும். [18]செய்வகையே. [19]முதலாயி னானும், முத லாயினா னேயும். [20]அறிவாகினானே, அறிவானா னேயும், அறிவாயி னானும்.

ஆணாகிப் பெண்ணாய் அலியாகி நின்றானும்
[1]காணாமை நின்றானுங் கண்டு. அஅ

இன்றுதான் நீயென்னைக் [2]கண்டிருந்துங் கண்டாயோ
[3]அன்றித்தான் நானுன்னைக் கண்டேனோ - என்றால்
அருமாயை ஈன்றவள்தன் பங்கனையார் காண்பார்
பெருமாயைச் சூழல் பிழைத்து. அசு

கடல்[4]அலைத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றுங்
கடலளக்க [5]வாராதாற் போலப் - படியில்
அருத்தி[6]செய்த அன்பரைவந் தாண்டதுவும் எல்லாம்
கருத்துக்குச் சேயனாய்க் காண். சுO

*சிவனெனவே தேறினன்யான் என்றமையால் [7]இன்றும
சிவன்அவனி வந்தபடி செப்பில் - அவனிதனில்
உப்பெனவே கூர்மை உருச்செய்யக் [8]கண்டமையால்
அப்படியே கண்டாய் [9]அவன். சுக

அவனிவனாய் நின்ற(து) அவனருளால் அல்ல(து)
எவனவனாய் நிற்கின்ற தேழாய் - அவனிதனில்
தோன்றுமரப் புல்லூரி தொல்லுலகில அம்மரமாய்
ஈன்றிடுமோ சொல்லாய் இது. சுஉ

முத்தி [10]முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்(து)
அத்தி பழுத்த தருளென்னுங் - கத்தியினால்
மோகக் கொடியறுக்க முத்திப் பழம்பழுக்கும்
ஏகக் கொடியெழுங்காண் இன்று. சுங

அகளத்தில் ஆனந்தத் தானந்தி யாயே
சகளத்தில் தையலுடன் [11]தோன்றி - நிகளத்தைப்
போக்குவதுஞ் செய்தான்தன் பொன்னடிஎன் [12]புன்தலைமேல
ஆக்குவதும் செய்தான் அவன். சுச

---

[1]காணாமல். [2]கண்டிருந்தே. [3]அன்றுதான் நானுன்னைக், அன்றிநான் தானுன்னைக். [4]அலைக்கே. [5]ஒண்ணாதாற். [6]செய்யும். [7]இன்று. [8]கண்டனையால், கண்டனையே. [9]அது. [10]மரத்திலே. [11]தங்கி. [12]புன்தலையில்.

* திருவாசகம் - திருவண்டப்பகுதி, அடி சுஉ.

குற்றமறுத் தென்னையாட் [1]கொண்டருளித் [2]தொண்டனேன்
உற்ற தியானத் [3]துடனுறைவன் - [4]முற்றவரின்
மாட்சியுமாய் [5]நிற்பன்யான் மற்றொன்றைக் கண்டிடின்அக்
காட்சியுமாய் [6]நிற்பன் கலந்து. கரு

ஆளுடையான் [7]என்தரமும் ஆளுடையா னேஅறியும்
தாளுடையான் தொண்டர் தலைக்காவல் - நாளும்
[8]திருவிசலூர் ஆளுஞ் சிவயோகி [9]இன்றென்
வருவினையை [10]மாற்றினன் வந்து. கசு

தூலத் தடுத்த பளிங்கின் துளக்கமெனத்
தூலத்தே [11]நின்று துளங்காமல் - காலத்தால்
தாளைத்தந் தென்பிறவித் தாளை [12]அறவிழித்தார்க்(கு)
[13]ஆளன்றி யென்மா றதற்கு. கஎ

இக்கணமே முத்தியினை எய்திடினும் [14]யான்நினைந்த
அக்கணமே ஆனந்தந் தந்திடினும் - நற்கணத்தார்
[15]நாயகர்க்கும் நாயகிக்கும் [16]நந்திக்கும் [17]யானடிமை
[18]ஆயிருத்த லன்றியிலேன் யான். கஅ

என்னை உடையவன்வந் தென்[19]னுடனாய் என்னளவில்
என்னையுந்தன் ஆளாகக் கொள்ளுதலால் - என்னை
அறியப்பெற் றேன்[20]அறிந்த அன்பருக்கே ஆளாய்ச்
செறியப்பெற் றேன்[21]குழுவிற் சென்று. கசு

சிந்தையிலும் என்றன் சிரத்தினிலும் சேரும்[22]வண்ணம்
வந்தவனை [23]மண்ணிடைநாம் [24]வாராமல் - தந்தவனை

---

[1]கொண்டருளத். [2]தொண்டனேற்(கு). [3] துடனுறைவர். [4]முற்ற வரு. [5]நிற்பர். [6]நிற்பார். [7]எந்தரமும், என்திறமும். [8]திருவியலூர். [9]என்றென். [10]மாற்றுவித்தான். [11]நின்றதுள வாகாதே. [12]அறவிழித் தாற்(கு). [13]ஆளன்றே கைம்மா றதற்கு. [14]தான். [15]நாயகற்கும். [16]நானடிமை எப்பொழுதும். [17]யாமடிமை. [18]ஆயிருத்த லன்றியி லோம் யாம், ஆயிருப்ப தன்றியிலோம் யாம். [19]னுடனே என்னள வில், அளவில் உன்னுடனாய். [20]இருந்த. [21]குழுமிச். [22]வகை. [23]மண் ணிடையும். [24]வாராமை.

மாதினுடன் எத்திறமும் வாழ்ந்திருக்க என்பதலால்
ஏதுசொலி [1]வாழ்த்துவேன் யான். கூ00

1. ஆதார மாகி அருளோடு நிற்கின்ற
சூதான இன்பச் சுகவடிவை - ஓதாமல்
உள்ளவர்கள் கூடி உணர்வொழிய நிற்பதலால்
தெள்ளவா ராதே சிவம்.

2. பொருளும் மனையும் அறமறநது போக மறந்து புலன்மறந்து
கருவி கரண மவைமறந்து கால மறந்து கலைமறந்து
தரும மறந்து தவமறந்து தம்மை மறந்து தற்பரத்தோ(டு)
உருகி உருகி ஒருநீர்மை யாயே விட்டார உய்யவந்தார்.

[இவ்விரு பாடல்களும் பிற்காலத் தான்றோர் வாக்கு.]



[1]வாழ்த்துவேன் இன்று, வாழத்துவோம் யாம்.

உ

சிவமயம

திருச்சிற்றம்பலம்

# சிவஞானபோதச் சிறப்புப் பாயிரம்

## நேரிசை யாசிரியப்பா

மலர்தலை உலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் இருள்தீர்ந்து
5 அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர்சிவ ஞான போதம் உரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
10 பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

---

இதை இயற்றியவர் பெயர் தெரியவில்லை. "நூல் செய்தான் பாயிரஞ் செயற்பாலனல்லன்...இந்தப் பாயிரஞ்செய்வார் யாவரெனில், அவர் மாணுக்கராகிய இதன்வழி சிவஞான சித்தி என்னும் நூலைச் செய்தாரும் நாற்பத்தொன்பது பெயரிற் சண்டைத் தலைவ நாயனுருமாகிய அருணந்தி தேவநம்பிரான" என்பது பாண்டிப் பெருமாள் விருத்தியுரை.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

**மெய்கண்டதேவ நாயனார்**

அருளிச்செய்த

# 3. சிவஞானபோதம்



## மங்கல வாழ்த்து

கல்லால் நிழன்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே.

## அவையடக்கம்

தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை உடைமை எமையிகழார் - தம்மை
உணரார் உணரார் உடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

# I பொதுவதிகாரம்

## க. பிரமாணவியல்

### முதற் சூத்திரம் (பதியுண்மை)

அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையில்[1]
*தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்[2]
அந்தம் ஆதி என்மனார் புலவர்.[3]

(கருத்துரை) என்பது சூத்திரம் என்னுதலிற்றோவெனின், சங்காரகாரணனாயுள்ள †முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துதல் நுதலிற்று. (வார்த்திகம் 1.)

இதன்பொழிப்பு ‡உரைத்துக்கொள்க. (வா. 2)

[இது நூலாசிரியர் தாமே சூத்திரங்களைக் கண்ணழித்துக் கடாவிடைகளாலுரைக்கும் வார்த்திகமாய பொழிப்புரை மாத்திரையே முன்னர்க்கூறி, பிண்டமாகக் கொண்டுரைப்பதாய பொழிப்புரை, இதுபற்றி உணர்ந்துகோடல் எளிதாகலின், உரைமுகத்து மாணக்கர்க்கு அறிவுறுத்தி, ஏனைச் சூத்திரங்களினும் உய்த்துக்கொண்டு உணர்தற்பொருட்டு முதற்கண் வைத்து, ஆசிரியர் ஆணைதந்த வார்த்திகப் பொழிப்பாகிய உரைவகை. வா = வார்த்திகம்.]

1. சூர்ணி 1:—சகம் பிறப்பு இருப்பு இறப்பு ஆகிய முத்தொழிலையுடையது.

1. சூத்திரக் கண்ணழிவுரை 1:—அவன் அவள் அது எனும அவை மூவினைமையின்.

### 1. முதல் அதிகரணம்

மேற்கோள்:—ஈண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து என்றது. (வா. 3-a)

---

* தோன்றிய. †முதலே, முதலை. ‡ விரித்துரைத்து.

**ஏது** :—தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின் (வா. 3-b)

**உதாரணம் :**

1. பூதாதி ஈறும் முதலும் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையின் - ஓதாரோ
ஒன்றொன்றிற் றோன்றி உளதாய் இறக்கண்டும்
அன்றென்றும் உண்டென்ன ஆய்ந்து. க

2. **சூர்ணி 2** :—அது அரனாலேயுடையது.

2. ***சூ. கண் 2**:—தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்.

## 2. இரண்டாம் அதிகரணம்

இனி இல்லதற்குத் தோற்றமின்மையின் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் ஒடுங்கின †சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை யென்றது. (வா. 4)

[இங்ஙனஞ் சொற்பல்காமைப் பொருட்டு மேற்கோள் ஏதுக்களைப் புணர்த்திக் கூறினாரேனும் பொருளியைபிற்கேற்ப இதனை மூன்று அதிகரணமாக வைத்துரைப்பது ஆசிரியர் கருத்து எனக்கொண்டு உரையாசிரியர் இவ்வார்த்திகத்தை அடியிற் காட்டியவாறு மூன்றாக வகுத்து உரை செய்திருக்கின்றனர்.]

**மேற்கோள்** :—இனி உலகமுள்ளது என்றது.

**ஏது** :—இல்லதறகுத் தோற்றமின்மையின். (வா. 4-a)

**மேற்கோள்** :— இனி உலகஞ் செய்வோனையுடைதது என்றது.

**ஏது** :— உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின். (வா. 4-b)

**மேற்கோள்** :—இனி ஒடுங்கின சங்காரத்தி னல்லது உற்பத்தியில்லை யென்றது.

**ஏது** :—ஆண்டு ஒடுங்குதலின். (வா. 4-c)

---

* சூ = சூத்திரம். கண் = கண்ணழிவுரை.

† சங்காரத்தின் வழியல்லது.

*உதாரணம் :*

2. இலயித்த தன்னில்இல யித்ததாம லத்தால்
இலயித்த வாறுளதா வேண்டும் - உ-a

- இலயித்த
தத்திதியில் என்னின் அழியா தவையழிவ
தத்திதியும் ஆதியுமாம் அங்கு. உ-b

3. வித்துண்டா மூல முளைத்தவா *தாரகமாம்
அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால் - வித்தகமாம்
வேட்டுவனும் †அப்புழுப்போல் ‡வேண்டுருவைத் தான் [கொடுத்துக்
§கூட்டானே மண்போற் குளிர்ந்து.

4. நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தில்
தாக்காது ¶நின்றுளத்திற் கண்டிறைவன் - ஆக்காதே
கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
கண்டவனில் இற்றின்றாங் கட்டு. ச

3. சூர்ணி 3 :—மற்றிருவரும் முத்தொழிற் படுவர்கள்.

3. சூ. கண் :—அந்தம் ஆதி.

## 3. மூன்றும் அதிகரணம்

**மேற்கோள் :—** இனிச சங்காரமே முதலென்றது. (வா. 5 - a)

**ஏது :—**சுட்டுணர்வாகிய பிரபஞ்சஞ் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்தரமின்றி நிற்றலான். (வா. 5-b)

*உதாரணம் :*

5. ஒன்றலா வொன்றால் உளதாகி **நின்றவா(று)
ஒன்றலா ††வொன்றிலவை ஈறுதல் - ஒன்றலா

---

* தாரகமாய். † இப்புழுப்போல். ‡ வேண்டுருவர். § கூட்டானே, கூட்டரனே. ¶ கண்டுளத்தில். ** நின்றவா. †† ஒன்றிவையில்.

ஈறே முதலதனின் *ஈறலா வொன்றுபல
வாறே தொழும்பாகும் †அங்கு. ரு

முதற்சூத்திரம் :—சூர்ணி - 3, சூத்திரக் கண்ணழிவுரை - 3, சூத்திர மேற்கோள், ஏது, அதிகரணம் - 3, வார்த்திகப் பொழிப்பு-5, சூத்திர உதாரண வெண்பா - 5.

## இரண்டாஞ் சூத்திரம்

(பாச உண்மை - பதியின் பொது இலக்கணம்)

அவையே தானே யாய்[1] இரு வினையில்[2]
போக்கு வரவு புரிய[3] ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.[4]

(க - ரை) எ - து சூ - ம் எ - ன், புனருற்பவம் வருமாறு உணர்த்துதனுதலிற்று. (வா - 6)

4. சூர்ணி 1 :—அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்.

4. சூ. கண் 1 :—அவையே தானேயாய்.

### 4. முதல் அதிகரணம்

மேற்கோள் :—ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் ருனேயாய் நிற்கும் என்றது. (வா. 7-a)

ஏது :—அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில் ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவிதமென்ற சொல்லே அன்னிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு. (வா. 7-b)

உதாரணம் :

6. கட்டு முறுப்பும் கரணமும் கொண்டுள்ளம்
இட்டதொரு பேரழைக்க ‡என்னென்ருங்(கு) - ஒட்டி
அவனுளமா கில்லான் உளமவனு மாட்டா(து)
அவனுளமா §யல்லனுமாம் அங்கு. க

* ஈறிலா ஒன்றுபல, ஈறில்லா தொன்றுபல. † அன்று.
‡ ஏனென்ருங்(கு). § யல்லனும், யல்லனுமாய்.

7. ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்ற நீபாசத் தோடுளைகாண் - *ஒன்றின்ருல்
அக்கரங்க ளின்ரும் அகர உயிரின்றேல்
இக்கிரமத் தென்னும் இருக்கு. உ

8. பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்
எண்ணுஞ் சுவையும்போல் †எங்குமாம்-அண்ணல்தாள்
அத்துவித மாதல் அருமறைக ளொன்றென்று(து)
அத்துவிதம் என்றறையும் ‡ஆங்கு. ௩

9. அரக்கொடு சேர்த்தி அணைத்தஅக் கற்போல்
உருக்கி உடங்கியைந்து நின்று - பிரிப்பின்றித்
தானே அலகாந் தமியேன் உளம்புகுதல்
யானே உலகென்பன் இன்று. ச

5. சூர்ணி 2 :—உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன்.

5. சூ. கண் 2 :—ஆணையின் இருவினையின்.

## 5. இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்** :—இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வனுணையின் வரும என்றது. (வா. 8-a)

**ஏது** :—ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனதாக்கினையாகலான். (வா. 8-b)

**உதாரணம்** :

10. உள்ளதே §தோற்ற உயிரணையும் அவ்வுடலின்
உள்ளதா முற்செய்வினை உள்ளடைவே - வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளக்குஞ் செய்யேபோற்
செய்வன் ¶செயலணையா சென்று. ரு

11. ||அவவினையைச் செய்வதனில் அவ்வினைஞர் தாஞ்சென்றங்
கவ்வினையைக் காந்த பசாசம்போல் - அவ்வினையைப்

---

*ஒன்றின்றேல், ஒன்றின்ருள். † எங்குமாய். ‡ அங்கு. § தோற்றம். ¶ செயலணையான். || அவ்வினையிற்.

பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்
ஆர்தாம் *அறிந்தணைப்பார் ஆங்கு. ௬

12. நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி
மலகனமம அனறுளவாம் †வள்ளலாற் பொன்வாள்
அலர்சோகஞ் ‡செய்கமலத் தாம். ௭

6. சூர்ணி 3 :—உயிர்கள் அசசுமாறியே பிறக்கும்.

6. சூ. கண் 3 :—போக்கு வரவு புரிய.

## 6. மூன்றும் அதிகரணம்

மேற்கோள் :—இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வருமென்றது. (வா. 9-a)

ஏது :—தோற்றமும் ஈறும் உள்ளதற் கல்லது உளதாத லின்மையான். (வா. 9-b)

உதாரணம் :

13. கண்ட நனவைக் கனவுணர்விற் றுன்மறந்து
விண்படார்ந்தத் தூடு வினையினாற்-கண்செவிகெட்(டு)
உள்ளதே தோற்ற உளமணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற் றுன். ௮

14. அரவுதன் §தோலுரிவும் அக்கனவும் வேறு
பர்காயம் போய்வருமப் பண்பும் - பரவிற்
குடாகாய ஆகாயக் கூத்தாட்டாம் என்ப(து)
அடாதுள்ளம் போமா றது. ௯

7. சூர்ணி 4 :—அரன் சர்வ வியாபகன் (ஆதலின் தனது ஆணையின் நீக்கமின்றி நிற்பன்).

7. சூ. கண் 4 :—ஆணையின் நீக்கம் இன்றி நிற்கும்.

## 7. நான்காம் அதிகரணம்

மேற்கோள் :—இனி நீக்கமின்றி நிற்குமன்றே யென்றது. (வா. 10-a)

---

*அறிந்தணைப்பர். †வள்ளலார். ‡செய்கை. §தோலுரியும்.

ஏது :—அவன் *ஏகானேகமிரண்டுமின்றிச் சருவவியாபியாய் நிற்றலான். (வா. 10-b)

உதாரணம் :

15. எங்குமுள னென்றளவை ஒன்றன் றிரண்டென்னில்
எங்கு முளன்†அன் றெவற்றெவனும் - ‡அங்கண்
அவையவன் அன்றில்லைப் பொன்னொளிபோல் ஈசன்
அவையுடைமை யாளாநாம் §அங்கு. கo

இரண்டாம் சூத்திரம் :—சூர்ணி 4, சூ. கண் 4, சூ - அதி. 4, வா. 5, சூ. வெ. 10.

ஆக சூ. 2-க்கு சூர்ணி 7, சூ. கண. 7, சூ. அதி. 7, வா. 10, சூ. வெ. 15.

[குறிப்பு. சூ. கண் = சூத்திரக் கண்ணழிவுரை. சூ. அதி = சூத்திர மேற்கோள், ஏது, அதிகரணம். வா = வார்த்திகப் பொழிப்பு. சூ. வெ. = சூததிர உதாரண வெண்பா.]

## மூன்றாஞ் சூத்திரம் (பசு உண்மை)

உளதில தென்றலின்[1] எனதுடல் என்றலின்[2]
ஐம்புலன்[3] ஒடுக்கம் அறிதலில்[4] கண்படில்
உண்டிவினை யின்மையின்[5] உணர்த்த உணர்தலின்[6]
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.[7]

(க - ரை) எ - து சூ - ம் எ - ன், ஆன்மப் பிரகாச முணர்த்துதனுதலிற்று. (வா. 11)

உளதென்றது ஆன்மா உளதென்று எங்கும் ஒட்டிப் பொருளுரைக்கறபாற்று. (வா. 12)

8. சூர்ணி 1 :—இலலை யென்கிற அறிவுடனே சொல்லுகையினலே அறிவுயிர் உண்டு.

8. சூ. கண் 1:—இலது என்றலின் ஆன்மா உளது.

---

* ஏகாவனேகமிரண்டும். † என்றெவற்றெவனும், அன்றெவற்றவனும். ‡ எஙகென்(று) அவையவனின்றன்றில்லை. § அன்று.

## 8. முதல் அதிகரணம்

**மேற்கோள்** :—*இனி ஆன்மா உளது என்றது.

**ஏது** :—இலதென்றலின். (வா. 13-a)

**பொழிப்புரை** :— எவற்றினையும் அன்றன்றென விட்டு ஆன்மா இலதென்று நிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது. (வா. 13-b)

**உதாரணம்** :

16. அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்றான் †றுளததுவே நீயனைத்தும் - நின்றின்று
தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமு மல்லை தனி. க

[குறிப்பு. ஈண்டு இவ்வதிகரணங்களுள் கூறப்படுவதாவது: மேற்கோ ளொன்றாயினும், எழுவகை மதங்களை வேறு வேறு மறுக்கும் ஏதுக்க ளேழாகலான், ஆன்மா வுளதென்னு மேற்கோள், அவற்றொடு தனித்தனிக் கூட்டியுரைக்கப்பட்டு ஏழதிகரணமாயிற்று இச் சூத்திரமென்றுணர்க. இச்சூத்திரத்திற் கூறிய ஏதுவே ஏது, மேற் கோளு மதுவேயாகலின், ஏனைச் சூத்திரங்களுட்போல வேறே ஏதுக் கூறவேண்டாமையின், இவை ஏதுவாமாறும், இவற்றான் மேற் கோளைச் சாதிக்குமாறும் விளங்க வுணர்த்தி வலியுறுத்துதன் மாத திரையே என்க - என்பது சிவஞானபாடியம்.]

9. **சூர்ணி 2** :—எனது உடல் என்று பொருட் பிறிதின் கிழமையாகச் சொல்லுகையினாலே உடற்கு வேறாய் உயிர் உண்டு.

9. **சூ. கண் 2** :—எனது உடல் என்றலின் ஆன்மா உளது.

## 9. இரண்டாம் அதிகரணம்

**ஏது** :—இனி எனதுடலென்றலின்.

**மேற்கோள்** :—ஆன்மா வுளதென்றது. (வா. 14-a)

---

* ஈண்டு. † றுளவதுவே, றுளமதுவே.

*பொழிப்புரை* :—என் பதி என் மனை யென்றுறபோல என் கை என் காலென நிற்பதுளதாகலின் அதுவே அவ் வான்மாவாம் என்றது. (வா. 14-b)

*உதாரணம்* :

17. எனதென்ற மாட்டின் எனதலா தென்று(து)
உனதலா *துன்கைகால் யாக்கை - எனதென்றும்
என்னறிவ தென்றும் உரைத்துநீ நிற்றிகாண்
உன்னிலவை வேறும் உணர். உ

10. சூர்ணி 3 :—ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ் வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கும் வேறாய் உயிர் உண்டு.

10. சூ. கண் 3 :—ஐம்புலன் அறிதலி னென்றது ஐம்புல னறிதலின் ஆன்மா உளது.

## 10. மூன்றும் அதிகரணம்

இனி ஐமபுலனொடுகக மறிதலினென்றது ஐம்புலனறிதலின் ஒடுக்க மறிதலின் என்றுணரற்பாறது. (வா. 15)

*ஏது* :—இனி ஐமபுலனறிதலின்.

*மேற்கோள்* :—ஆன்மா உளதெனறது. (வா. 16-a)

*பொழிப்புரை* :— ஐம்புலனாகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின் இவ்வைந்தினாலும் ஐம்பயனும் அறிவதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது. (வா. 16-b)

*உதாரணம்* :

18. ஒன்றறிந்த தொன்றறியா தாகி உடன்மன்னி
அன்றும் †புலனையவ் வஞ்செழுத்தை - ‡ஒன்றறிதல்
உள்ளதே §யாகில் அதுநீ தனித்தனிகண்(டு)
உள்ளலவை ஒன்றல்லை ஓர். ௧௮

11. சூர்ணி 4 :—கனவுடலைவிட்டு நனவுடலிலே வருகையினாலே, அககனவுடற்கு வேறாய் உயிர் உண்டு.

11. சூ. கண் 4 :—ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது.

---

* உன்கை. † புலனைய. ‡ ஒன்றறிந்த துள்ளதே யாயின். § யாகிஅது.

## 11. நான்காம் அதிகரணம்

*ஏது :—இனி ஒடுக்கமறிதலின்.*

*மேற்கோள் :—ஆன்மா உளதென்றது. (வா. 17-a)*

*பொழிப்புரை :—நனவின்கட் கனவுகண்டா மென்றுங் கண்டிலமெனறும் நிற்பதுளதாகலின் அதுவே அவவானமா வாம் என்றது. (வா. 17-b)*

*உதாரணம் :*

**19.** *அவவுடலின் நின்றுயிரப்ப ஐமபொறிகள் தாங்கிடப்பச்*
*செவ்விதின் அவ்வுடலிற் *சென்றடங்கி - அவ்வுடலின்*
*வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை*
*மாறலுடல் நீயல்லை மற்று.* ௪

*12. சூர்ணி 5 :—நித்திரையிலும பிராணவாயுத தொழில் பண்ணவும் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதபடியி னாலே, பிராணவாயுவுக்கு வேறாய் உயிர் உண்டு.*

*12. சூ. கண் 5 :—கண்படில் உண்டிவினை இன்மையின் ஆன்மா உளது.*

## 12. ஐந்தாம் அதிகரணம்

*ஏது :—இனிக கண்படில உணடி வினையின்மையின்.*

*மேற்கோள் :—ஆனமா உளதென்றது. (வா. 18-a)*

*பொழிப்புரை :—ஒடுஙகினவிடதது இன்பத்துன்பஞ் சீவ னம் பிரகிருதிககின்மையின், ஒடுங்காதவிடதது இன்பத்துன பஞ் சீவியா நிறபதுளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது. (வா. 18-b)*

*உதாரணம் :*

**20.** *கண்டறியும் இவ்வுடலே காட்டொடுங்கக் காணுதே*
*உண்டிவினை யின்றி உயிர்த்தலாற் - கண்டறியும்*
*உள்ளமவே றுண்டாய் ஒடுஙகா †துடனண்ணில்*
*உள்ளதாம் உண்டிவினை ‡யூன்.* ௫

---

* சென்றொடுஙகி. † துடன்மன்னி. ‡ ஊண்.

13. சூர்ணி 6 :—மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே, மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு.

13. சூ. கண் 6 :—உணாதத உணர்தலின் ஆன்மா உளது.

## 13. ஆறும் அதிகரணம்

ஏது :—இனி உணாதத உணர்தலின்.

மேற்கோள் :—ஆன்மா உளது என்றது. (வா. 19-a)

பொழிப்புரை :—அவனறிநதாங்கறிவனெனறு அறிவிக்க அறிந்து உபதேசியாய் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான் மாவாம என்றது. (வா. 19-b)

உதாரணம் :

21. அறிந்தும் அறிவதே ஆயும் அறியா(து)
அறிந்ததையும் விட்டங் கடங்கி - அறிந்த(து)
எதுஅறிவும அன்ருகும மெய்கண்டான் ஒன்றின்
அதுவதுதான் என்னும் அகம். சு

14. சூர்ணி 7 .—எலலாத் தத்துவஙகளுக்கும் வேறு வேறு பெயா இருககையினாலே, அநதநதத தததுவங்களுககு வேருய் உயிர் உணடு.

14. சூ. கண் 7 :—மாயா இயநதிர தனுவினுள் ஆன்மா உளது.

## 14. ஏழாம் அதிகரணம்

மேற்கோள் :—இனி மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளதென்றது. (வா. 20-a)

ஏது :—அவைதாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலான். (வா. 20-b)

உதாரணம் :

22. கலையாதி *மண்ணந்தங் காணில்அவை மாயை
நிலையாவாந் தீபமே †போல - அலையாமல
ஞானத்தை முன்னுணர்ந்து நாடில் அது‡தனுவாம்
தான்அத்தின் வேருகும் தான். எ

* மண்ணாந்தம். † போலும். ‡ தனுவாய்.

**மூன்றும் சூத்திரம்** :—சூர்ணி 7, சூ. கண். 7, சூ. அதி. 7, வா. 10, சூ. வெ. 7.

ஆக மூன்று சூத்திரங்களுக்கும் சூர்ணி 14, சூ. கண். 14, சூ. அதி. 14, வா. 20, சூ. வெ. 22.

---

## உ. இலக்கண இயல்

### நான்காஞ் சூத்திரம் (பசு இலக்கணம் போது)

*அந்தக் கரணம் அவற்றினென் றன்றவை[1]*
*சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா(து)[2]*
*அமைச்சரச் சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.[3]*

*(க - ரை) எ - து சூ - ம் எ - ன், இதுவுமது.* (வா. 21)*

*15. **சூர்ணி 1** :—அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினு லன்றித் தொழில் இல்லாதபடியினுலே, அந்தக்கரணங்களுக்கு வேருய் உயிர் உண்டு.*

*15. **சூ. கண் 1** :—அந்தக்கரணம் அவற்றின் ஒன்று அன்று.*

### 15. முதல் அதிகரணம்

***மேற்கோள்*** :—ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனே புத்தி யகங்கார சித்தங்களில் ஒன் றன்று என்றது. (வா. 22-a)

***ஏது*** :—அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான். (வா. 22-b)

***உதாரணம்*** :

23. மனமாதி யாலுணர்தல் மன்னு புலன்கள்
மனமாதி மன்புலனின் †அல்லன் - மனமேல்
உதித்தொன்றை உள்ளம் உணர்தல் அதனின்
உதிக்குங் ‡கடற்றிரையை ஒத்து. க

---

* 'ஆன்மப் பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்று' என்பது.
† அல்ல. ‡ கடற்றிரையே.

24. *சிந்தித்தாய்ச் சித்தம் †தெளியாதாய் ஆங்காரம்
புந்தியாய் ஆய்ந்து ‡மனமாகிப் - பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ளம் இவ்வேறும்
அவ்வேறும் போதுபோல் ஆங்கு. உ

25. அகார உகாரம் அகங்காரம் புத்தி
மகாரம் மனஞ்சித்தம் விந்துப் - பகாதிவற்றை
நாதம் உளவடிவாம் §நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று. ௩

26. ||எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமாம்
நண்ணிய விந்துவொடு நாதத்துக் - கண்ணிற்
பகரயன்மா லோடு பரமனதி தெய்வம்
அகரஉக ரம்மகரத் தாம். ச

16. சூர்ணி 2 :—மல மறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை.

16. சூ. கண் 2 :—(ஒன்றன்றுயினும்) சகச மலத்து உணராது (அமைச்சு அரசு ஏய்ப்ப) அவை சந்தித்தது ஆன்மா.

## 16. இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள் :—**இனி இவ்வான்மாச் சகச மலத்தினுல் உணர்வின்று என்றது. (வா. 23-a)

**ஏது :—**அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக்கொடு நிற்றலான். (வா. 23-b)

**உதாரணம் :**

27. மாயா தனு¶விளக்காம் மற்றுள்ளங் காணுதேல்
ஆயாதாம் ஒன்றை அதுஅதுவாய் - $வீயாத

---

* சிந்தித்தாம். † தெளியாதாம். ‡ மனமாகும். § நாடிப். || எண்ணிலவ். ¶ விளக்காய். $ வீயாது.

*வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றுங் காட்டம்*
*தன்னைமலம் அன்றணைதல் தான்.* [போல்

*17. சூர்ணி 3 :—உயிர் மூன்றவத்தைப்படும்.*

*17. சூ. கண் 3 :—அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று அஞ்சு அவத்தைத்தே.*

## 17. மூன்றும் அதிகரணம்

**மேற்கோள் :**—இனி இவ்வான்மாச் சாக்கிரம் சொப்பனம் சுழூத்தி துரியம் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனுய் நிற்குமென்றது. (வா. 24-a)

**ஏது :**—அதுதான் மல *சொரூபத்தின் மறைந்து அருபசொரூபியாய நிற்றலான. (வா. 24-b)

**உதாரணம் :**

28. †ஒன்றணையீா மூலத் துயிரணையும் நாபியினிற்
சென்றணையுஞ் சித்தம் ‡இதயத்து - §மன்றவ‌ய்
||ஐயைந்தாம் $நன்னுதலிற் கண்டத்து வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு. சு

29. இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம்
இலாடத்தே ஐந்தவத்தை எய்தும் - இலாடத்தே
அவ்வவ இந்திரியத் தத்துறைகள் ¶கண்டதுவே
**அவ்வவற்றின் ††நீங்கலது ஆங்கு. எ

4-ம் சூத்திரம் :—சூர்ணி 3, சூ. கண். 3, சூ. அதி. 3, வா. 4, சூ. வெ. 7.

ஆக நான்கு சூத்திரங்களுக்கும் சூர்ணி 17, சூ. கண். 17, சூ. அதி. 17, வா. 24, சூ. வெ. 29.

---

* சொரூபத்திலே. † ஒன்றணையான். ‡ இதயத்தின். § மன்றவே. || ஐயைந்தா. $ நணனுதலிற் கண்டத்தின், நன்னுதலிற் கண்டத்தின், கண்டத்து நன்னுதலில். ¶ கண்டடைவே. ** அவ்வவற்றை. †† நீஙகிலது.

## ஐந்தாம் சூத்திரம் (பாச இலக்கணம்)

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந் தறியா[1] *ஆங்கவை போலத்
தாந்தம் உணர்வின் தமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.[2]

(க - ரை) எ-து சூ-ம் எ - ன், இவவான்மாக்களிடத்துத் தமது முதலுபகார முணர்த்துதனுதலிற்று. (வா. 25)

*18. சூர்ணி 1 :—உயிராலே தத்துவங்களெலலாந் தொழில் செய்யும்.*

*18. சூ. கண். 1 :—விளமபிய உள்ளத்து மெய் வாய் கண் மூக்கு அளந்து அறிந்து அறியா.*

### 18. முதல் அதிகரணம்

*மேற்கோள் :—ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவா லுணரும் என்றது. (வா. 26-a)*

*ஏது :—அவற்றினுல் ஆன்மா ஒற்றித்துக் காணினல்லது அவை ஒன்றையுமவிடயியாவாகலான். (வா. 26-b)*

*உதாரணம் :*

30. ஐம்பொறியை ஆண்டங் கரசாய் உளம்†நிற்ப
ஐமபொறிகள் உள்ளம் அறியாவாம் - ஐம்பொறியிற்
காணுதேற் காணுது காணுமுளங் காணுதேல்
காணுகண் கேளா செவி. க

*19. சூர்ணி 2 :—அரனுலே உயிர்களெல்லாம அறியும்.*

*19. சூ. கண் 2 :—ஆங்கு அவைபோலத் தாம் தம் உணர்வின் தமியருள் காநதம கண்ட பசாசத்து அவையே.*

### 19. இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள் :—இனி இதுவுந் தமது முதலாலே உணரும் என்றது. (வா. 27-a)*

---

* ஆங்கது போலும். † நிற்க.



ஏது :—இவ்வான்மாத் தன்னாலே உணரும் இந்திரியங்களைப் போலத் தானுந் தன்னை உணராதுநிற்றலான். (வா. 27-b)

உதாரணம் :

31. மன்னுசிவன் சன்னிதியின் மற்றுலகஞ் சேட்டித்த(து)
என்னு மறையின் இயல்மறந்தாய் - சொன்னசிவன்
கண்ணு உளம்*வினையாற் கண்டறிந்து நிற்குங்காண்
எண்ணான் சிவன்அசத்தை இன்று. உ

32. வெய்யோன் ஒளியின் ஒடுங்கி விளங்காது
வெய்யோனை ஆகாத மீன்போல - †மெய்யவனிற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ‡ஐம்புலனைக்
§கண்டுடனாய் மன்னுதலைக் காண். ௩

33. அருளுண்டாம் ஈசற் கதுசத்தி யன்றே
அருளும் அவனன்றி இல்லை - அருளின்(று)
அவனன்றே இல்லை அருட்கண்ணார் கண்ணுக்(கு)
இரவிபோல் ||நிற்குமரன் ஏய்ந்து. ௪

5-ம் சூத்திரம் :—சூர்ணி 2, சூ. கண். 2, சூ. அதி. 2, வா. 3, சூ. வெ. 4.

ஆக ஐந்து சூத்திரங்களுக்கும் சூர்ணி 19, சூ. கண். 19, சூ. அதி. 19, வா. 27, சூ. வெ. 33.

## ஆறுஞ் சூத்திரம் (பதி இலக்கணம்)

உணருரு ¶அசத்தெனின் உணரா தின்மையின்[1]
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே.[2]

---

*வினையாய்க். †வெய்யோனிற். ‡ஐம்புலனும். §கண்டுடனா ன்னுதலிற். ||நிற்பனும். ¶அசத்தென.

(க - ரை) எ - து சூ - ம் எ - ன், சத்தும் அசத்தும் வரைசெய்துணர்த்துத னுதலிற்று. (வா. 28)

20. சூர்ணி 1 :—உயிரறிவினாலே அறியப்பட்டவெல்லாம் அழியும்.

20. சூ. கண். 1 :—உணருரு அசத்தெனின் உணராது இன்மையின்.

## 20. முதல் அதிகரணம்

மேற்கோள் :—ஈண்டு அறிவினலறியப்பட்ட சுட்டு அசத்தென்றது. (வா. 29-a)

ஏது:—அவைதாம் *பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான். (வா. 29-b)

உதாரணம் :

34. †அசத்தறியாய் கேள்நீ அறிவறிந்த ‡எல்லாம்
அசத்தாகும் மெய்கண்டா னயின் - க-a

- அசத்தலாய்
நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும்
ஓரில்§அவை இன்றாமா றெப்பு. க-b

21. சூர்ணி 2 :—அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்.

21. சூ. கண். 2 :—இருதிறன் அல்லது சிவசத்து ஆம் என இரண்டு வகையின் இசைக்கும் மன் உலகே.

## 21. இரண்டாம் அதிகரணம்

மேற்கோள் :—இனி இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்கு மனாதித கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்றுணரற்பாற்று. (வா. 30-a)

---

* பிரகாசாப் பிரகாசமா நிற்றலான். †அசத்தறியா. ‡தெல்லாம். § இவை.

ஏது:—பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவதின்மையானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாச மின்மையானும். (வா. 30-b)

உதாரணம் :

35. எண்ணிய சத்தன் றசத்தன்றும் என்றல்என்
கண்ணி உளதென்றல் மெய்கண்டான் - எண்ணி
அறிய *இரண்டாம் அசத்ாதல் சத்தாம்
அறிவறியா மெய்சிவன்தா னாம். உ

36. †உணர்ப அசத்தாதல் ‡ஒன்றுணரா தொன்றை
உணருநீ தானுணரா §யாயின் - ||உணரும்உனின்
தானிரண்டாம் மெய்கண்டான் தன்றால் உணர்தலால்
தானிரண்டாய்க் காணுன தமி. ௩

37. ¶பாவகமேற் றுன்அசத்தாம் பாவனு தீதமெனிற்
பாவகமாம் அன்றென்னிற் பாழதுவாம் - பாவகத்தைப்
பாவித்தல் தானென்னிற் பாவகமாம் தன்னருளாற்
பாவிப் பதுபரமில் பாழ். ச

38. அறிய இரண்டல்லன் ஆங்கறிவு தன்றால்
அறியப் படான்அறிவி னுள்ளான் - அறிவுக்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு. ரு

39. அதுவென்னும் ஒன்றன் றதுவன்றி வேறே
அதுவென் றறியறிவும் $உண்டே - அதுவென்(று)
அறிய இரண்டல்லன் ஆங்கறிவுள் நிற்றல்
அறியுமறி வேசிவமு மாம். சு

6-ம் சூத்திரம் :—சூர்ணி 2, சூ. கண். 2, சூ. அதி. 2, வா. 3, சூ. வெ. 6.

ஆக ஆறு சூத்திரங்களுக்கும் சூர்ணி 21, சூ. கண். 21, சூ. அதி. 21, வா. 30, சூ. வெ. 39.

---

*இரண்டாய். †உணர்வதசததாதல். ‡என்றுணரா. §யாகில், தாயின். || உணரும் எனில், உணருருவில். ¶ பாவகமென்றுன். $ உண்டால்.

# II உண்மை அதிகாரம்

## க. சாதன இயல்

## ஏழாஞ் சூத்திரம்

(பசுவின் சிறப்பிலக்கணம்—அதிகாரி இயல்பு)

*யாவையும் சூனியம் சத்தெதிர் *ஆகலின்*
*சத்தே அறியா(து) [1]அசத்தில தறியா(து)[2]*
*இருதிறன் அறிவுள(து) இரண்டலா ஆன்மா.[3]*

*(க - ரை) எ - து சூ - ம் எ - ன், †மேலதற்கோர் புற னடை யுணர்த்துத னுதலிற்று. (வா. 31)*

*22. சூர்ணி 1:—அரன் பாசததை அனுபவியான்.*

*22. சூ. கண் 1:—யாவையும சூனியம சதது எதிர் ஆக லின் சத்தே அறியாது.*

### 22. முதல் அதிகரணம்

*மேற்கோள்:—ஈண்டுச் சதஙினிடத்து அசத்துப் பிரகாசி யாதென்றது. (வா. 32-a)*

*ஏது:—மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிறற லான். (வா. 32-b)*

*உதாரணம்:*

*40. அன்னியமி லாமை அரற்கொன் ‡றுணர்வின்றும்*
*அன்னியமி லான்§அசத்தைக் காண்குவனேல் - அன்னி*
*காணுன் அவன்முன் கதிர்முன் னிருள்போல [யமாக்*
*மாணு அசத்தின்மை மற்று.* க

*23. சூர்ணி 2:—பாசம அரனை அனுபவியாது.*

*23. சூ. கண். 2:—அசத்து இலது அறியாது.*

---

**ஆதலிற். †மேலதற்கே. ‡(று)அறிவின்றும். §அசத்திற்.*

## 23. இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள் :—இனி அசத்தினுக்கு உணர்வின்றென்றது. (வா. 33-a)*

*ஏது :—அதுதான் நிரூபிக்கில் இன்றாகலான். (வா. 33-b)*

*உதாரணம் :*

41. பேய்த்தேர்நீர் என்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தே ரசத்தாகும் பெற்றிமையின்-வாய்த்ததனைக்
கண்டுணர்வார் இல்வழியிற் காணும் அசத்தின்மை
*கண்டுணர்வார் இல்லதெனக் காண். உ

*24. சூர்ணி 3 :—உயிர் அவ்விரண்டனையும் அனுபவிக்கும் (அல்லது உயிர் அவ்வரனை அடையும், அனுபவிக்கும்).*

*24. சூ. கண் 3 :—இருதிறன் அறிவு உளது இரண்டலா ஆன்மா.*

## 24. மூன்றும் அதிகரணம்

*மேற்கோள் :—இனி இருதிறன் அறிவு உளது இரண்டலா ஆன்மா என்றது. (வா. 34-a)*

*பொழிப்புரை :—இவ்விரண்டனையும் அறிவதாய் உபதேசியாய நின்ற †அவவறிவு இரண்டன்பாலுமுளதாய் உள்ள அதுவே அவ்வான்மாவாம் என்றது. (வா. 34-b)*

*உதாரணம் :*

42. அருவுருவந் தானறிதல் ஆயிழையாய் ஆன்மா
அருவுருவம் அன்றாகும் உண்மை - ‡அருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றல் மலர்மணம்போற் றேக்கு. ௩

43. மயக்கம துற்று மருந்தில் §தெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசில் - $அசத்துமலே
நீயறிந்து செய்வினைகள் நீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான். ச

*கண்டுணரா(து), கண்டுணரார். †அறிவு. ‡வருவுருவாய். §தெளியிற். $அசத்துமல.

44. மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாதல்
அஞ்ஞானம் உள்ளம் *அணைதல்காண்-மெய்ஞ்ஞானந்
தானே †யுளவன்றே தண்கடல்நீர் உப்புப்போல்
தானே ‡யுளமுளவாத் தான். ௫

7-ம் சூத்திரம் :—சூர்ணி 3, சூ. கண். 3, சூ. அதி. 3, வா. 4, சூ. வெ. 5.

ஆக ஏழு சூத்திரங்களுக்கும் சூர்ணி 24, சூ. கண். 24, சூ. அதி. 24, வா. 34, சூ. வெ. 44.

## எட்டாஞ் சூத்திரம் (குருவுமாய் உணர்த்தும் முறை)

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்[1]
§தம்முதல் குருவுமாய்த்[2] தவத்தினில் உணர்த்த[3]விட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் ||செலுமே.[4]

(க - ரை) எ - து சூ - ம் எ - ன, ஞானத்தினை ¶யுணரு முறைமையினை உணர்த்துதனுதலிற்று. (வா. 35)

25. சூர்ணி 1 :—உயிருக்கு நல்லறிவு தவத்தினாலேயே வரும்.

25. சூ. கண் 1 :—தவத்தினில் உணர்த்த.

### 25. முதல் அதிகரணம்

மேற்கோள் :—$ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞானம் நிகழுமென்றது. (வா. 36-a)

ஏது:—மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான். (வா. 36-b)

உதாரணம் :

45. தவஞ்செய்தார் என்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத் - தவஞ்செய்த

---

*அணைதலாம். † யுளதன்றே. ‡ யுளமுளவாங். § தன்முதல். ||பெறுமே. ¶யுணர்த்தும். $இனி.

நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றூர்சூழ் சொல்லுமாங் கண்டு. க

46. பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்
இசைத்து வருவினையின் இன்பம் - இசைத்த
இருவினை *யொப்பில் இறப்பில் தவத்தான்
மருவுவனும் ஞானத்தை வந்து. உ

26. சூர்ணி 2:—உயிருக்குச சற்குருவாய்வருவது அரனே.
26. சூ கண் 2 :—தமமுதல குருவுமாய் (உணர்த்த).

## 26. இரண்டாம் அதிகரணம்

மேற்கோள் :—இனி இவவான்மாக்களுக்குத் தமது முதல்வனே குருவுமாயுணர்த்துமென்றது. (வா. 37-a)

ஏது :—அவன் அனனியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான. (வா. 37-b)

உதாரணம் :

47. மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்(கு)
அஞ்ஞான அச்சகலர்க் கக்குருவாய் - மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்தும் †அன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன். ங

48. அறிவிக்க அன்றி அறியா உளங்கள்
செறியுமாம் முன்பின் ‡குறைகள் - நெறியிற் [டென்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் §வீ
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு. ச

49. இல்லா முலைப்பாலுங் ¶கண்ணீரும் ஏந்திழைபால்
$நல்லாய் உளவாமால் நீர்நிழல்போல் - இல்லா
அருவாகி நின்றானை யாரறிவார் தானே
உருவாகித் தோன்றானேல உற்று. ரு

---

* யொக்கில் இறக்கில். † அந்தப். ‡ வினைகள். § வீடாங்.
¶ ஏந்திழையாள் கணணீரும். $ நல்லா வுளதாமங்.

27. சூர்ணி 3 :—உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையி ஞலே தன்னையும் அறியமாட்டாது.

27. சூ. கண் 3 :—ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந் தென.

## 27. மூன்றும் அதிகரணம்

மேற்கோள் :—இனி இவ்வான்மாக்கள் ஐயுணாவுகளான் மயங்கித் தமமை யுணரா என்றது. (வா. 38-a)

ஏது :—அவைதாம் பளிங்கிலிட்ட வன்னமபோல, காட் டிற்றைக காட்டிநிற்றலான். (வா. 38-b)

உதாரணம் :

50. *பன்னிறங் காட்டும் படிகம்போல் இந்திரியம்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து - பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு.

28. சூர்ணி 4 :—உயிர் பஞ்சேநதிரியஙகளிலே பறறற ருல தனனையும அறியும.

28. சூ. கண் 4 : விட்டு அன்னியமின்மையின் அரன் கழல செலும்.

## 28. நான்காம் அதிகரணம்

மேற்கோள் :—இனி இவ்வான்மாத் தன்னை †இந்திரியத் தின வேருவான காணவே தமது முதல சீபாதத்தை யணையும் என்றது. (வா. 39-a)

ஏது :—‡ஊசல் கயிறறருல தாயதரையே யாந்துணை §யான். (வா. 39-b)

உதாரணம் :

51. சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்
சிறைசெய் ||புலனுணர்வில் தீர்ந்து - சிறைவிட்(டு)

---

*பன்னிறமே. †இந்திரியத்த, இந்திரியததுக்கு. ‡அவைதாம் ஊசல். § யாதலான். || புலனுணர்ந்து.

அலைகடலிற் சென்றடங்கு மாறுபோல் மீளா(து)
உலைவிலரன் பாதத்தை உற்று. எ

52. எவ்வுருவும் தானென்னின் எய்துவார் *இல்லைதாள்
இவ்வுருவின் †வேறேல் இறையல்லன் - எவ்வுருவும்
கண்போல் அவயவங்கள் காணுஅக் ‡கண்ணில்லார்
கண்பேறே காணக் கழல். அ

53. ஐம்பொறியின் அல்லையெனும் §அந்த தரசிவனை
ஐம்பொறியை விட்டங் கணைசகலன் - ஐம்பொறியின்
||நீங்கான்நீர்ப் பாசிபோல் ¶நீங்குமல கன்மம்வரின்
$நீங்கானை நீங்கு நினைந்து. கூ

8-ம் சூத்திரம் :—சூர்ணி 4, சூ. கண். 4, சூ. அதி. 4, வா. 5, சூ. வெ. 9.

ஆக எட்டுச் சூத்திரங்களுக்கும் சூர்ணி 28, சூ. கண். 28, சூ. அதி. 28, வா. 39, சூ. வெ. 53.

## ஒன்பதாஞ் சூத்திரம் (ஆன்மசுத்தி)

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி[1]
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதி[2]விதி எண்ணும்அஞ் செழுத்தே.[3]

(க - ரை) எ - து சூ - ம் எ - ன், ஆன்மசுத்தி பண்ணுமா றுணர்த்துத னுதலிற்று. (வா. 40)

29. சூர்ணி 1 :—உயிர் அரன் ஞானத்தினாலேயே அரனைக் காணும்.

29. சூ. கண் 1 :—ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினின் சிந்தை நாடி.

---

* இல்லையாம். † வேறே. ‡ கண்ணில்லான். § அந்தரங்கச் சிவனை. || நீங்கா நீர்ப். ¶ நீங்கிமல. $ நீங்கானின்.

## 29. முதல் அதிகரணம்

*மேற்கோள் :*—ஈண்டு அம்முதலை ஞானக்*கண்ணாலே காண்க என்றது. (வா. 41-a)

*ஏது :*—அவன் வாக்கு மனாதீதகோசரமாய் நிற்றலான். (வா. 41-b)

*உதாரணம் :*

54. †நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ
தேடி எனையறியேன் தேர்ந்தவகை - ‡நாடிஅரன்
தன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார்
என்னும் எனஅறிவார் இன்று. க

55. காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்
காட்டாய உள்ளத்தைக் கண்காணா - காட்டிய
உள்ளந் தனைக்காணா உள்ளத்தின் கண்ணாய
§கள்வன்தான் உள்ளத்திற் காண். உ

30. சூர்ணி 2 :—உயிர் பாசத்திலே பற்றறற்றால், அரன் வெளிப்படுவன.

30. சூ. கண் 2 :—உராத்துனைத் தேர்த்து எனப் பாசம் ஒருவத் தண நிழலாம் பதி.

## 30. இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள் :*—இனி அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று காண உளதாய் நிறபது ஞானசொரூபமென்றுணரற்பாற்று. (வா. 42)

||[*ஏது:*—இனி அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபமென்றது வேற்றியல்பாகிய வனனபேதங்களை வேறறியல்பென்று கண்டு கழிப்பின் உளதாய் நிற்பது படிகசொரூபமாந் துணையான்.]

---

* கண்ணினாற். † நாடிய. ‡ நாடிலரன். § கள்ளன்தான், கள்ளத்தான். || இது சிவஞான சுவாமிகள் கூற்று ; மெய்கண்டார் வாக்கன்று.

உதாரணம் :

56. நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வன் - அற்புதம்போல்
ஆனா அறிவாய் அளவிறந்து தோன்றானோ
வானே முதல்களையின் வந்து. ௩

57. சுட்டி உணர்வதனைச் சுட்டி அசத்தென்னச்
சட்ட இனியுளது சத்தேகாண் - சுட்டி
உணர்ந்தநீ சத்தல்லை *உண்மையைத் தைவம்
புணர்ந்ததனாற் பொய்விட்டுப் போம். ௪

58. கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தாய்
அண்டனை ஆன்மாவில் ஆய்ந்துணரப் - பண்டணைந்த
ஊனத்தைத் தான்விடுமா றுத்தமனின் ஒண்கருட
†சானத்தில் தீர்விடம்போற் றான். ௫

31. சூர்ணி 3:—பஞ்சாக்ஷர செபம் பண்ணினால் வாசனா மலம் போம்.

31. சூ. கண் 3 :—விதி எண்ணும் அஞ்செழுத்தே.

## 31. மூன்றும் அதிகரணம்

மேற்கோள் :—இனி இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாககரததை விதிப்படி உசசரிகக எனறது. (வா. 43-a)

ஏது:—இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசிததும அஞ்ஞானததை வேம்பு தின்ற புழுப்போல நோக்கிறறை ‡நோக்கி நிற்குமாகலின், அது §நீக்குதறகெனக் கொள்க. (வா. 43-b)

உதாரணம் :

59. அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தால் அர்ச்சித் திதயத்தில்-அஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் $சானிக்கில்
அண்டனும் சேடனும் ¶அங்கு. ௬

* உண்மைக்கு. † தியானத்தில். ‡ நோக்குமாதலான். § நீக்குதற்கு. $ சாரநிற்கில். ¶ ஆங்கு.

60. இந்துவிற் பானுவில் இராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணில் சிவன்கண்ணும் - *உந்தவே
†காட்டாக்கிற் றேன்றிக் கனல்சேர் இரும்பென்ன
ஆள்தானும் ஓதஞ் செழுத்து. எ

61. மண்முதல் நாளம்மலர் வித்தை கலாரூபம்
எண்ணிய ஈசர் சதாசிவமும் - ‡நண்ணிற்
கலையுருவாம் நாதமாம் §சத்தியதன் கண்ணும்
நிலைஅதிலாம் அச்சிவன்தாள் நேர். அ

9-ம் சூத்திரம் :—சூர்ணி 3, சூ. கண். 3, சூ. அதி. 3, வா. 4, சூ. வெ. 8.

ஆக ஒன்பது சூத்திரங்களுக்கும் சூர்ணி 31, சூ. கண். 31, சூ. அதி. 41, வா. 43, சூ. வெ. 61.

## உ. பயனியல்

### பத்தாஞ் சூத்திரம் (பாச நீக்கம்)

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகனாகி[1] இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே.[2]

(க - ரை) எ - து சூ - ம எ - ன், பாசக்ஷயம் பண்ணுமா றுணர்த்துத னுதலிற்று. (வா. 44)

32. சூர்ணி 1:—அரனுடன ஒன்றாகி நில்.

32. சூ. கண் 1 :—அவனே தானே ஆகிய அந்நெறி ஏகன ஆகி.

### 32. முதல் அதிகரணம்

மேற்கோள் :—ஈண்டுப் பரமேசுவரன் இவ்வானமாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனாகி நிற்க எனறது. (வா. 45-a)

* முந்தவே. † காட்டத்தொல் தீயென்னக் கனல்சேர். ‡ நண்ணிக். § சத்திசிவன், விந்துவதன்.

ஏது :—அவ்வாறு நிற்கவே யானெனதென்னுஞ் செருக்கற்று அவனது சிபாதத்தை யணையுமாகலான். (வா. 45-b)

உதாரணம் :

62. நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுளம் உண்டாதல்
தானெனஒன் றின்றியே தானதுவாய் - நானெனஒன்
றில்லென்று தானே எனுமவரைத் தன்னடிவைத்
தில்லென்று தானும் இறை. க

33. சூர்ணி 2 :—உன் தொழிலெல்லாம் அரன் பணி என்றே கொள்.

33. சூ. கண் 2 :—இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை இன்றே.

## 33. இரண்டாம் அதிகரணம்

மேற்கோள் :—இனி *இறை பணி வழுவாது நிற்க என்றது. (வா. 46-a)

ஏது :—அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யானுகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியாவாகலான். (வா. 46-b)

உதாரணம் :

63. நாமல்ல இந்திரியம் நம்வழியின் அல்லவழி
நாமல்ல நாமும் அரனுடைமை - ஆமென்னில்
எத்தனுவில் நின்றும் இறைபணியார்க் கில்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன். உ

64. சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்துஞ் †சலமிலனாய்ச் - சார்ந்தடியார்
தாந்தானச்செய்துபிறர் தங்கள்வினை ‡தான்கொடுத்தல்
ஆய்ந்தார்முன் செய்வினையும் ஆங்கு. ங

65. இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபால்
முன்செய் வினைமாயை மூண்டிடினும் - பின்செய்வினை

---

* அம்முதல் பணி. † சலமிலனும். ‡ தாங்கொடுத்தல்.

*மாயையுடன் நில்லாதுமற்றவன்முன்மெய்ப்பொருளே
ஆயவத னுணரும் அச்சு. ௪

66. நண்அனல் வேவாத நற்றவர் தம்மினும்
†பண்அமர மாச்செலுத்தும் பாகரினும் - ‡எண்ணி
§அரனடி ஓர்பவர் ஐம்புலனிற் சென்றும்
¶அவர்திறல் நீங்கார் அதற்கு. ௫

67. சதசத்தாம் மெய்கண்டான் ||சத்தருளிற் காணின்
இதமித்தல் பாசத்தி லின்றிக் - கதமிக்(கு)
எரிகதிரின் முன்னிருள்போல் ஏலா அசத்தின்
அருகணையார் சத்தணைவார் $ஆங்கு. ௬

10-ம் சூத்திரம் :—சூர்ணி 2, சூ. கண். 2, சூ. அதி. 2, வா. 3, சூ. வெ. 6.

ஆக பத்து சூத்திரஙகளுக்கும் சூர்ணி 33, சூ. கண். 33, சூ. அதி. 33, வா. 46, சூ. வெ. 67.

## பதினோராஞ் சூத்திரம் (சிவப்பேறு)

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காணஉள் ளத்தைக் கண்டு காட்டலின்[1]
அயரா அன்பின் அரன்கழல் ௸செலுமே.[2]

(க-ரை) எ - து சூ - ம் எ-ன், பரமேசுவரனது சீபாதங் களை அணையுமா றுணர்தது த னுதலிற்று. (வா. 47)

34. சூர்ணி 1 :—ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அனுபவிப்பன.

---

* மாயையுடனல்லாது. † பண்ணமர். ‡ எண்ணில். § அர னடியை. ¶ அவர் திறம், அரனடி. || தன்ன னுணரின். $ அங்கு. ௸ தருமே.

34. சூ. கண் 1 :—காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போல் காண உள்ளத்தைக் காட்டிக் காண்டலின்.

## 34. முதல் அதிகரணம்

**மேற்கோள்** :—ஈண்டு அவனும் *அவற்றது விடயத்தை யுணருமென்றது. (வா. 48-a)

**ஏது** :—இவ்வான்மாக்கள் அவனையின்றியமைந்து ஒன்றையும் விடயியாவாகலான். (வா. 48-b)

**உதாரணம்** :

68. ஐந்தையும் ஒக்க †உணரா தவற்றுணர்வ(து)
ஐந்தும்போல் நின்றுணரும் ஆகலான் - ஐந்தினையும்
ஒன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே எவ்வுலகும்
ஒன்றொன்றாப் பார்க்கும் உணர்ந்து. க

69. ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினான் - ஏகமாய்
உள்ளத்தின் கண்ணான் உள்குவார் உள்கிற்றை
உள்ளத்தாற் காணானே உற்று. உ

35. சூர்ணி 2 :—அரனை மறவாமல அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கியமாய்ப் போவன்.

35. சூ. கண் 2 :—(அதனை) அயரா அன்பின் அரன்கழல் செலுமே.

## 35. இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்** :—இனிப் பத்தியினான் மறவாதேத்த அவனது சீபாதத்தை யணையுமென்றது. (வா. 49-a)

**ஏது** :—அவன் அன்னியமின்றிச் செய்வோர் செய்திப் பயன் விளைத்து நிற்றலான. (வா. 49-b)

**உதாரணம்** :

70. அருக்கன்நேர் நிற்பினும் அல்லிருளே காணார்க்(கு)
இருட்கண்ணே பாசத்தார்க் கீசன் - அருட்கண்ணாற்

---

* அவற்றினது. † உணராதவாறுணர்வ(து).

பாசத்தை நீக்கும் புகல்அலர்த்துந் தாமரைபோல்
*நேசத்திற் றன்னுணர்ந்தார் நேர். ௩

71. மன்னும் இருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னும் அரனே மலந்துரந்து - †தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் தான். ௪

72. நசித்தொன் றின் உள்ளம் நசித்தலால் ஒன்று
நசித்திலதேல ஒன்றுவ தில்லை - நசித்துமலம்
அப்பணைந்த உப்பின் உளமணைந்து ‡சேடமாங்
கப்பின்றும் ஈசன் கழல். ௫

73. பொன்வாள் §முன்கொண் மூவில்புக்கொடுங்கிப்போயக
தன்வாளே எங்குமாந் தன்மைபோல - முன்வாள் [லத்
||மலத்துள் மறைந்துள்ள மற்றுலகை $உண்ணும்
¶மலத்திரித்துச் செல்லும் வரத்து. ௬

11-ம் சூத்திரம் :—சூர்ணி. 2, சூ. கண். 2, சூ. அதி. 2, வா. 3, சூ. வெ. 6.

ஆக பதினொரு சூத்திரஙகளுக்கும் சூர்ணி 35, சூ. கண். 35, சூ. அதி. 35, வா. 49, சூ. வெ. 73.

## பன்னிரண்டாஞ் சூத்திரம் (சீவன் முத்தி)

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம கழீஇ[1] அன்பரொடு மரீஇ[2]
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே.[3]

(க - ரை) எ - து சூ - ம் எ - ன், அசிந்திதனய் நின்ற பதியைச் சிந்திதனுகக் கண்டு வழிபடுமா றுணர்த்துத னுதலிற்று. (வா. 50)

* நேசத்தர் தம்பால் நினைந்து. † மன்னி. ‡ சேடமாய்க். § வெம்
|| மலத்தின். $ உண்டும். ¶ மலத்தொத்துச்.

*36. சூர்ணி 1 :—மும்மலங்களையுங் களைக.*

*36. சூ. கண் 1 :—செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா அம்மலம் கழீஇ.*

## 36. முதல் அதிகரணம்

*மேற்கோள் :—ஈண்டு ஆணவ மாயை கான்மியமெனனும் மலங்களைக் களைக என்றது. (வா. 51-a)*

*ஏது :—அவைதாம் *ஞானத்தை யுணர்த்தாது †அஞ்ஞானத்தை யுணர்தது மாகலான்.(வா. 51-b)*

*உதாரணம் :*

*74.* புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமும்
மண்முதல் மாயை‡காண் மாயையும் - கண்ணிய
அஞ்ஞானங் §காட்டுமிவ் வாணவமும் இம்மூன்றும
மெய்ஞ்ஞானிக் காகா விடு. க

*37. சூர்ணி 2 :—சிவஞானிகளுடனே கூடுக.*

*37. சூ. கண் 2 :—அன்பரொடு மரீஇ.*

## 37. இரண்டாம் அதிகரணம்

*மேற்கோள் :—இனிச் ||சிவபத்தர்களோடு இணங்குக என்றது. (வா. 52-a)*

*ஏது :—அலலாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவராகலான். (வா. 52-b)*

*உதாரணம் :*

*75.* $மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை - $அறப்பித்துப்
பத்தர் இனத்தாய்ப் பரனுணர்வி னாலுணரும்
மெய்த்தவரை மேவா வினை. உ

---

* ஞானத்தினை. † அஞ்ஞானத்தையே. ‡ மாமாயையும். § காட்டுமால். || சிவபத்தர்களோடுங் கூடி யிணங்குக. $ மறைப்பித்து.

*38. சூர்ணி 3:—சிவஞானிகளையும் சிவலிங்கத்தையும் சிவனெனவே தேறி வழிபடுக.*

*38. சூ. கண் 3:—மால் அற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே.*

## 38. மூன்றும் அதிகரணம்

*மேற்கோள் :—*இனிப் பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுவரனெனக் கண்டு வழிபடுக என்றது. (வா. 53-a)*

*ஏது :—அவன் மற்றிவ் விடங்களிற் †பிரகாசமாய் நின்றே அல்லாதவிடத்து ‡அப்பிரகாசமாய் நிற்றலான். (வா. 53-b)*

**உதாரணம் :**

76. *தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் §தன்னுள் இருத்தலால் - தன்னுணரும்
நேசத்தர் தம்பால் நிகழுந் ததிநெய்போல்
பாசத்தார்க் கின்றும் பதி.* ௩

77. *கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தில் அங்கிவே(று)
உண்டல்போல் நின்றங் குளதாமால் - கண்டவுருத்
தானதுவாய் அன்றுளன் தானதுவாய்த் தோன்றுனே
தானதுவாய்க் ||காணுந் தவர்க்கு.* ௪

*39. சூர்ணி 4:—வழிபடாமையை ஒழிக.*

*39. சூ. கண் 4:—ஒழிபு.*

## 39. நான்காம் அதிகரணம்

*மேற்கோள்:—இனி $இவ்விடங்களின் வழிபடுக என்றது. (வா. 54-a)*

*ஏது :—நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும புருடன் ¶அவையாகாவாறு அப்புருடனுமாகலான். (வா. 54-b)*

---

* இனிச் சிவபத்தரது. † பிரகாசனாய். ‡ அப்பிரகாசனாய். § தம்முள். || காணின். $ இவ்விடங்களிலே. ¶ அவையாகா அப் புருடன்.

உதாரணம் :

78. அதுஇது என்ற ததுவல்லான் *கண்டார்க்(கு)
அதுஇது †என்றதையும் அல்லான் - பொதுவதனில்
அத்துவித மாதலு அகண்டமுந் தைவமே
அத்துவிதி யன்பிற் றொழு. ரு

79. வினையால் அசத்து விளைதலான் ஞானம்
வினைதீரின் அன்றி விளையா - வினைதீர
ஞானத்தை நாடித் தொழுவே அதுநிகழும்
ஆனத்தால் அன்பிற் றொழு. சா

80. தன்னை யறிவித்துத் தான்றானுச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது - ‡முன்னவனே
தானேதா னுச்செய்துந் தைவமென்றுந் தைவமே
§மானே தொழுகை வலி. எ

## நூற்கு அதிகாரிகள்

81. சிவமென்னும் ||அந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவமின்றாங் கண்வா சகத்திற் - சிவமுண்டாம்
ஒன்று மிரண்டு மலத்தார்க்கிங் கொண் ¶குருவால்
இன்றிந நூல் மும்மை மலர்க்கு. அ

12-ம் சூத்திரம் :—சூர்ணி 4, சூ. கண். 4, சூ. அதி. 4, வா. 5, சூ. வெ. 8.

ஆக பன்னிரண்டு சூத்திரங்களுக்கும் சூர்ணி 39, சூ. கண். 39, சூ. அதி. 39, வா. 54, சூ. வெ. 81.

### நூலாசிரியர் பெயர்

எந்தை சனற்குமரன் ஏத்தித் $தொழ இயல்பாய்
நந்தி **யுரைத்தருளும் ஞான நூல் - சிந்தை††செய்து
தானுரைத்தான் மெய்கண்டான் ‡‡தாரணியோர் தாமுணர
ஏதுதிருட் டாந்தத்தால் இன்று.

---

* கண்டால். † என்றதுவும். ‡ முன்னவன்தான். § யானல். || அந்ததரன். ¶ குருவாம். $ தொழும் இயல்பால். ** அருள்செய்த. †† செய்திப் போதுரைத்தான். ‡‡ பூதலத்தோர்.

உ

# ஸ்ரீ சிவஞானபோதம்

(சுருக்க விளக்க அட்டவணை)




**பதி**:—உண்மை: 1-வது சூத்திரம்; பொது விலக்கணம்: 2-வது சூத்திரம்; சிறப்பிலக்கணம்: 6-வது சூத்திரம்.

**பசு**:—உண்மை: 3-வது சூததிரம; பொது விலக்கணம்: 4-வது சூத்திரம்; சிறப்பிலக்கணம்: 7-வது சூத்திரம்; ஞானம் உணருமுறை: 8-வது சூத்திரம்; ஆன்மசுத்தி: 9-வது சூத்திரம்; சிவத்துவமடைதல்: 11-வது சூத்திரம்; சீவன்முத்தி: 12-வது சூத்திரம்.

**பாசம்**:—உண்மை: 2-வது சூத்திரம்; இலக்கணம்: 5-வது சூத்திரம்; நீக்கம்: 10-வது சூத்திரம்.

பதி பசு பாச உண்மையை ஒன்று, மூன்று, இரண்டு சூத்திரங்களாலுரைத்து, அவற்றினிலக்கணத்தை ஆறு, நாலு, ஏழு, ஐந்து சூத்திரங்களால் விளக்கி, எட்டு, ஒன்பது, பத்து சூத்திரங்களில் முறையே ஞானம் உணருமுறையையும் ஆன்ம சுத்தியையும் பாச நீக்கத்தையும் விவகரித்து, பதினொராஞ் சூத்திரத்தில் ஆன்மா சிவத்துவம் பெறுதலைக் காட்டி, அணைந்தோர் தன்மையை இறுதிச் சூத்திரத்தால் உணர்த்தியுள்ளார்.

---

# அதிகரண அடைவு

| 1 | 2 | 3 | 4 | | | | 5 |
|---|---|---|---|---|---|---|---|
| | | | வார்த்திகம் | | | | |
| சூத்திரம் | கண்ணழிவுரை அதிகரணம் | சூரணி | அதிகரணப் பொழிப்புரை 4-a | சூத்திரக் கருத்துப் பொழிப்புரை 4-b | அதிக. அதிகரணப் பொழிப்புரை 4-c | ஆக 4-d | வெண்பா |
| 1 | 3 | 3 | 3 | 1 | 1 | 5 | 5 |
| 2 | 4 | 4 | 4 | 1 | ... | 5 | 10 |
| 3 | 7 | 7 | 7 | 1 | 2 | 10 | 7 |
| 4 | 3 | 3 | 3 | 1 | ... | 4 | 7 |
| 5 | 2 | 2 | 2 | 1 | ... | 3 | 4 |
| 6 | 2 | 2 | 2 | 1 | ... | 3 | 6 |
| 7 | 3 | 3 | 3 | 1 | ... | 4 | 5 |
| 8 | 4 | 4 | 4 | 1 | ... | 5 | 9 |
| 9 | 3 | 3 | 3 | 1 | ... | 4 | 8 |
| 10 | 2 | 2 | 2 | 1 | ... | 3 | 6 |
| 11 | 2 | 2 | 2 | 1 | ... | 3 | 6 |
| 12 | 4 | 4 | 4 | 1 | ... | 5 | 8 |
| | 39 | 39 | 39 | 12 | 3 | 54 | 81 |

அவையடக்கம் 1 }
மஙகல வாழ்த்து 1 } ஆக 2

ஆக 83

# சிவஞானபோதம்

## நூற்சிறப்பு

வேதம் பசுவதன்பால் மெய்யா கமம்நால்வர்
ஓதுந் தமிழ்அதனின் உள்ளுறுநெய் - போதமிகு
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்.

## சூத்திரக் கருத்து

முதற்பதி அரனே ஐந்து முன்னத்து விதமி ரண்டே
இதற்பினே யனுமா னத்தால் எண்ணிலா உயிர்கள் மூன்றே
அதற்பினே யவத்தை நான்கே யகமறுத் திடலே ஐந்தே
செகற்பதி பிரித்த லாறே தெரிவித்தல உயிரை ஏழே.

மறைப்பினை நீக்கி ஞான வாரியை நினைத்தல் எட்டே
சிறப்புடை உபாயந் தம்மால் தெளிவித்தல் உயிரை ஒன்பான்
அறுத்திடல் மலங்கள் பத்தே அழுந்தலே சிவத்தில் ஒன்றே
திறப்பணி கொளலி ரண்டே சிவஞான போதஞ் சித்தி.

—ஈசானதேசிகர் தசகாரியம்.

## அதிகரண வெண்பாத் தொகை

ஐயொருப தேழேழும் ஆங்கமைந்த நாலாறும்
ஐயொன்ப தோரெட்டோ டாறுறும் - துய்யஎட்டோ
டெண்பத்து மொன்றுஞ் சிவஞான போதத்தின்
மன்னருளும் வெண்பா வகை.

## சூர்ணை - சிவஞானபோதம் இரண்டின் தொகை

சூத்திரமீ ராறினுக்குச் சூரணைமுப் பானென்பான்
ஏற்றவெண் பாவெண்பா னிரண்டனைத்துஞ் - சேர்த்ததொகை
நூற்றுமுப்பான் மூன்றிவற்றை நுண்ணுணர்வி னுய்ந்துணர்ந்
வேற்றுருக்கொள் ளாருறுவர் வீடு. [தோர்

## சூர்ணிக்தோகை

மூன்றுநான் கேழு மூன்றே முடிந்தபின் இரண்டி ரண்டே
மூன்றுநான் மூன்று நன்ருய் முடிந்தபின் இரண்டி ரண்டே
ஏன்றநான் கீறு தாமே இவையீரா றிலக்கத் துள்ளே
ஏன்றமுப் பாஞெென் பானே எனக்கரன் இரங்கி ஞனே.

## மெய்கண்டதேவ நாயஞர் துதி

பண்டைமறை வணடரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெலலாங்
கணதிறப்பக் காசினிமேல வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

—சிவஞான சித்தியார்

கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கள மலமகறறும் - வெண்ணெய்நல்லூர்
மெய்கண்டான் என்ருெருகால மேவுவரால வேறின்மை
கைகண்டார் உள்ளத்தின் கண.

—இருபா இருபது

அல்லாத பரசமய வலகைத் தேர்விண்
டகலவகல் புனற்பெண்ணை யயல்சூழ் வெண்ணெய்ப்
பொல்லாத இபமுகத்துப் புத்தேள் தன்பாற்
புனிதசிவா கமப்பொருண்மை பொருந்த ஆய்ந்து
நில்லாத நிலையிதுமற் றென்று மொன்ருய்
நிற்குநிலை யிதுவெனமெய்ந் நெறிதேர்ந் தியாரும்
வெல்லாத சிவஞான போதஞ் சொன்ன
மெய்கண்டான் சரணமுடி மீது கொள்வாம்.

—சேது புராணம்

வேதத்தி னரும்பொருளை விமலனரு ணந்திக்குப்
போதித்த சிவஞான போதத்தைக் குருமரபால்
ஓதிததேர்ந் தருந்தமிழால் எமக்குணர்த்தி எம்மூனஞ்
சேதித்த மெய்கண்ட தேவன்டி சிந்திப்பாம்.

—அருணகிரி புராணம்

சிறிய வாடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்
கறிவு நூல்களின் முடிபெலாம் அகத்தடக் கியதோர்
நெறியின் நீடிய நிகழ்சிவ ஞானபோ தத்தைக்
குறிய தீந்தமி ழாலுரை குரவனைப் பணிவாம்.

மூனறு மலங்கெடுத்து மூலமா மப்பொருளுந்
தோன்ற அருளுநதன தொண்டர்க்கிங் - கானறமைந்தோர்
கைகண்ட தன்றே கடன்ஞாலத் தெப்பொருட்கும்
மெய்கணட தேவன்விரைத தாள்.

நண்ணும் பொருள்மூனறும நானறிந்து நானறஎன்
கண்ணுந் தனதாகக் காட்டினன் - வெண்ணெயிலே
மெயகண்ட தேவனொரு மெயகொணடு வநதிலனேல்
பொய்கொண்டு போமே புவி.

## "சிவஞான போதம்" என்பதன் பொருள்

என்றலுமே சிவமேது ஞான மேதிங்
கியம்பியிடும் போதமே தியமபு வீரேல்
அன்றுவட நீழலிலவந் திருந்தார் நீரே
அடியேனும உமக்கடிமை ஆவேன் என்ன
நின்றசிவம ஒனறதனைத் தேர்தல ஞானம்
நிகழபோதம தோநததனைத் தெளிதல ஆமென்
றென்றியநற் பொருளவினவி நிற்பார் சிந்தை
உருகுமவகை உரைசெய்தார் உவமை யில்லார்.

—வாதவூரடிகள் புராணம்

## சைவ சித்தாந்த சாத்திரம் பதினன்கினையும் உணர்த்தும் வெண்பா

உநதி[1] களிறு[2] உயர்போதம[3] சித்தியார்[4]
பிநதிருபா[5] உண்மை[6] பிரகாசம[7]—வந்தவருள்[8]
பணபுவினு[9] போற்றி[10] கொடி[11] பாசமிலா நெஞ்சுவிடு[12]
உண்மைநெறி[13] சங்கற்பம்[14] உறறு.

உ

# ஸ்ரீ சிவஞானபோதம்

## கருத்து விளக்க செய்யுட்கள்

1. பதிபசுவும் பாசமெனப் பகர்ந்த மூன்றிற்
    பதியதுதா னொன்றோடு பகரா தென்னும்
முதுமறைநூல் அவனொடவள் அதுவென் றோது
    மூவகையுஞ் செய்யவொரு முதலுண் டாகும
அதுபதிதான் சகந்தனையும் அழித்துக் காத்திட்
    டாக்குதலால் அவனரனே யாவன் மற்றும்
விதிதனையும் மதிதனையுங் காட்டி யொன்றாய
    விளைந்தழியக் கண்டிருப்பன் விமலன் தானே.

2. விமலனரு ளான்மாவை வேறா யெங்கும்
    வியாபியாய் எவ்வுயிர்க்கும் உயிராய் வேறற
றமையவே நின்றபரன் கிரியா சத்தி
    யகலாதா னான்மாவை யான்ம[1]வாற்றாற
சமையவே யனுபவிக்கப் பண்ணு வித்துச்
    சங்கரித்துத் தற்பரனாய்த் தாணு வாகி
நிமலனா யானந்த ரூப னாகி
    நித்தனுமா யேகனுமாய் நிற்குநிலை யதுவே.

3. அதுவல்ல திதுவலல வென்கை யாலும
    அறிந்துமென்கை யென்காலென் றறைத லாலும்
இதுவென்ன திதுவென்ன தென்கை யாலும்
    இந்திரிய மொடுங்கியசொல் இயம்ப லாலும்
சதிவல்ல கனவகத்தில் அறித லாலும்
    சாக்கிரத்தே அறிவுதனைத் தருத லாலும
மதிவல்லீர் இவ்வுடலுக் குள்ளே யான்மா
    மன்னிநிற்கு மென்றறிவு வளைக்குந் தானே.

4. வளைக்கின்ற கரணங்கள் நான்கன் றாயும
    மன்னுமவை தம்மோடு மருவிச் சேர்ந்து
கிளைக்கின்ற மலத்தின்மறைந் திச்சா ஞானக்
    கிரியைதனை யுடையதுமாய்க் கெழுமி யாங்கே

---

[1] ஆன்மவத்தால்; வத் - உடைமைத் தன்மை.

விளக்கின்ற அஞ்சவத்தைப் படுவ தாகி.
வேந்தனுடன் மந்திரிக்கு வினைவந் துற்றால்
இளக்கின்ற இருவருக்கு மொக்கு மாபோல்
ஏகமா யுயிர்பிரிந்திங் கிருக்குந் தானே.

5. இருந்தறியுஞ் சத்தாதி விடய மைந்தும்
இந்திரியந் தானறியா வான்மா வாலே
திருந்தஅறிந் திடுமந்த ஆன்மாத் தானும்
சிவத்துடனே சேர்ந்தறியும் அவத்தை சேர்ந்தால்
கரந்துடனுஞ் சிவனவத்தைப் படுவ னென்னிற்
காந்தபசா சம்போலுங் கலந்து நீங்கிப்
பொருந்தியபோ துடனாகி வேறு மாகிப்
போக்குவர வான்மாவைப் புரிவன் தானே.

6. புரிவுறவே காணப்படா தெனிலா காயப்
பூவுமுயற் கொம்புமெனப் புகல்வர் மேலும்
விரிதரவே காணப்பட் டுள்ள தென்னின்
மேவுகட படாதியென விளம்பல் வேண்டும்
கருதியது காணாத பொருளு மற்றைக்
காண்கின்ற பொருளுமிவை கழிய நோக்கித்
தெரிதரவே காணப்பட் டுள்ள தந்தச்
சிவமெனவே யறிந்தடைதல் சித்தந் தானே.

7. சித்தறிந்த சன்னிதியிற் செடமோ இல்லைச்
செடமறியாச் சித்தினுக்கும் அறிய வேண்டா
ஒத்தசட மென்றசெகத் தினையுஞ் சித்தென்
றுரைக்கின்ற சிவன்றனையு முண்மையறிந் துடனும்
நித்தமெனுஞ் சித்துடனே சடமே கூடி
நில்லாதென் றுண்மைதனை நினைந்து நோக்கி
அத்துவித வேறுபா டறிவான் யாவன்
அவனேயவ் வான்மாவை அறிந்து ளானே.

8. அறியாம லிந்திரிய வேடரிடத் தணைந்த
ஆன்மாவாம் புதல்வனைமுன் னறிவிப் பான்போற்
குறியாத குருபரன்வந் தருளி னாலே
குறிப்புணர்த்த வேடருடன் கூடா னாகி
நெறியான நகரினுடன் படையுந் தானே
நிருபனுமாய் நின்றபடி நிலைமை கண்டு
செறிவான தறிந்துபழஞ் செல்வ மான
சிவனடியிற் சென்றணைவன் சீவன் தானே.

9. சீவனுந்தான் ஞானக்கண் ணாலே யந்தச்
சிவனைக்கண் டந்தக்கண் ணாலே கண்ட
பாவநெடுங் கானலைவிட் டிறைவன் செம்பொற்
பாதநிழற் கீழிருந்து பரம ஞான
மேவியவஞ் செழுத்ததனை அருளால உன்னி
மேலிருளும் ஆணவமுங் கீழே யாக்கி
யாவையுமாம் அருளின்ப மேலே யாகி
அந்நிலையாய் மூவகையா யெய்தும் அன்றே.

10. எய்தரிய பரமசிவத் தொன்று பட்டால்
இவனவனா மிதுவொழிந்திட் டவனிவனா காதே
செய்திகளும் ஐவகையும் அவனுக் காக்கிச்
சிவானுபவ மோனமே இவனுக காக்கி
மைதிகழு மூலமலந் தானாய் நிற்கும்
வலலிருளாங் கேவலத்தின் மாயா கன்மம
எய்தரிய வாறுபோற் சிவமே யாகும்
எல்லையிலாப் பேரின்ப முணர்வன் தானே.

11. இசையவரு கண்களுக்குத் தெரிசிப் பானா
யிருக்கின்ற ஆன்மாப்போல் ஆன்மா வுக்கும்
அசைவில்சி வன்தெரிசிப் பிக்கு மென்ப
தறிந்த வன்றனடி யிணையிற் சேரக்
கசியவரு மனத்தினுடன் கம்பத் தாகுங்
கண்ணருவி சோரவுரை கழல ஞானப்
பசையினராய் மெய்புளகக் காடு மெய்திப்
பாவியா மெய்ப்பத்தி மேவு மன்றே.

12. மேவரிய மெய்ஞ்ஞானத் தலைமை யான
 வித்தகரை யடைந்தவர்தம் வேட முண்மை
தேர்வரிய சிவலிங்கந் தேசி கனாுன்
 தேய்க்கவொண்ணு மும்மலத்தைத் தேய்க்க வின்ப
மூவகையால் நம்பொருட்டால் வந்த தென்று
 மூர்த்திகளால் வினைகுருவால் மாயா மூலப்
பாவனையாற் சிவபூசை யதனாற் பார்க்க
 பரனருளாற் சிவானுபவம் பதியு மன்றே.

[திரு. T. S. காந்திமதிநாதன் அவர்கள், B. A., ஸ்ரீ சிவஞான போதப் பொழிப்புரை வெளியீடு, 1928, திருநெல்வேலி.]

---

[இச்சிவஞானபோதம், சிவபெருமான் திருக்கரத்துட் கொண்டது. நந்திதேவருக்கும், சனகாதிகளுக்கும், மாணிக்கவாசக சுவாமிகளுக்கும் உபதேசிக்கப்பெற்றது. சிறந்த சைவ சித்தாந்த ஞான முழுமுதல் நூலாய் விளங்குவது. விரிந்த பொருள்களையுடையது. எந்நூற்களிலும் இல்லாத மேலான விஷயங்களைத் தன்னகத்துட் கொண்டது. பன்னிரண்டு (கஉ) சூத்திரங்களையுடையது. நாற்பது (சo) அடிகளுடையது. இருநூற்றுப் பதினாறு (உகசு) சொற்களுடையது. அச்சொற்களுள் அறுநூற்று இருபத்து நான்கு (சுஉச) எழுத்துக்கள் பெற்றது. ஒவ்வொரு வீட்டிலும் பூசித்துப் போற்றப் படுவது. ஒவ்வொருவரும் படித்துச் சிந்தித்துத தெளிந்து முடிவான அத்துவித முத்தியைப் பெறுதற்குரியது. சிவஞான சுவாமிகளால் சிற்றுரையும் பேருரையாகிய மாபாடியமும் எழுதப்பெற்றது. எவர்களாலும் மறுக்கப்படாதது. எச்சமய நூல்களுக்கும் அரசாய் விளங்குவது.—வித்துவான் - கா. மு. சுந்தர முதலியார்.]

---

# கடவுள் வாழ்த்து—உரை

பொதுவதிகாரத்தாலும் சிறப்பதிகாரத்தாலும் இரண்டாக வேறுபடுத்திக் காட்டி, சிவஞான போதத்தை அருளிச்செய்யு மாறு தொடங்கிய மெய்கண்டதேவ நாயனர், நின்மல சாக்கிராதீத சிவானந்தசாகரத்தில் மூழ்கிய தமக்கு எவ்வித இடையூறும் சிறிதாயி னும் நணுகாது என்று உணர்ந்தாரேனும், ஆன்றோர் செய்தபிரகாரம் தாமும் செய்து அந்த ஆன்றோர் ஒழுக்கத்தைப் பேணவேண்டும் என் றும், அதனைத் தமது மாணக்கர்க்கு அறிவுறுத்தவேண்டும் என்றும் கொண்டே, முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய விநாயகக் கடவுளை வாழ்த்துதலாகிய மங்கல வாழ்த்துக் கூறுகின்றார்.

மங்கல வாழ்த்து

(க) கல்லா னிழல்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

(உ) (இதன் பொருள்) திருக்கைலாசத்தின் கண்ணேயுள்ள அருள் வடிவாகிய கல்லால விருக்ஷத்தின் கீழே வீற்றிருந்தருளி, இந்தச் சிவஞானபோத சாத்திரம் வாயிலாகச்,சிவாகமப்பொருள்கள் ஒன்றோடொன்று மாறுபடுவனவாக மலைவுற்று வினவிய நந்திபெரு மானுக்கு உளவாகிய சந்தேகங்களை நீக்கி யருளிய, ஸ்ரீகண்ட ருத்தி ரப் பெருமான் மேன்மேலும் கருணைகூர்ந்தருளும் பொருட்டு, சுயம்பு மூர்த்தியாகிய விநாயகக் கடவுளுடைய இரண்டு திருவடித் தாமரைகளையும் மெய்யன்பர்கள் தமது சிரசின்கண்ணே சூடுவர் என்பதாம்.

(ங) அவரது திருவடிகள் இரண்டனுள் வலத்திருவடி சேதன சேதனப் பொருள்களை யெல்லாம் ஒருவர் அறிவிக்க வேண்டாது தானே அறியும் அறிவாகிய முற்றறிவு என்றும், இடத் திருவடி அந்தப் பொருள்களை யெல்லாம் செயற்படுத்தும் முற்றுத் தொழில் என்றும் உணர்தற்பாலனவாம்.

(ச) ஆகவே, அவரது முற்றறிவே ஒரு திருவடி எனவும், முற்றுத்தொழிலே மற்றைத் திருவடி எனவும் ஓர்க.

(ரு) ஆன்மாக்களுடைய அறிவு எப்பொருளையும் ஒவ்வொன்றாக அறியும் சிற்றறிவாயும், அவர்களுடைய தொழில் எப்பொருளையும் நினைத்தவாறு செய்ய இயலாத சிறுதொழிலாயும் உள்ளன.

(சு) ஆதலால், அவரது முற்றறிவாகிய திருவடியையின்றி ஆன்மாக்களாகிய நாம் ஒன்றை அறியவும் இயலேம், அவரது முற்றுத தொழிலாகிய திருவடியையின்றி நாம் ஒன்றையும் செய்யவும் இயலேம் என்று உணர்ந்து, நமது அறிவுஞ் செயலும் இழந்து திருவருள் வியாபகத்தில் அடங்கி நிற்றலே அவரது திருவடியைச் சூடுதல் என்பதன் பொருளாம்.

(எ) தாள்தலை என்னும் இரண்டும் வேறு சொற்களாயும், அவ்விரண்டும் புணருங்கால் தாடலை என ஒன்றாயும் நிற்குமாறுபோல, சீவான்மா பரமான்மா என்னும் இரண்டும் வேறு பொருள்களாயும், முத்தி தசையிலே ஆன்ம போதமும் கணவொளியும்போல வேறுபடாது அனன்னியமாயும் நிற்கும்.

(அ) உலகததிலே புதல்வனிடத்திற் செய்யும் வழிபாடு தந்தையர்க்கு மிகுந்த மகிழ்ச்சியை விளைவிக்குமன்றோ? அந்த முறைமை பற்றி விநாயகக் கடவுளை வழிபடுதல் சிவபெருமானை மகிழ்விக்கும் என்பதும், அவ்விருவர்க்கும் பேதமின்றாம் என்பதும் போதர, வில்லார் அருளிய பொல்லார் இணைமலர் புனைவரே என்றார்.

(கூ) மேலே கூறிய "கல்லால்" என்றற் றொடக்கத்த வஞ்சித் துறைச் செய்யுள் கல், ஆல், நிழல், மலைவு, இல்லார், அருளிய, பொல்லார், இணை, மலர், நல்லார், புனைவர், ஏ என்னும் பன்னிரண்டு சொற்களையுடையது.

(கo) இந்தப் பன்னிரண்டு சொற்கள் கொண்டு இந்த நூல் பன்னிரண்டு சூத்திரங்களால் அமையப்பெற்றது எனவும்,

(கக) கல், ஆல், நிழல், மலைவு, இல்லார், அருளிய என்னும் முன் ஆறு சொற்கள் கொண்டு பொதுவதிகாரமாகிய பொது வியல்பு முன் ஆறு சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

(கஉ) போல்லார், இணை, மலர், நல்லார், புனைவர், ஏ என்னும் பின் ஆறு சொற்கள் கொண்டு உண்மையதிகாரமாகிய சிறப்பியல்பு பின் ஆறு சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

(கங) கல், ஆல், நிழல், என்னும் மூன்று மொழிகள் கொண்டு பதி, பாசம், பசு என்னும் முப்பொருள்களுக்குப் பிரமாணம் கூறுவதாகிய பிரமாணவியல் முதலாம், இரண்டாம், மூன்றும், சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

(கச) மலைவு, இல்லார், அருளிய என்னும் மூன்று மொழிகள் கொண்டு அந்தப் பசு பாசம் பதி என்னும் முப்பொருள்களுக்கு இலக்கணம் கூறுவதாகிய இலக்கணவியல் நான்காம், ஐந்தாம், ஆறும் சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

(கரு) போல்லார், இணை, மலர், என்னும் மூன்று மொழிகள் கொண்டு, அப் பதி, பசு, பாசங்களின் இலக்கணத்தை அறிந்து அதனாலாகிய பயன் பெறுதற்கு ஏதுவாயுள்ள சாதனம் கூறுவதாகிய சாதனவியல் ஏழாம், எட்டாம், ஒன்பதாம் சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

(கசு) நல்லார், புனைவர், ஏ என்னும் மூன்று மொழிகள் கொண்டு அச் சாதனத்தானாகிய பயனை வகுத்துக் கூறுவதாகிய பயனியல் பத்தாம், பதினொராம், பன்னிரண்டாஞ் சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும் குறிப்பால் உணரக் கிடந்தது.

(கஎ) இங்ஙனம் நூலிலே கூறப்படும் பொருள்களை யெல்லாம் குறிப்பால் தன்னகத்தே அடக்கி நிற்றல் மங்கல வாழ்த்துக்கு இலக்ஷணமாம் என்று ஓர்க.

[ஸ்ரீ காசிவாசி செந்திநாதையர் செய்த சிவஞானபோத வசனாலங்கார தீபம் - ஸ்ரீ பாஷ்யம்.]

# சிவஞானபோதம் :—சூத்திரம், கருத்துரை, கண்ணழிவு, அதிகரணம், வார்த்திகப் பொழிப்பு, சூரணி, விவர சூசீபத்திரம்

## I பொது அதிகாரம் - க. பிரமாண இயல்

### முதற் சூத்திரம் (பதி உண்மை)

அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையில்[1]
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்[2]
அந்தம்ஆதி என்மனார் புலவர்.[3]

என்பது சூத்திரம்.

**கருத்துரை** :-எனனுதலிற்றோவெனின், சங்காரகாரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் எனபதுணர்த்துதனுதலிற்று.

| கண்ணழிவுரை அதிகரணம் | வார்த்திகப் பொழிப்புரை | சூர்ணி |
|---|---|---|
| 1. [1]அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின் | [1]ஈண்டு, உளதாய் ஒருவனொருத்தியொன் றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்தென்றது :—<br>தோற்றமு மீறும் உள்ளதன்பாலே கிடத்தலின், | [1]சகம் பிறப்பிருப் பிறப்பாகிய முத்தொழிலையுடையது. |

| கண்ணழிவுரை அதிகரணம் | வார்த்திகப் பொழிப்புரை | சூர்ணி |
|---|---|---|
| 2. [2]தோற்றிய திதியே ஒடுங்கி மலத் துளதாம், | [2]இனி, ஒடுங்கின சங்காரத்தி னல்லது உற்பத்தி யில்லை யென்றது:— இல்லதற்குத் தோற்ற மின்மையின், உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின். | [2]அது அரனாலே உடையது. |
| 3. [3]அந்தம் ஆதி. | [3]இனி, சஙகாரமே முதலென்றது:— சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சஙகாரத்தின் வழியல்லது சுதந்தரமின்றி நிற்றலான். | [3]மற்றிருவரும் முத்தொழிற்படுவர்கள். |

## இரண்டாஞ் சூத்திரம்

(பாச உண்மை - பதியின் பொது இலக்கணம்)

அவையே தானே யாய்[1]இரு வினையில்[2]
போக்கு வரவு புரிய[3] ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.[4]

என்பது சூத்திரம்.

கருத்துரை:-என்னுதலிற்றோவெனின், புனருற்பவம் வருமா றுணர்த்துதனுதலிற்று.

| | | |
|---|---|---|
| 4. [1]அவையே தானே ஆய் | [1]ஈண்டு, இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் ருனேயாய் நிற்குமென்றது :— அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில், ஏகமென்றுசுட்டுவதுண்மையின் அத்துவிதமென்ற சொல்லே அந்நியநாத்தியை யுணர்த்து மாயிட்டு. | [1]அரன் உயிர்களின் இரண்டற நிற்பன். |
| 5. [2]ஆணையின் இரு வினையின் | [2]இனி, இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல் வனுணையின் வருமென்றது:— ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனதாக்கினை யாகலான். | [2]உயிர்களுக்குக் கன்ம பலனை அரனே கொடுப் பன். |
| 6. [3]போக்கு வரவு புரிய | [3]இனி, இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வரு மென்றது:— தோற்றமு மீறும் உள்ளதற்கல்லது உளதாத லின்மையான். | [3]உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும். |
| 7. [4]ஆணையின் நீக்கம் இன்றி நிற்கும். | [4]இனி, நீக்கமின்றி நிற்குமன்றே யென்றது. அவன் ஏகானேகமிரண்டு மின்றிச் சருவ வியா பியாய் நிற்றலான். | [4]அரன் சருவ வியா பகன். (ஆதலின் தனது ஆணையின் நீக்கமின்றி நிற்பன்.) |

## மூன்றுஞ் சூத்திரம் (பசு உண்மை)

உளதில தென்றலின்[1] எனதுடல் என்றலின்[2]
ஐம்புலன்[3] ஒடுக்கம் அறிதலில்[4] கண்படில் [ன்[6]
உண்டிவினை யின்மையின்[5] உணர்த்த உணர்தலி
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.[7]

என்பது சூத்திரம்.

கருத்துரை .-என்னுதலிற்றோவெனின், ஆன்மப் பிரகாச முணர்த்துதனுதலிற்று.

| கண்ணழிவுரை அதிகரணம் | வார்த்திகப் பொழிப்புரை | சூர்ணி |
|---|---|---|
| 8. [1]இலது என்றலின் ஆன்மா உளது. | [1]ஈண்டு, இலதென்றலின் ஆன்மா வுளதென்றது எவற்றினையும் அன்றன் றெனவிட்டு ஆன்மா இலதென்று நிற்பதுளதாதலின் அதுவே அவ்வான்மாவா மென்றது. | [1]இல்லையென்கிற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிர் உண்டு. |
| 9. [2]எனது உடல் என்றலின் ஆன்மா உளது. | [2]இனி, எனதுட லென்றலின் ஆன்மா உளதென்றது :— என் பதி என் மனையென்றாற்போல என்கை என்காலென நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது. | [2]எனது உடல் என்று பொருட்பிறிதின் கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்குவேறாய் உயிர் உண்டு. |
| 10. [3]ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது. | [3]இனி, ஐம்புலனறிதலின் ஆன்மாவுளதென்றது: ஐம்புலனாகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின் இவைவைந்தினையும் ஐம்பயனு மறிவதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது. | [3]ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர் உண்டு. |

| | | |
|---|---|---|
| 11. [4]ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது. | [4]இனி, ஒடுக்கமறிதலின் ஆன்மாவுளதென்றது: நனவின்கட் கனவு கண்டாமென்றுங் கண்டிலமென்றும் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது. | [4]கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே, அக் கனவுடற்கு வேறாய் உயிர் உண்டு. |
| 12. [5]கண்படில் உண்டி வினை இன்மையின் ஆன்மா உளது. | [5]இனிக் கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மா வுளதென்றது:— ஒடுங்கினவிடத்து இன்பத் துன்பஞ் சீவனம் பிரகிருதிக்கின்மையின் ஒடுங்காதவிடத்து இன்பத் துன்பஞ் சீவியா நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது. | [5]நித்திரையிலும் பிராணவாயுத் தொழில் பண்ணவுஞ் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாத படியினாலே, பிராண வாயுவுக்கு வேறாய் உயிர் உண்டு. |
| 13. [6]உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது. | [6]இனி, உணர்த்த உணர்தலின் ஆன்மா உளதென்றது:— அவன் அறிந்தாங் கறிவனென் றறிவிக்க வறிந்து உபதேசியாய் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது. | [6]மறந்து மறந்து நினைகிற படியினாலே, மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு. |
| 14. [7]மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது. | [7]இனி, மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளதென்றது:— அவை தாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலான். | [7]எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினாலே அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு. |

## உ. இலக்கண இயல்

### நான்காஞ் சூத்திரம் (பசு இலக்கணம் போது)

அந்தக் கரணம் அவற்றினொன் றன்றவை[1]
சந்தித்த தான்மாச் சகசமலத் துணராது[2]
அமைச்சர சேய்ப்பகின் றஞ்சவத் தைத்தே.[3]

என்பது சூத்திரம்.

கருத்துரை :-என்னுதலிற்றோவெனின், இதுவுமது.

| கண்ணழிவுரை அதிகரணம் | வார்த்திகப் பொழிப்புரை | சூர்ணி |
|---|---|---|
| 15. [1]அந்தக் கரணம் அவற்றின் ஒன்று அன்று. | [1]ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தி யகங்கார சித்தங்களி லொன்றன் றென்றது :— அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான். | [1]அந்தக் கரணங்களுக்கு உயிர் உட்கூடினொலன்றித் தொழில் இல்லாதபடியினாலே, அந்தக் கரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு. |
| 16. [2](ஒன்றன்றாயினும்) சகசமலத்து உணராதுஅவை சந்தித்தது. | [2]இனி, இவ்வான்மாச் சகச மலத்தினா லுணர் வின் றென்றது :— அதுதான் ஞான திரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றலான். | [2]மலமறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை. |

| | | |
|---|---|---|
| 17. [3]அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று அஞ்சு அவத்தைத்தே. | [3]இனி, இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியம் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்குமென்றது :— அதுதான் மலசொரூபத்தின் மறைந்து அரூப சொரூபியாய் நிற்றலான். | [3]உயிர் மூன்றவத்தைப்படும். |

## ஐந்தாம் சூத்திரம் (பாச இலக்கணம்)

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந் தறியா[1] ஆங்கவை போலத்
தாந்தம் உணர்வின் தமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.[2]

என்பது சூத்திரம்.

கருத்துரை :-என்னுதலிற்றோவெனின், இவ்வான்மாக்களிடத்துத் தமது முதலுபகார முணர்த்துதனுதலிற்று.

| | | |
|---|---|---|
| 18. [1]விளம்பிய உள்ளத்து மெய் வாய்கண்மூக்கு அளந்து அறிந்து அறியா. | [1]ஈண்டு, ஐயுணர்வுகள் ஆன்மாவா லுணருமென்றது :— அவற்றினுன் ஆன்மா ஒற்றித்துக் காணினல்லது அவை ஒன்றையும் விடயியாவாகலான். | [1]உயிராலே தத்துவங்களெல்லாந் தொழில் செய்யும். |
| 19. [2]ஆங்கு அவை போல தாம் தம் உணர்வின் தமியருள் காந் தம் கண்ட பசா சத்து அவையே. | [2]இனி, இதுவுந் தமது முதலாலே யுணருமென்றது :— இவ்வான்மாத் தன்னாலே யுணருமிந்திரியங்களைப் போலத் தானுந் தன்னை யுணராது நிற்றலான். | [2]அரனாலே உயிர்களெல்லாம் அறியும். |

## ஆறுஞ் சூத்திரம் (பதியின் சொரூப இலக்கணம்)

உணருரு அசத்தெனின் உணரா தின்மையின்[1]
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே.[2]

என்பது சூத்திரம்.

கருத்துரை :-என்னுதலிற்றோவெனின, சத்தும் அசத்தும் வரைசெயதுணர்த்துத னுதலிற்று.

| கண்ணழிவுரை அதிகாரணம் | வார்த்திகப் பொழிப்புரை | சூர்ணி |
|---|---|---|
| 20. [1]உணருரு அசத்தெனின் உணராது இன்மையின் | [1]ஈண்டு அறிவினு லறியப்பட்ட சுட்டு அசத்தென்றது :— அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான். | [1]உயிரறிவினுலே அறியப்பட்டதெல்லாம் அழியும். |
| 21. [2]இருதிறன் அல்லது சிவசத்து ஆம்எனஇரண்டு வகையின் இசைக்கும் மன் உலகே. | [2]இனி இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்குமனுதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்று உணரற்பாற்று :— பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவதின்மையானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசமின்மையானும். | [2]அப்பிரமேயமாகஅறியப்பட்டவனே அரன். |

# II உண்மை அதிகாரம்

## க. சாதன இயல்

### ஏழாஞ் சூத்திரம் (பசுவின் சிறப்பிலக்கணம் - அதிகாரி இயல்பு)

யாவையும்,சூனியம் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியா(து)[1] அசத்தில தறியாது[2]
இருதிறன் அறிவுள(து) இரண்டலா ஆன்மா.[3]

என்பது சூத்திரம்.

கருத்துரை :-என்னுதலிற்றோவெனின், மேலதற்கோர் புறனடை யுணர்த்துத னுதலிற்று.

| | | |
|---|---|---|
| 22. [1]யாவையும் சூனியம் சத்து எதிர் ஆகலின் சத்தே அறியாது. | [1]ஈண்டு, சத்தினிடத் தசத்துப் பிரகாசியாதென்றது :—<br>மெய்யினிடதுப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான். | [1]அரன் பாசத்தை அனுபவியான். |
| 23. [2]அசத்து இலது அறியாது. | [2]இனி, அசத்தினுக் குணர்வின்றென்றது :—<br>அதுதான் நிரூபிக்கிலின்றாகலான். | [2]பாசம் அரனை அனுபவியாது. |
| 24. [3]இருதிறன் அறிவு உளது இரண்டலா ஆன்மா. | [3]இனி, இருதிறனறிவுள திரண்டலாவான்மா வென்றது :—<br>இவ்விரண்டினையு மறிவதாய் உபதேசியாய் நின்ற அவ்வறிவு இரண்டன்பாலுமுளதாயுள்ள அதுவே அவ்வான்மாவாமென்றது. | [3]உயிர் அவ்விரண்டினையும் அனுபவிக்கும். |

## எட்டாஞ் சூத்திரம் (குருவுமாய் உணர்த்தும் முறை)

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்[3]
தமமுதல் குருவுமாய்த்[2] தவத்தினில் உணர்த்த[1]விட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.[4]

என்பது சூத்திரம்.

**கருத்துரை** :-என்னுதலிற்றோவெனின், ஞானத்தினை யுணரு முறைமையினை உணர்த்துதனுதலிற்று.

| கண்ணழிவுரை அதிகரணம் | வார்த்திகப் பொழிப்புரை | சூர்ணி |
|---|---|---|
| 25. [1]தவத்தினில் உணர்த்த | [1]ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞானநிகழுமென்றது :—<br>மேற்சரியை கிரியாயோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான். | [1]உயிருக்கு நல்லறிவு தவத்தினாலேயே வரும். |
| 26. [2]தம் முதல் குருவுமாய் (உணர்த்த) | [2]இனி, இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் தானே குருவுமா யுணர்த்துமென்றது :—<br>அவன் அன்னியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான். | [2]உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே. |
| 27. [3]ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து என | [3]இனி, இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மையுணராவென்றது :—<br>அவைதாம் பளிங்கிலிட்ட வன்னம் போற் காட்டிற்றைக் காட்டி நிற்றலான். | [3]உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையும் அறிய மாட்டாது. |

| | | |
|---|---|---|
| 28. [4]விட்டு அன்னிய மின்மையின் அரன்கழல் செலும். | [4]இனி, இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேருவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையுமென்றது :— ஊசல் கயிறற்ருற் ருய்தரையே யாந்துணை யான். | உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்ருல் தன்னையும் அறியும். |

## ஒன்பதாஞ் சூத்திரம் (ஆன்ம சுத்தி)

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி[1]
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்நிழலாம்பதி[2]விதிஎண் ணும்அஞ்செழுத்தே.[3]

என்பது சூத்திரம்.

**கருத்துரை** :-என்னுதலிற்ருேவெனின், ஆன்ம சுத்தி பணணுமாறுணர்த்துத னுதலிற்று.

| | | |
|---|---|---|
| 29. [1]ஊனக்கண் பாசம் உணராப்பதியை ஞானக் கண்ணினின் சிந்தை நாடி | [1]ஈண்டு, அம்முதலை ஞானக்கண்ணினுலே காண்க வென்றது :— அவன் வாக்கு மனதீத கோசரமாய் நிற்ற லான், | [1]உயிர் அரன் ஞானத்தினுலேயே அரனைக் காணும். |

| கண்ணழிவுரை அதிகரணம் | வார்த்திகப் பொழிப்புரை | சூர்ணி |
|---|---|---|
| 30. [2]உராத்துனைத் தேர்த்து எனப் பாசம் ஒருவத் தண்ணிழலாம் பதி. | [2]இனி அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபமென்றுணரற்பாற்று :— இனி, அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபமென்றது, வேற்றியல்பாகிய வன்னபேதங்களை வேற்றியல்பென்று கண்டு கழிப்பின் உளதாய் நிற்பது படிகசொரூபமாந்துணையான். | [2]உயிர் பாசத்திலே பற்றற்றால், அரன் வெளிப்படுவன். |
| 31. [3]விதி எண்ணும் அஞ்செழுத்தே. | [3]இனி, இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்கவென்றது :— இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்புதின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின் அது நீக்குதற்கெனக் கொள்க. | [3]பஞ்சாட்சர செபம் பண்ணினால், வாசனை மலம் போம். |

## உ. பயனியல்

### பத்தாஞ் சூத்திரம் (பாச நீக்கம்)

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏக னாகி[1] இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.[2]

என்பது சூத்திரம்.

**கருத்துரை** :-என்னுதலிற்றோவெனின், பாச க்ஷயம் பண்ணுமாறுணர்த்துதனுதலிற்று.

| | | |
|---|---|---|
| 32. [1]அவனே தானே ஆகிய அந்நெறி ஏகன் ஆகி | [1]ஈண்டு, பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத் தேகனாகி நிற்க வென்றது :—<br>அவ்வாறு நிற்கவே யானென தென்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தை யணையு மாகலான். | [1]அரனுடன் ஒன்றாகி நில். |
| 33. [2]இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை இன்றே. | [2]இனி இறைபணி வழுவாது நிற்கவென்றது :-<br>அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யாதாகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியாவாகலான். | [2]உன் தொழிலெல்லாம் அரன்பணி என்றே கொள். |

## பதினொராஞ் சூத்திரம் (சிவப்பேறு)

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்[1]
அயரா அன்பின் அரன்கழல் செலுமே.[2]

என்பது சூத்திரம்.

**கருத்துரை** :- எனனுதலிற்றோவெனின், பரமேசுரனது சீபாதங்களை யணையுமா றுணர்த்துதனுதலிறறு.

| கண்ணழிவுரை அதிகரணம் | வார்த்திகப் பொழிப்புரை | சூர்ணி |
| --- | --- | --- |
| 34. [1]காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போல் காண உள்ளத்தைக் கண்டு காட்டல். | [1]ஈண்டு, அவனும் அவற்றது விடயத்தை யுணரு மென்றது :— இவ்வான்மாக்கள் அவனையின்றி யமைந் தொன்றையும் விடயியாவாகலான். | [1]ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அனுபவிப்பன். |
| 35. [2](அதனை) அயரா அன்பின் அரன் கழல் செலுமே. | [2]இனிப் பத்தியினுன் மறவாதேத்த அவனது சீபாதத்தை யணையு மென்றது :— அவன் அன்னியமின்றிச் செய்வோர் செய்திப் பயன் விளைத்துநிற்றலான். | [2]அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கியமாய்ப் போவன். |

## பன்னிரண்டாஞ் சூத்திரம் (சீவன்முத்தி)

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம கழீஇ[1] அன்பரொடு மரீஇ[2]
மாலற நேயம் மலிநதவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே.[3]

என்பது சூத்திரம்.

**கருத்துரை** :-என்னுதலிற்றோவெனின், அசிந்திதனைய் நின்ற பதியைச் சிந்திதனைக் கண்டு வழிபடுமா றுணர்த்துதனுதலிற்று.

| | | |
|---|---|---|
| 36. [1]செம்மலர் நோன் தாள் சேரல் ஒட்டா அம் மலம் கழீஇ | [1]ஈண்டு, ஆணவ மாயை கான்மியமென்னு மலங்களைக் களைகவென்றது. அவைதாம் ஞானத்தை யுணர்த்தாது அஞ்ஞானத்தை யுணர்த்துமாகலான். | [1]மும்மலங்களையுங் களைக. |
| 37. [2]அன்பரொடு மரீஇ | [2]இனி, சிவபத்தர்களோ டிணங்குக வென்றது :— அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவராகலான். | [2]சிவஞானிகளுடனே கூடுக. |
| 38. [3]மால் அற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந் தானும் அரன் எனத்தொழுமே | [3]இனி, பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயததையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுகவென்றது :— அவன் மற்றிவ் விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாதவிடத்து அப்பிரகாசமாய் நிற்றலான். | [3]சிவஞானிகளையும் சிவலிங்கத்தையும் சிவனெனவே தேறி வழிபடுக. |

| கண்ணழிவுரை அதிகரணம் | வார்த்திகப் பொழிப்புரை | சூர்ணி |
|---|---|---|
| 39. [4]ஒழிபு | [4]இனி, இவ்விடங்களின் வழிபடுக வென்றது :- நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும் புருடன் அவையாகாவாறு அப்புருடனு மாகலான். | [4]வழிபடாமையை ஒழிக. |

ஆக சூத்திரம் 12; கண்ணழிவுரை-அதிகரணம் 39; சூர்ணி 39; வார்த்திகம் பொழிப்புரை 39, கருத்துரை வார்த்திகம் 12 ; (மூலபாடம் தொடர்ந்த எண் 1, 6, 11, 21, 25, 28, 31, 35, 40, 44, 47, 50; முதல் சூத்திரம் மூலபாடம் வார்த்திகம் 2-ம், மூன்றும் சூத்திரம் மூலபாடம் வார்த்திகம் 12, 15-ம் உள்பட) வார்த்திகம் மொத்தம் 54 காண்க.

உதாரண வெண்பாக்கள் 81 ; அவையடக்கம் 1 ; ஆக வெண்பா 82 ; மங்கல வாழ்த்து 1; ஆக, சூத்திரம் 12, அதிகரணம் 39, வெண்பா, அவையடக்கம் உள்பட 82 = 133-ம் மங்கல வாழ்த்தும் முற்றும்,



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## திருத்துறையூர் - அருணந்தி சிவாசாரியார்

அருளிச்செய்த

# 4 - க. சிவஞானசித்தியார் - பரபக்கம்

### காப்பு

ஒருகோட்டன் இருசெவியன் மும்மதத்தன்
நால்வாய்ஐங் கரத்தன் ஆறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
தரும்ஒருவா ரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி ஓவாதே
இரவுபகல் உணர்வோர் சிந்தைத்
திருகோட்டும் அயன்திருமால் செல்வமும்ஒன்
றோஎன்னச் செய்யும் தேவே. க

## மங்கல வாழ்த்து

### சிவபெருமான்

ஆதிநடு அந்தமிலா அளவில் சோதி
அருள்ஞான மூர்த்தியாய் அகிலம் ஈன்ற
மாதினையும் ஒருபாகத் தடக்கி வானோர்
மகுடசூ ளாமணியாய் வையம் போற்றப்
பாதிமதி யணிபவளச் சடைகள் தாழப்
படரொளிஅம் பலத்தாடும் பரனார் பாதத்
தாதுமலி தாமரைகள் சிரத்தே வைத்துத்
தளராத பேரன்பு வளரா நிற்பாம். உ

### சத்தி

ஈசனருள் இச்சைஅறி வியற்றல் இன்பம்
இலயமொடு போகமதி கார மாகித்
தேசருவம் அருவுருவம் உருவ மாகித்
தேவியுமாய்த் தேசமொடு செல்வ மாகிப்
பேசரிய உயிரையெலாம் பெற்று நோக்கிப்
பெரும்போகம்அவையளித்துப்பிறப்பினையும்ஒழித்திட்(டு)
ஆசகலும் அடியருளத் தப்பனுட னிருக்கும்
அன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம். ௩

### விநாயகர்

இயம்புநூல் இருந்தமிழின் செய்யு ளாற்றல்
இடையூறு தீர்ந்தினிது முடிய வேண்டித்
தயங்குபேர் ஒளியாகி எங்கும் நின்ற
தலைவனார் மலைமாது தன்னோ டாடிப்
பயந்தஐங் கரநாற்றோள் முக்கண் இரு பாதப்
பரியதொரு நீள்கோட்டுப் பெரிய பண்டிக்
கயந்தன்அடிக் கமலங்கள் நயந்து போற்றிக்
கருத்திலுற இருத்திமிகக் காதல் செய்வாம். ௪

### சுப்பிரமணியர்

அருமறைஆ கமம்அங்கம் அருங்கலைநூல் தெரிந்த
அகத்தியனுக் கோத்துரைக்கும் அருட்குருவாங் குருவை
திருமறைமா முனிவர்முனி தேவர்கள்தந் தேவன்
சிவனருள்சேர் திருமதலை தவநிலையோர் தெய்வம்
பொரும்அறையார் கழல்வீரர் வீரன் கையிற்
பூநீர்கொண் டோவாது போற்றும்அடி யார்கள்
கருமறையா வகையருளிக் கதிவழங்குங் கந்தன்
கழலிணைகள் எஞ்சிரத்திற் கருத்தில் வைப்பாம். ௫

### மெய்கண்டதேவ நாயனார்

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாங்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்

விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம். ௬

## அவையடக்கம்

மாலயன்மா மறைஅறியா ஆதி மார்க்கம்
வையகத்தா கமம்வேதம் மற்று முள்ள
நூலையெலாம் உணர்ந்திறைவன் கழலே நோக்கு
நோன்மைஅருந் தவர்முன்யான் நுவலு மாறு
வேலையுலா வுந்திரைகள் வீசி யேறி
வேறேழு மொன்றாகி நின்ற போது
சாலவுமான் குளப்படியிற் றங்கி நின்ற
சலமதுதான் நேரென்னுந் தன்மைத் தாலோ. ௭

நீடுபுகழ் உலகுதனில மைந்தர் மாதர்
நேயமொடு தாம்பயந்த புதல்வர் வாயில்
கூடுமொழி மழலையொடு குழறி ஒன்றும்
குறிப்பரிதா யிடினுமிகக் குலவிப் போற்றி
மாடுநமக் கிதுவென்று கொண்டு வாழ்வர்
அதுபோல மன்னுதமிழ்ப் புலமை யோரென்
பாடுகவிக் குற்றங்கள் பாரார் இந்நூல்
பாராட்டா நிற்பர்அருட் பரிசி னாலே. ௮

## நூற்சிறப்பு

சுத்தவடி வியலபாக வுடைய சோதி
சொல்லியஆ கமங்களெலாஞ் சூழப் போயும்
ஒத்துமுடி யுங்கூட ஓரி டத்தே
ஒருபதிக்குப் பலநெறிகள் உளவா றுற்போற்
பித்தர்குண மதுபோல் ஒருகால் உண்டாய்ப்
பின்னொருகால் அறிவின்றிப் பேதை யோராய்க்
கத்திடுமான் மாக்களுரைக் கட்டிற் பட்டோர்
கனகவரை குறித்துப்போய்க் கடற்கே வீழ்வார்.

## நூற்கதிகாரியும் நூல்வழியும் பெயரும்

போதமிகுத் தோர்தொகுத்த பேதை மைக்கே
பொருந்திடு ரிவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல
ஏதுநெறி யெனுமவர்கட் கறிய முன்னாள்
இறைவனரு ணந்திதனக் கியம்ப நந்தி
கோதிலருட் சனற்குமா ரற்குக் கூறக்
குவலயத்தின் அவ்வழியெங் குருநாதன் கொண்டு
தீதகல எமக்களித்த ஞான நூலைத்
தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தி என்றே. ௧0

## நூற்கருத்து

இறைவனையும் இறைவனால் இயம்பு நூலும்
ஈண்டளவும் பொருளியல்பும் வேண்டுஞ் செய்தி
முறைமைகளும் பெத்தமொடு முத்தி யெல்லாம்
மூதுலகில் எமக்கியன்ற முயற்சி யாலே
சிறையுலவும் புனல்நிலவித் தோன்றும் பேய்த்தேர்ச்
செய்கைபோ லுண்டாய பொய்கொள் மார்க்கத்
துறைபலவுங் கடாவிடையாற் சொல்லிப் போக்கித்
துகள்தீர இந்நூலிற் சொல்ல லுறுவாம். ௧௧

## 1 - க. உலகாயதன் மதம்

இந்திர புரோகிதன் இயம்புமொரு நூலின்
தந்திர மெனுதறிவி னேடருளி லாமல்
சந்தனை புயத்துமண மாலைகள் தயங்க
உந்தியுல கத்திலுல காயதன் உரைப்பான். ௧௨

ஈண்டளவை காட்சிமன மாதிஇரு மூன்றாய்
வேண்டும்அனு மானமுத லானபல வேண்டா
பூண்டபொருள் பூதமவை புகழ்கடின சீதம்
தீண்டரிய வெம்மைசல னத்தினொடு சேர்வே. ௧௩

சாற்றுபெய ரானவை தலம்புனல் கனற்பின்
காற்றுமென லாம்இவை கலந்தகுண மோதின்
நாற்றம்இர தம்உருவம் நற்பரிச மாகும்
போற்றுமிவை நித்தஇயல் பாமிவை புணர்ப்பே. ௧௪

ஒத்துறு புணர்ச்சியின் உருக்கள்பல வாகும்
வைத்துறு கடாதிபல மண்ணின்வரு மாபோற்
புத்திகுணம் நற்பொறி புலன்களிவை யெல்லாம்
இத்தின்வரும் நீரினில் எழுங்குமிழி ஒத்தே. கரு

பூதமதின் ஒன்றுபிரி யப்புலன் இறக்கும்
நீதியினின் நிற்பன நடப்பனவும் முற்போல்
ஓதும்வகை யாகிஉறு காரியம உலந்தால்
[1]ஆதியவை யாம்இதனை அறிவதறி வாமே. கசு

வேறு

[2]இப்படி யன்றிக் கன்மம் உயிர்இறை வேறுண் டென்று
செப்பிடும் அவர்க்கு மண்ணோர் செய்திடுங் குற்ற மென்னோ
ஒப்பிலா மலடி பெற்ற மகனொரு முயற்கொம் பேறித்
தப்பில்ஆ காயப் பூவைப் பறித்தமை சாற்றி னாரே. கஎ

செய்திடும் கன்ம மெல்லாம் செய்தவர் தம்மைப் பற்றி
எய்திடு மென்னில் இங்கே மாய்ந்திடும் ஏய்வ தெங்ஙன்
மெய்தரு தூலங் கெட்டுச் சூக்கமாய் மேவும் என்னில்
ஐயனே தீபம் போனால் அதுவொளி யாவ துண்டோ. கஅ

மாய்ந்துபின் வயலி லிட்ட வைதழை பலிக்கு மாபோல்
ஏய்ந்திடும் கன்ம மென்னில் இட்டிடத் திசையும் மேனி
ஓய்ந்துவந் தவரை உண்ணப் பண்ணுஞ்சோ றுதரத்தற்றால்
வாய்ந்திடும் மலம்வயிற்றிற் கொண்டிடும் வழக்குவைத்தாய்.

உருவமும் உணர்வும் செய்தி ஒத்திரா கன்மம் என்னின்
மருவுகை விரல்கள் தம்மின் வளர்வுடன் குறைவுண் டாகி
வருவதிங் கென்ன கன்மம் செய்துமுன் மதியி லாதாய்
பெருகுபூ தங்கள் தம்மின் மிகுகுறைப் பெற்றி யாமே. உ௦

இன்பொடு துன்ப மெல்லாம் எய்துவ கன்ம மென்னின்
நன்புனல் சந்த னாதி நணுகவும் அணுக வொண்ணா
மின்பொலி அழலி னோடு மேவுவ நன்மை தீமை
என்செய்த தியம்பி டாய்நீ இவையெலாம் இயல்ப தாமே.

காயத்தின் குணம தன்றிக் கண்டதான் மாவுண் டாயின்
மாயத்திற் சொல்லி டாதே மனமுதல் ஆறி னுக்கும்

1 ஆதியிவை. 2 இப்படியின்றி.

நேயத்த தாக வேண்டும் அன்றியே நிகழ்த்து முண்மை
தேயத்தின் முயற்கொம் பெல்லை செப்புவோர் செய்தியாமே.

அருவமே இறைவ னாகில் அறிவின்று காய மாகும்
உருவமே யென்னிற் பூதக் கூட்டத்தில் ஒருவ னாகும்
மருவிய இரண்டுங் கூடி நிற்பவன் என்னின் முண்மேல்
இருவிசும பொருகல் லேந்தி நிற்குமோ இயம்பி டாயே. உ௩

பூதத்தே அன்ன மாகி அன்னத்தால [1]உடலும் புத்தி
பேதித்தே மனமு மாகிப் பிரிந்தமை திருநத இன்று
வேதத்தே யுரைக்க என்னோ மேதினி யோர்க ளெல்லாம்
கேதத்தே வீழ்ந்து வேறு நெறியல கேட்கு மாறே. உ௪

போகத்தை மண்ணிற் கண்டு விட்டுப்போய் விண்ணிற்கொ
மோகத்த ராகி அல்லல் முயன்றுழல மூட ரெல்லாம் [ள்ள
தாகத்தில்தண்ணீர்கண்டு விட்டுப்போய்த் தண்ணீர்கேட்டுச்
சோகித்தே உண்ண எண்ணித் துயருறு வார்கள் அந்தோ.[2]

வாழவே வலலை [3]வாமி வலக்கைதா என்னு யிர்க்குத்
தோழனீ யுன்னை யொப்பார் சொல்லிடி னில்லை கண்டாய்
கோழைமா னுடர்தீ தென்னுங் கொலைகள வாதிகொண்டே
சூழும்வார் குழலார் மொய்ப்பச் சுடரெனத் தோன்றி னாயே.

ஈசனார் அயனார் மாலோ டிந்திரன் தெரிவை மார்பால்
பேசொணா வகைகளெல்லாஞ் செய்தன்றோ பெரியோ ரானார்
ஆசையால் அவர்போல நாமும் ஆகவே வேண்டு மாயின்
வாசமார் குழலா ரோடும வல்லவா கூடி வாழ்மின். உள

தையலார் ஊட லாடத் தாமவ ரோடுங் கூடிச்
செய்யதா மரையை வென்ற சீறடி செம்பஞ் சூட்டி
மெய்யெலாம் பாதஞ் சூடும வேடத்தார் மெய்யிற் கூடா
மையல்மா னுடர்பொய் மார்க்க வேடத்தே மாய்கின் றாரே.

வாசமார் [4]குழலார் தங்கள் மணிஅல்குல் தடத்தே மூழ்கி
நேசமார் குமுதச் செவ்வாய் அமுதினை நிறைய உண்டு
தேசுலா மணிமென் தோள்மேற சேர்ந்துவீற் றிருந்தி டாதே
மாசுலாமனத்தோரெலலாமமறுமைகொண் டழிவர்மன்னோ.

---

[1]உடம்பு. [2]இது உகூ-ன் பின். [3]வாமீ. [4]குழலினார்கள்.

மதிநிலா நுதலா ரோடு மணிநிலா முன்றி லேறி
முதிர்நிலா எறிப்பச்செவ்வாய் இளநிலா முகிழ்ப்பமொய்த்த
கதிர்நிலா வடங்கொள் கொங்கைக் கண்கள்மார் பகல மூழ்கும்
புதுநிலா வியநன் போகம் விடுவர்புன் சமயத் தோரே.

ஊடுவ துணர்வ துற்ற கலவிமங் கையரை [1]யுள்கி
வாடுவ தடியில் வீழ்ந்து வருந்துவ தருந்த வம்பின்
கூடுவ துணர்வு கெட்டுக் குணமெலாம் வேட்கை [2]யேயாய்
நீடுவ தின்ப முத்தி இத்தில்நின் றூர்கள் முத்தர். நக

வீட்டினை உளதென் றோடி மெலிவதிங் கென்னை வீடு
[3]காட்டினோர் கண்டோர்கேட்டோர் கரியவை உண்டேல் காட்டீர்
நாட்டினில் அரச னாணைக் கிசையவே நடந்து நாளும்
ஈட்டிய பொருள்கொண் டிங்கே இன்பத்துள் இசைந்திடீரே.

## 1 - உ. உலகாயதன் மத மறுதலை

உள்ள தாவது கண்ட தென்றுரை
கொண்ட தென்னுல கத்துநீ
பிள்ளை யாய்வளர் கின்ற நாளுனைப்
பெற்ற தாயொடு தந்தையைக்
கள்ள மேபுரி கால னாருயிர்
உண்ண இன்றொரு காளையாய்
மெள்ள வேயுள ரென்று கொண்டு
விரும்பு மாறு விளம்பிடே. நந

இடித்து மின்னி இருண்டு மேகம்
எழுந்த போதிது பெய்யுமென்(று)
அடுத்த தும்அகில் சந்த முந்தி
அலைத்து வார்புனல் ஆறுகொண்(டு)
எடுத்து வந்திட மாலவ ரைக்கண்
இருந்து கொண்டல் சொரிந்ததென்று
முடித்த தும்இவை காட்சி [4]யன்றனு
மானம் என்று மொழிந்திடே. நச

[1] உள்ளி. [2] யாகி. [3] காட்டுவோர். [4] யன்றது.

காண்ட லோஅனு மான மாவதும்
காட்சி மூன்னதும் காட்சியேல்
பூண்ட பூத உடம்பி னுள்எழு
போதம் என்கொடு கண்டனே
மாண்ட வாயின் மனங்கொள் ஞானம்
உணர்ந்த தும்அனு மானமென்(று)
ஈண்டு பூத மியைந்த திவ்வுடல்
என்ப தென்பிர மாணமே. ௩௫

பழுதி லாமறை கண்ட நூல்பழு
தின்றி யுண்டது பாரின்மேல்
மொழிவர் சோதிட முன்னி யின்னது
முடியு மென்பது முன்னமே
அழிவி லாதது கண்ட னம்அவை
யன்றி யுஞ்சில ஆகமங்களின்
எழுதி யோர்படி ஏன்று கொண்டிரு
நிதியெ டுப்பதும் எண்ணிடே. ௩௬

பூத மானவை நித்த மென்று
புகன்ற தென்னே உருக்களாய்
ஆத லோடழி வாகு மாதலின்
ஆக்கு வோரவர் வேண்டிடும்
காத லோடு கடாதி மண்கொ
டியற்று வோருளர் கண்டனம்
சீத நீரி லெழுந்த கொப்புள்
நிகழ்ந்த மாருதச் செய்கையே. ௩௭

நீரின் வந்தெழு கொப்புள் நீரது
வாயெ ழும்நிகழ் பூதமும்
ஓரின் வேறுணர் வாயெ ழாஅவை
பூத மாகி உதித்திடும்
தேரின் நூறடை காய்செ றிந்தவை
சேர வேறு சிவப்பெழும்
பாரி னிற்பிரி யாது புந்தி
பழிப்பு டம்பு கிடக்கவே. ௩௮

கூறு சேர்வையின் வந்த போது
சிவப்பெ னும்குணம் ஒன்றுமே
வேறு வேறு புலன்கு ணங்கள்
உடற்கண் வந்து விளைந்ததென்
நூறு காயடை கூடும் [1]வேறொரு
வன்ற னுலென நோக்கிநீ
தேறு பூத செயற்கும் வேண்டும்
ஒருத்த னென்று தெளிந்திடே. ௩௯

ஆன ஐம்பொறி உண்டி நித்திரை
அச்சம் மைதுனம ஆதியாய்
ஊனில் வந்திடு முன்பி லாதவை
யென்று ரைக்கின் [2]உலூதைபோல்
வானின் வந்திடும் மாதர் ஆண்அலி
யாகி மானுடர் [3]ஆதியாய்
யோனி பன்மையும் இன்று பூதம்
உறும்பு ணர்ச்சியோர் தன்மையே. ௪௦

ஐந்து நான்கொரு மூன்றி ரண்டுடன்
ஒன்ற தாய்உட லங்களின்
வந்தி டாவுணர் விந்தி யங்களும்
வன்ன பன்மையும் இன்மையாம்
புந்தி யோடிய வன்ன போக
குணங்கள் பூத புணர்ச்சிதான்
தந்தி டாதிவை பேத மாயிட
வந்த வாவினை தந்தவா. ௪௧

அறிவு பூதம தென்னில் வேறு
புறத்த றிந்தமை கண்டிலம்
செறிவு தான்உட லத்தெ னில்சவ
மான போதுடல் தேருமோ
குறிகொ ளாதுடல் வாயு வானது
கூடி டாமையின் என்னின்நீ
பிறித ராதுயிர் நிற்க ஞானம்
உறக்க மென்பிற வாததே. ௪௨

---

[1] நோக்கு நீ. [2] ஒரோகை பூ. [3] ஆதியாம்.

அறிவு டற்குண மென்னில் ஆணைய
தாதி அந்தம் எறும்பதா
உறுமு டற்பெரி தான வற்றில்
உதித்தி டும்பெரி தாகவே
சிறுவு டற்செறி ஞான மும்சிறி
தாயி டும்பரி ணமமும்
பெறுமு டற்சிறி தாவ தென்பெரி
தாவ தென்சில பேசிடே. ௨௩

[1]போத மும்மெலி வாகி யும்மலி
பூத மானவை கூடலிற்
பேத மோடு பெருத்து டற்கள்
சிறுத்த பெற்றிமை என்றிடின்
ஓது டற்பெரி தான வுஞ்சிறி
தாயி டாசிறி தானவும்
நீதி யிற்பெரி தாயி டாமுனம்
உள்ள தன்மையின் நீடுமே. ௨௪

இயல்பு காண்இவை யென்னில் வேறிசை
பெண்ணொ டாணிரு தன்மையாஞ்
செயல்கொ ளாஇவர் செய்தி காரண
மாக வந்து செனிப்பதென்
இயல்ப தாமுடல் பூத காரிய
மாவ துமமிலே யாகுமால்
மயல தாம்வினை யாலொ ருத்தன்
வகுத்த தன்மையின் வந்ததே. ௨௫

கார ணம்அவை யென்ற தென்னை
கடாதி போல்நிகழ் காரியம்
நேர ணைந்து சமைந்து நின்றிடும்
என்ப தும்அது நேர்கிலோம்
போர ணைந்திடு மொன்றொ டொன்று
பொருந்து மாகில் வருந்தியும்
நீர ணைந்தொரு தீயி னின்றது
கண்ட தாயின் நிகழ்த்திடே. ௨௬

---

1 போதவும்.

பூத மேவு புணர்ச்சி யேபுரி
 காய கார ண மாகுமேல்
காதல் ஆணொடு பெண்ணும் மேவு
 புணர்ச்சி கார ண மாவதென்
[1]ஆதி யேஉல கத்தில் ஆணொடு
 பெண்ணு மாயணை காரியம்
நாதன் நாயகி யோடு கூடி
 நயந்த கார ணம் என்பரே. சஎ

கந்தம் வெம்மை கலந்தி டும்புனல்
 கன்மம் என்செய்த தென்றனை
சந்த னந்தழல் சார நீரிரு
 தன்மை யுற்றிடு [2]மாறதோர்
தந்த கன்மம் இரண்ட ணைந்து
 தருஞ்சு கத்தொடு துக்கமும்
சிந்தி யாஎழு சீவ னுற்றிடும்
 வேறு டற்கிலை தேறிடே. சஅ

இன்பம் எய்தி இருந்து நீவினை
 இல்லை இங்கியல் பென்றிடில்
துன்பம் எய்திடு வானென் மற்றிது
 சொல்லி டாய்சொல [3]வல்லையேல்
முன்பு செய்திடு கன்ம மென்றறி
 கன்ம முமமுதல் வன்னறிந்(து)
அன்பி னுலுறு 'விக்கும் அப்பயன்
 ஆங்க மைப்பொ டனாதியே. சகூ

அனாதி யேலமை வின்றெ னின்மல
 மாயை கன்மம் அணுச்சிவன்
அனாதி கன்மம் அணுக்கள் செய்ய
 அறிந்து கன்மம் உடற்செயா
அனாதி காரிய மாமு டற்கள்
 அசேத னம்அணை யாஅறிந்(து)
அனாதி யாதி அமைக்க வேண்டும்
 அமைப்பி னேடும் அனாதியே. ருO

---

[1]ஆதியாய். [2]மாறுபோல். [3]வில்லையேல்.

காணெ ணுகர ணங்க ளுக்குயிர்
கண்டி டாமையின் இன்றெனில்
காணு மோகடங் கண்ட கண்ணினைக்
கண்டு நிற்பதுங் கண்ணதே
காணெ ணுதுயிர் தானும இப்படிக்
கண்டி டுங்கர ணங்களைக்
காணெ ணுகர ணங்க ளுக்குயிர்
உண்மை யாவது கண்டிடே. ருக

அங்கி யானது தானும் ஒன்றை
அணைந்து நின்று நிகழ்ந்திடும்
பங்கி யாதுயிர் தானும் இப்படிப்
பற்றி யல்லது [1]நின்றிடா(து)
எங்கு மார்தயி லத்தை யுண்டெழு
தீப மான தெரிந்திடும்
அங்க தாம்உடல் நின்று கன்மம்
அருந்தி யாருயி ராவதே. ருஉ

[2]அறிவு தானுட லத்தின் வேறது
வாயி றந்து பிறந்திடின்
அறிவு முன்புள திங்கு வந்தும்
அறிந்தி டாமைய [3]தின்றெனின்
அறிவை யோகன வத்து நீநன
வத்தை அன்று தரத்திருந்(து)
அறியும் அவ்வறி வோம யக்கறி
வாத லாலறி யாதுகாண். ருங

இறந்தி டும்அறி வேபி றந்திடும்
என்ப திங்கிசை யாதெனின்
உறங்கி டும்பொழு தின்றி நின்றுணர்
விங்கு தித்திடு மாறதோர்
பிறந்த இவ்வுடல் போக வேறுடல்
பின்பு வந்தமை பேசிடின்
மறந்தி டுங்கன வத்தின் வேறுடல்
வந்த வாறு மதித்திடே. ருச

[1]நின்றிடா. [2]அறிவதாய். [3]தென்னெனின்.

கரணம் வாயு விடத்த டங்க
அடங்கி வந்தெழு காரியம்
மரண மான விடத்து மற்றிவை
மாய்ந்து பின்பு வருஞ்செயல்
கிரண மார்கலை கெட்டு திப்ப
இறப்பி ைேடு பிறப்பையும்
தரணி யோர்கள் மதிக்கு ரைப்பர்
உயிர்க்கும் இப்படிச் சாற்றிடே. ருரு

பூத மானவை காரி யங்கள்
பொலிந்து மன்னி அழிந்திடும்
ஆத லால்ஒரு நாதன் இங்குளன்
என்ற றிந்துகொள் ஐயனே
பேத மான கடாதி மண்ணினில்
வந்த வாறு பிடித்திடில்
கோதி லாத குலால ஞல்வரு
செய்கை யென்று குறிப்பரே. ருசா

வேதன் நாரணன் ஆர ணம்அறி
யாவி ழுப்பொருள் பேதைபால்
தூத ஞயிரு கால் நடந்திடு
தோழன் வண்மைசெய் தொண்டனுக்(கு)
ஆத லாலடி யார்க ளுக்கெளி
யான டிக்கம லங்கள்நீ
காத லாலணை ஈண்டன் வேண்டின
இம்மை யேதருங் கண்டிடே. ருஎ

பொன்கு லாவு மணிக்க லன்கள்
மலம்பு கிற்கை பொருந்திடா
மின்கு லாம்இடை யார்கள் தாமுல
கத்தின் வேட்கை விடும்பொருள்
புன்பு லால்மல மூத்தி ராதி
பொசிந்து நாறு புலைக்கலம்
என்கொ லாமிவர் மேல்வி ழுந்த
திவற்றின் என்பெற எண்ணியே. ருஅ

தோலி ரத்தம் இறைச்சி மேதை
எலும்பு மச்சை சுவேதநீ
ராலெ டுத்த முடைக்கு ரம்பை
அழுக்கி னேடு புழுக்குழாம்
நூலொ ழுக்கிடு கோழை ஈரல்
நுரைக்கு மூத்திர பாத்திரம்
சேல டார்த்தகண் ணார்கள் என்பது
தேர்ம லத்திரள் திண்ணமே. ருசு

ஆசை யுற்றுழல் சூக ரங்கள்
அசுத்த மேவி அளைந்துதின்
றேசு கித்தன வாயி டுஞ்சுகம
ஏழை யோடுறும் இன்பம்நீ
மாச தற்றெளிர் நித்த சுத்த
வளந்த ருஞ்சுக வாரிகாண்
ஈச னுக்கடி மைத்தி றத்தின்
இசைந்து நாம்பெறும் இன்பமே. சுO

குரோத மேகுண மாயி ருந்தவர்
சாந்தி நன்மை குறிக்கொளார்
அராக மேயணை வார்க ளாசை
அறுத்த இன்பம் அறிந்திடார்
பராவு தேவர் பராவு தூய
பராப ரன்னடி [1]பற்றுநீ
விராவு மெய்யில் விடாத இன்பம்
விளைந்தி டும்இது மெய்ம்மையே. சுக

காம மாதி குணங்க ளைச்சுக
மென்று கொண்டணை காதலால்
தூம மாரழல் அங்கி சீதம்
மலிந்த போது சுகந்தரும்
நாம மார்தரு சீதம் வெம்மை
நலிந்த போது [2]தருஞ்சுகம்
சேம மாகிய இன்ப மாமிகு
தெய்வ நன்னெறி சேரவே. சுஉ

---

[1] பற்றிநீ. [2] சுகந்தரும்.

படிக்கு நூல்கள் சிவாக மம்பசு
பாச மோடு பதித்திறம்
எடுத்தி யம்புவ தீசன் வார்கழல்
ஏத்தி டுந்தொழில் என்றுமே
விடுத்தி டும்பொருள் காம மாதிகள்
வேண்டி டும்பொருள் ஈண்டருள்
முடித்து மும்மலம் விட்டு நின்மல
னோடு நின்றிடல் முத்தியே. சுரு

## 2 - க. [1]சௌத்திராந்திகன் மதம்

நீதியார் வேத நூலின் நெறியலா அறங்கள் நாளும்
ஓதியோர் ஐந்துசீலம் உடையராய் உடல மூடிப்
போதிநீள் மரத்தின் மேவும் புத்தர்நால் வரினும் வைத்துச்
சாதிதான இலாதகொள்கைச்சௌத்திராந்திகன்முன்சாற்றும்.

முழுதுணர்ந் துலகிற் கோறல் முதற்செயல் முனிந்து மற்றும்
பழுதிலா அருளி னாலே பரதுக்க துக்க னாகித்
தொழுதுவா னவரும் போற்றத் தொல்பிட கங்க ளான
வழுவிலா கமங்கள் சொன்ன மாதவன் நாத னாவான். சுரு

மருவிய அளவை காட்சி மானமென் றிரண்டி வற்றால்
கருதிய பொருள்கள் ஞான ஞேயமாய்க் கணத்திற் பங்கம்
வருமுரு அருவம் வீடு வழக்கென நான்க தாகித்
தருமவை ஒன்றி ரண்டாய்த் தான்விரிந் தெட்டி னாமே. சுசு

உருஇயல் பூத மோடங் குபாதான ரூப மாகும்
அருஇயல் சித்தம் கன்மம என்றிரண் டாகும் வீட்டின்
மருவியல் குற்றம் கந்தம் எனவழங் கிடும்வ ழக்கின்
இருஇயல் உள்ள தோடங் கில்லதாம் இயம்புங் காலே. சுஎ

மண்புனல் அனல்கால் பூதம் வலிகந்தம் இரதம் வன்னம்
எண்தரும் [2]உபாதா யம்தான் இவைஇரு நான்குங் கூடி
உண்டொரு பொருளு ரூபம் உறுபுலன் [3]உபாங்க மோடக்
கண்டது சித்தம் கன்மம நின்றுதீ தென்றல் காணே. சுஅ

---

[1]புத்தரிற் சௌத்திராந்திகன். [2]உபாதானங்கள். [3]உபாங்க மோடிக்.

குற்றவீ டராக மாதி குணங்களைக் குறைத்த லாகும்
மற்றவீ டுருவ மாதி ஐந்தையும் மாய்த்த லாகும்
சொற்றருந் தொகைதொ டர்ச்சி மிகுததுரையென் றுமூன்றும்
உற்றிடும் வழக்கி ரண்டும் ஒன்றுமூன் றுகி ஆறும். கூகூ

ஒருவனென் றோதப் பட்டான் உருவாதி ஐந்தும் கூடி
வருபவ னென்று ரைத்தல் தொகையுண்மை வழக்க தாகும்
உருவமங் காதி யாய ஐந்தையும் ஒருவன் நின்று
தருவது தொகையி னின்மை வழக்கதாஞ் சாற்றுங் காலே.

காரண காரி யத்தின் தொடர்ச்சியாய்க் கால மூன்றின்
சோர்வறத் தோன றுமகெட்டு வழியென்கை தொடர்ச்சி யுண்
ஓர்தரின் ஒருவ னேஎக் காலத்தும உள்ளா னென்று [மை
தேர்வது தொடர்ச்சி யின்மை வழக்கதாம் செப்புங் காலே.

தோற்றிய பொருள்களெல்லாம் நாசமாம் என்றுசொல்லும்
மாற்றமுன் னுரைத்தல மறறை மிகுத்துரை வழககி னுணமை
போறறிய பொருள்கண் கட்குப் போனது போலமு திர்நது
வேற்றுமைப் பட்ட தென்கை மிகுத்துரை இல்வ ழக்கே.எஉ

உள்வழக் கில்வ ழக்குள் ளதுசார்ந்த உள்வ ழக்கோ(டு)
உள்ளது சார்ந்த இன்மை வழக்குடன் இன்மை சார்ந்த
உள்வழக் கின்மை சாாநத இலவழக் கென்றோ ராரும்
[1]உள்வழக் குளதுண் டென்கை முயற்கோ டின்றில் வழக்கே.

உணர்வுசார்ந் துணர்வு திக்கை யுள்ளது சார்ந்த உண்மை
உணர்வுபின் இன்று மென்கை யுள்ளது சார்ந்த இன்மை
உணர்வுமுன் பின்றித் தோன்றல இலலது சார்ந்த உண்மை
உணரினில் லதுசா ரின்மை உள்ளங் கை[2]உரோம நாணே.

சொன்னநால்வகையுமின்றிச்சொலலிடுமபொருள்களெல்லாம்
என்னையோ அறிகி லோம்பித் தேறியோ வானம் ஆன்மா
மன்னுகா லங்கள் திக்கு மனமுடன் வாக்கி றந்திட்(டு)
உன்னுமோர் இறையும் உண்டென் றுரைப்பது நித்த மனறே.

ஈங்குவான் செயற்கு வாரா [3]இயம்பிய பொருள்க ளெல்லாம்
தாங்குவான் உளதே யென்னில் தரித்திடா தருவ மாதல்

---

[1]உள்வழக் குணர்வுண் டென்கை. [2]உரோமங் காணே.
[3]இயம்பிடும்.

ஓங்குவான் ஓசைக் காதி [1]யெனிலதங் குருவின் கூட்டம்
நீங்குவா னின்றி எங்கும் நின்றதேல் எங்கு மின்றே. எசு

போதமுண் டுயிர்கட் கென்னில் [2]வாயிலும் புலனும் நாலும்
ஆய்தலின் றொட்டுத் தீட்டுக் கலப்பினில் அறியு மென்னில்
ஏதமுண் டிரவிற் பச்சை சிவப்புடன் ஏய்ந்த போது
கேதநின் றென்னே என்னும் ஐயமுன் கிடத்த லாலே. எஎ

அறிந்திடா வாயி லின்றேல் அறிவின்றும் ஐந்தும் பற்றி
அறிந்திடும் அறிவுண் டென்னில் ஐந்தினும் அறிவொன்றாக
அறிந்திட வேண்டும சார்பின் அறிந்திடு மென்னில் உன்னை
அறிநதிலோம் புத்த னென்றிங் கழகிது சொன்ன வாறே.

ஞானஞே யங்க ளன்றி ஞாதிரு என்று சொல்ல
ஆனதிங் கறிவோ அன்றோ அன்றெனில் அவனி போலும்
தானதிங் கறிவே என்னில [3]சமைத்திடு நன்ப ருப்புப்
போனகந் தனக்குத் தானே கறியெனப் புகன்ற தாமே. எகூ

உயிரினை அருவ தென்னில் உருவுடன் உற்று நில்லா(து)
உயிரினை உருவ தென்னில் உடலினில் உடல டங்கா(து)
உயிரினை அணுவ தென்னில உடல்பல துவார மோடும்
உயிரினை நித்த மென்னில் உணர்வுத யாந்த மின்றே. அ0

எங்குமாய் நின்ற தான்மா என்றிடின் எங்கும் இன்றும்
தங்கிடு நிறைவு தத்தம் சரீரங்கள் தோறு மென்னின்
மங்கிடும் உடலத் தோடே வடிவினில் ஓரி டத்தே
அங்கது நின்ற தென்னில் அடிமுடி அறிவின் றாமே. அக

சாற்றிய காலம் இங்குத் தங்கிய வாறி தென்னை [னில்
தோற்றுவித் தளித்துப் போக்கும் தொழிலவை கால மென்
போற்றிய பொருளில்புக்குப் பிணங்கிடும் பொருட்பின் இன்
தேற்றிய இல்வ ழக்குத் திரவியத் தியல்பி னுமே. [றும்

எனக்குநீ கிழக்கி ருந்தா யாகின்மேற் கென்றாய் என்பால்
எனக்குமேற் கிருந்தான என்பாற கிழக்கென இயம்புந் திக்குத்
தனக்குநாம் கொள்வ தெப்பால் சாற்றிடாய் இல்வ ழக்குத்
தனக்குள தாகும் உண்மை தானில தாகு மன்றே. அங

---

[1]யெனினத னுருவின். [2]வாயில்ஐம் புலனும். [3]சமைந்திடு.

உலகினைப் படைத்தான் என்றாய் ஒருவனிங் குள்ள தாயின்
உலகினைப் படைக்க வேண்டா இல்லையேல் படைக்க வொண்ணா(து)
உலகினுக் குபாதா னந்தான் உள்ளதாய்க் காரி யத்தாம்
உலகினைப் படைக்கில் [1]அங்கும் உளதில தாவ துண்டே. அச

உள்ளது கடாதி போல உதிப்பித்தான் என்று ரைக்கின்
மெள்ளவே யெங்கு நின்று விதித்தனன் உலகின் மீது
வள்ளல்[2]தான் நின்றா னென்னில் வந்ததாம் உலக முன்னே
தள்ளிடா தெங்கும் நிற்கின் எங்குமுன் தந்த தாமே. அரு

இல்லது கருணை யாலே இயற்றினன் இறைவன் என்னில்
கொல்லரி உழுவை நாகம கூற்றமுங் கொண்டு தோற்ற
வல்லவன்கருணை யென்னோ வலியினால் வேண் டிற் றெல்லாம்
பல்கவே படைத்தா னுயிர்ப் பித்தரைப் பணிந்தி டாயே. அசு

பெறுவதிங் கென்படைத்துப் பெற்றது விளையாட்டென்னின்
சிறுமழ விறைய தாகும் செய்திடும் கன்மத் தென்னின்
உறுபெருங் கன்மஞ் செய்வோர் முன்புள ராவர் உண்மை
அறிவுறின் ஞால மெல்லாம் அனாதியென் [3]றறிந்தி டாயே.

உருவொடு நின்றா னென்னின் உருவமுன் படைத்தா வேண
உருவவன் இச்சை யென்னில் உலகெலாம் இச்சையாகும்[டும்
உருவுல கத்து ளோர்கட் குறுவது கன்மா லென்னின்
உருவுடை யோர்கட் கெல்லாம் உற்றது கன்மத் தாமே.

அருவெனில் பவத்தி னின்றும் எடுத்திடான் ஆகா யம்போல்
மருவினன் நிழல்போ லென்னின் மருவினோர்க் காகுமமாட்சி
பெருகிய அறிவுண் டென்று பேசிடின் நேசத் தோடும்
கருதிட உருவம் வேண்டும் இல்லையேற் கருத லின்றே. அகூ

எங்கள்நூல் அனாதி யாக இறைவனுண் டென்னுமென்னின்
உங்கள்நூல் [4]உரைப்பா ரின்றி ஓதுவ தழகி தாகும் [டே
அங்கவன் தன்னை நூல்கொண் டறிந்தனம் அவனைக் கொண்
இங்குநூல் அறிந்தோ மென்னில் ஈதொராச் சரிய மாமே.

உற்றெழு மரங்க ளாதி உயிரின்றிப் பூத ரூபம்
பற்றியிப் பாரின் மீது பாங்கினாற் பலவு மாகிப்

---

[1]எங்கும். [2]தானென்றான். [3](று) அறைந்திடாயே. [4]உரைப்பானின்றி.

புற்றொடு மயிர்கொம் பாதி போலவே தோன்றி மாயும்
மற்றுள யோனி கட்குப் பயனென வழங்கு மன்றே. கூக

கொன்றிட லாகா தென்றும் கொன்றவை கொண்டு நாளும்
தின்றிட லாகும் மண்ணோ டொத்திடும் செத்த வெல்லாம்
ஒன்றிய வாச மூட்டி உண்ணுநீர் வைத்த வர்க்கோ
சென்றுநின் றுண்ட வர்க்கோ புண்ணியம் செப்பி டாயே.

அழித்திடும் அராக மாதி அகற்றிநல் லறங்கள் பூரித்(து)
இழித்திடும் புலன்கள் போக்கி இன்பொடு துன்பம் வாட்டிப்
பழித்திடாப் பழுதில்வாழ்க்கை எட்டையும் பாரித்தெல்லாம்
ஒழித்திடு ஞான சீலம் சமாதியின் உறுதி [1]யாமே. கூங

ஓங்கிய உருவ மோடும் வேதனை குறிப்பி னோடும்
தாங்குபா வனைவிஞ் ஞானம் தாமிவை ஐந்துங் கூடிப்
பாங்கினுற் சந்தா னத்திற் கெடுவது பந்த துக்கம்
ஆங்கவை பொன்றக் கேடாய் அழிவது முத்தி [2]யின்பம். கூச

## 2 - உ. சௌத்திராந்திகன் மத மறுதலை

அனைத்தினையும் உணர்ந்தானெம் இறைவ னென்றிங்(கு)
அறியாது புத்தநீ அறைந்தாய் என்றும்
அனைத்தினையும் அறிந்திடான் அளவி லாமை
ஒன்றொன்றா அனைத்தினையும் அறிந்தா னென்னின்
அனைத்தினையும் அளவிறந்த தென்ன வேண்டா
அளவிலா ஞானத்தால் அறியின் ஞானம்
அனைத்தினையும் அறியாது கணத்தில் தோன்றி
அழிதலால் அறிந்தமையின் றுகு மன்றே. கூரு

சிலபொருளை உணர்ந்தவற்றின் திறத்தே யொட்டிச்
சிந்திப்பன் எப்பொருளும் என்னிற் சென்று
பலபொருளாய் ஒன்றுபல பேத மாகிப்
பயின்றுவரும் ஆதலாற் பார்க்கு மாறென்
உலகுதனில் ஒருபொருளங் குணரும் போதின்
உற்றுணர்தல் ஆராய்தல் தெளித லுண்டாய்
நிலவுமத னல்உணர்வு பன்மை முன்பின்
நின்றிடா தென்னையெல்லாம் நினைப்ப தெங்கே. கூசு

[1] தானே. [2] யாமே.

முத்திநிலம் கண்டறங்கள் மொழிந்தா னயின்
முதல்முழுதும் பொன்றிப்பின் மொழிந்த வண்ணம்
ஒத்திடுந்தேன் நெய்கூட்டி உண்டிறந்தோன் ஒருவன்
உலகினில்வந் திதுதீதென் [1]றுரைத்தால் ஒக்கும்
[2]செத்ததுபின் னென்றுரைக்கில் கதியில் செல்லாத்
தேரனுரை நீர்பெருகிச் சென்ரு ருகும்
அத்தினள வறியாதிக் கரையோர் தம்மை
அக்கரைக்கே செல்லவிடும் ஆசை யாமே. கஎ

நீர்போல நின்றுயிர்கட் களித்தி டாதே
நெருப்பாய துயர்ப்பிறப்பின் நிகழ்ந்து நின்று
[3]பாரோருக் களித்தபடி வலையிற் பட்ட
பலகலைமான் கண்டொருநீள் கலைபாய்ந் தோடி
நேரேசென் றவ்வலைக்கே நோர்ந்தா லொக்கும்
நீள்பாவக் குழியில்விழு நீர்மை யாகும்
ஆரோ இங் கவனெப்பார் அறத்தை யாக்கப்
பிறந்தறமாக் கினனென்னில் அடங்கா வாமே. கஅ

அலகிறந்த யோனிகளில புகுந்த தெல்லாம்
அறத்தைஅளித் திடவென்னில் அவற்றி னெலலாம்
நிலவுவது கன்மத்தா லாகு மன்றி
நினைந்ததோர் இச்சையினல் நிகழ்ந்தா னகில்
உலகுதனி லுள்ளோர்க்கும அதுவே யாகும
ஒருத்திவயிற் றினிலிருநதங குதரங தள்ளித்
தலமதிலவங் தானென்னில தாயைக் கொன்ருன்
தருமத்தை [4]இன்றெனக்குச் சாற்றி டேலே. கக

அரியினெடு நரிஉழுவை ஆதி யாக
ஆனபோ தறந்திரிந்து கோற லாதி
பரிவினெடும் செய்தனனும் இல்லை யாகில்
பசிதனக்குத் [5]தின்பதவன் பழுதை யோதான்
கருதிலவன் பரதுக்க துக்க னகில்
கணவனிழந் தோர்கட்குங் கண்ணி குத்தித்
திரியுமவர் துயரினுக்கும இரங்கு வோன்றன்
செயலறத்துக் கழகியதாஞ் செப்புங் காலே. க00

---

[1](று) உரைத்தல். [2]செத்ததும். [3]பாரோர்கட்(கு). [4]நீ எனக்குச். [5]தின்பதிவன்.

ஒருபொருளைத் தேடிஅதற் குரையுந் தேடி
உரைப்பதன்முன் உணர்விறக்கும் உனக்கு நூலென்
மருவிவருஞ் சந்தான வழியில் என்னின்
வாயுரைத்த தேயுரைத்து வழங்கு மாகும்
பெருகுவது கெட்டென்னின் அதுபோ லாம்பின்
பித்துரைத்த தறியாது பேதை சொல்லும்
தருவதுநூல் எப்பரிசு முதல்நடுவோ டிறுதி
தான்விருத்த மின்றியது சாற்றி டாயே. கoக

முன்னுகப் பலஅறங்கள் பூரித்தெம் இறைவன்
முழுதுணர்ந்திங் கருளினுல உயிர்கள்முத்தி அடையப்
பின்னுகப் பிடகநூல் உரைத்தா னென்று
பேசினுய் [1]இவன்முன்பு பேரறங்கள்புரிநூல்
சொன்னுரார் இவனைப்போல முன்னெருவன் என்னில
அவனுக்குச் சொன்னுரார் எனத்தொடர்ச்சியாகி
அன்னுய்பின் அனவத்தைப் படுமொருவன் இன்ரும
ஆரோஉன் பாழியிருப் பார்[2]இதனை அறையே. கoஉ

இந்நூலைச் சொன்னவன்தான் இங்கிருந்தா னென்னில
இவனிருத்தி [3]யேத்துமவன் எஙகிருநதான் [4]எவனே
அந்நூலோ குருவந்த அடைவுமுனக் கில்லை
அடைவுதரின் முடிவின்கண் அனுதி போதன்
சொன்னுனும் அவைவேதா கமங்க ளாகுஞ்
சுருக்கியூண் தவம்புரியச் சொல்லுவதெல் லோரும்
உன்நூல்கண் கழுவாதே உதிப்பதன்முன் புலாலோ(டு)
உணபானேர் ஊன்பிரிய னுரைத்ததொரு நூலே. கoங

முன்னூலும் வழிநூலும் சார்பு நூலும்
மூனருகும் உலகத்து மொழிந்த நூல்கள்
இந்நூலில உன்நூலிங் கெந்நூ லென்னில்
இந்நூல்கா ணென்நூலென் றியம்ப மாட்டாய்
உன்னூலும ஒருநூலாய் உரைப்ப தென்னே
உலண்டுநூல் பருத்திநூல் சிலம்பி நூல்கள்
அந்நூலு [5]மல்லாத பொய்ந்நூல கொண்டிங்(கு)
அறநோற்றுத் திரிந்தவா றழகி தாமே. கoச

[1]அவன். [2]அதனை. [3]ஏத்தியவன். [4]அவனே. [5](ம்) அல்லாதே.

புத்தனவன் பொன்றக்கெட் டுப்போனு னென்று
போற்றுவதிங் காரைநீ பொய்த்தவஞ்செய் புத்தா
செத்தவர்க்குச் சிலகிரியை செய்ய இங்குச்
செய்தவர்க்கும் புண்ணியமா மென்று செப்பின்
நித்தமுயி ராதலாற் பலிக்குஞ் செய்தி
நினைந்துதரு வானுமுளன் உனக்கிவ்வா றில்லை
வைத்தசுடர்த் தீபமற மாய்ந்தக்கால் அதற்கு
மருவுதிரி நெய்கூட்டும் மதிகேடுன் வழக்கே. க०ரு

நூலுரைத்தான் ஒருவனுளன் என்றனுமா னத்தால்
நூல்கொண்டிங் கறிந்தாற்போல் நூலா நூலின்
பாலுரைத்த பொருள்களெலலாம் அனுமான மென்னில்
பரலோக பாதாள லோகங்க [1]ளொருசொல்
லாலுரைத்த [2]நூலின்றி அறையா யின்றேல்
அவையறிந்த [3]படியெனுன தனுமான மன்றுல்
மேலுரைக்கும் [4]பிரமாண முனக்கில்லை காட்சி
அனுமானம் விட்டபொருள் விளக்குவதா கமமே. க०சா

எப்பொருளும் அநித்தமென இயம்பிடுவை அநித்தம்
இல்லதற்கோ உள்ளதற்கோ உளதிலதா னதற்கோ
செப்பிடின்இல் லதற்கிலல தென்று மில்லை
சென்றடைவ துள்ளதற்கேல் உள்ளதென்று முண்டாம்
அபபடித்தான் உளதிலதாம அப்பொருளுக் கென்னில்
உளதிலதா காதிலதும் உள்ளதா கா(து)
[5]இப்பொருள்தான் அநித்தமிலை என்றென்றைக் காட்டாய்
எனில்தோன்றும் பொருள்நின்றிங் கிறுதி யாமே. க०எ

அங்குரம்வித் தின்கேட்டில் தோன்றுமது போல
அனைத்துருவுங் கெட்டுவழி யாகு மென்னின்
அங்கவற்றுக் காக்கக்கே டறைந்தாய் எல்லாம்
அநிததமெனும் உரைமறந்தாய் அருகனுமா னுய்நீ
இங்குமுளை இலைமரமாய் எழுந்தீண்டிச் செல்லா
திறந்ததே எழுந்தபடி நில்லா தென்னின்
மங்கியிடா தேபால தருணவிருத் தையாய்
வரும்வடிவு திரிந்துநின்று மாயுங் காணே. க०அ

---

[1]ளோர் சொல். [2]நூலுணடேல். [3]படியென்னுன் அனுமான மென்றுல். [4]அபிமானம். [5]இப்பொருளுக் கநித்தமிலை.

உடல்பூத மெனின்ஒன்றுக் கொன்றுபகை ஒன்று
 உதிரசுக் கிலமென்னின் மரத்தினுளுக் கல்லி
னிடமாகத் தவளையுரு வந்தவா றியம்பாய்
 இருவினைகா ணெனின்வினைக ளிரண்டுருவாய் நிற்கும்
திடமாக வன்னமுரு வெனின்உண்ண உண்ணச்
 சென்றுவள ருங்காயந் தேயுமுணர் வென்னின்
மடவோனே அருவுணர்விங் கசேதனமாய் உருவாய்
 [1]வளராது வருமிலலா தெனின்மலர்வான் வருமே. கo௯.

என்றுமிலா தொன்றின்றாய் வருமுருவம் வித்தின் [காண்
 எழுமரம்[2]போ லெனின்வித்தி னுண்டாய்நின் றெழுங்
நின்றதேல் வித்தின்மரங் கண்டதில்லை யென்னின்
 நெற்கமுகாய் நீளாது நெல்லர்யே நீளும்
ஒன்றிலொன் றங் கிலாமையினல் உதியாகா ரணம்பெற்
 றுதிப்பதுகா ரியமதுவும் உள்ள தாகும்
மன்றமதிக் கலைபோலக் கந்த மைந்தும்
 மருவியுள தெனும்உரையும மறந்தனையோ இன்றே.

உருவமெலாம பூதவுபா தாய [3]சுத்தாட்
 டகஉருவ மென்னின்நீ உலவத் துக்கு
மருவும்அன லோடுநீர் மண்கந்த மிரதம்
 வன்னம்இலை வன்னிக்கு வளிநீர்மண் வாசந்
தருமிரதம் இலைநீர்க்குத் தழல்கால்மண் கந்தந்
 தானில்லைத் தலத்தினுக்குச் சலமனல்கால் கூடி
வருவதில்லை இந்திரிய விடய மான
 மாபூதங் களுமறியாய் மதிகெட் டாயே. ககக

மருத்தெண்ணெய் தனின்மருந்து நின்றாற் போல
 மறைந்தெட்டும் சூக்குமமாய் மருவு மென்னில்
திருத்துமவன் மருந்தெண்ணெய் சேர்த்தாற் போலச்
 [4]சேர்ப்பவன்வே றுண்டெல்லா வுருவும் எட்டும்
பொருத்தியதே லொருதன்மை யாம்பொருள்க ளொன்றின்
 குணமொன்றிற் புகாதறைகை பொருளறியாய் பூத
உருப்பொருள்வே றுபாதாயப் பொருள்வேறு காட்டாய்
 உபாதாயம் பூதகுணங் குணகுணியா முலகே. ககஉ

[1]மருவாது. [2]போல் நின்றவித்தின். [3]சுத்தாட்டக வுருவ மென்னின், சுத்தாட்டகமாயுரு வருவதென்னின். [4]சேர்பொருள்.

அழிந்துணர்வை உணர்வுதரு மெனின்அழிந்த தாக்கா(து)
ஆமுணர்விற் பொருள்வினைகள் அணையா வாகும்
அழிந்திடுவ தாக்கியெனின் முன்னொருகா லத்தே
அறிவிரண்டு நில்லாதங் கறக்கே டின்றி
அழிந்துணர்வை உணர்வுதரு மெனின்நித்தா நித்தம்
அடையும்உணர் வுனக்கநித்த மாயே செல்லா(து)
அழிந்தெருவை ஆக்குவது போலாக்கு மென்னின்
ஆம்பொருள்வே றழிந்துசத்தி கிடந்தாக்கும் அவையே.

கேடிலாச் சந்தானத் தேபலிக்கு மென்று
கிளக்கிலநீ சந்தானம் நித்த மாகும்
ஓடுநீர் போலழிந்தா முணர்வொழுக்க மென்னின்
ஒழுகுநீ ரிட்டதெலலாம் உடன்கழிதல் போலத்
தேடுபொருள் சீலம்[1]பா வனைகுறிவிஞ் ஞானஞ்
சென்றவுணர் வோடேகும் நின்றுணர்வின் ஏயா
நீடுநீர் முன்னொழுகிக் கெடாதுநிறைந் தோடும்
நிகழுணர்வுங் கேடின்றி நிறைந்துசெலுங் காணே. கககச

சந்தானங் காரணமோ காரியமோ இரண்டின்
தன்மையதோ காரணமுங் காரியமும் நித்தம்
வந்தாருஞ் சந்தானத் தொடர்ச்சியெனின் அதற்கும்
வருநித்தந் தோற்றக்கே டைதலின்மற் றென்றேல்
ஐந்தான கந்தங்க ளன்றாய் நித்தம்
அடைபொருளாம் அறிவும்அறி வடைவு மின்றிச்
சிந்தாமுன் பின்னாகிப் பின்முன் னாகித்
திரிந்துவருந் திரிவறிந்து தேரா தேரே. ககரு

ஒருகாலத் துணர்வுகெட்டா மெனின்உதிப்பீ றொன்றும்
ஒருபொருளின் திரிவுனக்குக் கால மானல்
வருகாலம் நிகழ்காலங் கழிகால மென்று
வழங்குவதென் பொருள்வரவு நிலைகழிவால் [2]இன்றேல்
திரிகாலம் செப்பிடாய் பொருட்செயலு மொன்றும்
செயல்மூன்றும் ஒருகணத்தே சேரு மென்னில்
தருகால மூன்றாகும தாமரைநூ றிதழில்
தள்ளூசி யுங்கால மூன்றினையுந் தருமே. ககசு

---

[1]பாவனைகளெல்லாம். [2]அன்றே.

உணர்வுகா ரணமுணர்வுக் கென்னின் நித்தம்
உணர்வுக்குண் [1]டாகிநின் றுணர்வையுதிப் பியாதிங்
குணர்வுசந் தானவிடத் தொழிந்தாற் பின்னை
யுண்டாகா துடலுணர்வுக் குபாதான மென்னின்
உணர்வுடலின் இடையறு துதிக்க வேண்டும்
[2]உடலுணர்வின் வினையினால் உணர்வுதிக்கு மென்னில்
உணர்வுவினை யுளதொடுங்கா துணர்வுதருஞ் செய்தி
உணர்வைவினை தரினொருவன் செயல்வினையின் றாமே.

வினையுணர்வு தரும்வினையை உணர்வுதரு மென்று
விளம்பின்நீ உணர்வுபோல் வினையி னுக்கு
நினைவுவரும ஒன்றையொன் று நிகழ்த்தி டாபின்
நிலையின்மை யால்நிகழ்த்திக் கெடுதல செய்யா
கனல்விறகிற் பிறந்ததனைப் பொடிசெய் தாற்போல்
கருத்துவினை யிற்றோன் றிக் கழிக்கும்வினை யென்னின்
முனமுணர்வு பிறந்தளவே வினைகெடுக்கும் முன்பின்
உதியாது முகிழ்நெருப்பின் விறகுதியா வாறே. கக அ

பேயுநர கரும்சுர ரும் பிரமருமாய் உலகிற்
பிதாமாதா ஆதார மொன் று மின் றிக்
காயமொடு தாம்வருவர் என் றுரைப்பை காயம
காரியமாய் வருதலினால் கார ணமுண் டாகும்
ஆயுமுணர் வோசுத்த அட்டகமோ கன்மம்
வடித்ததோ வடிவுசெய்து வைத்தாரும் உண்டோ
[3]ஆயுமறி வுண்டாகில் அறைந்திடாய் உலகுக்
காதிதுணை நிமித்தகா ரணமறிவ தறிவே. கககூ

உருவாதி கந்தங்கள் ஐந்துங் கூடி
ஒருவன்வே றொருவனிலை யென் றுரைக்கும் புத்தா
உருவாதி ஐந்தினையும் [4]உணர்பவன்வே றென்ன
உணரும்விஞ் ஞானமென்றாய் [5]ஞானம்உணர்ந் தவரார்
உருவாதி பொருள்காட்டித் தனைக்காட்டும் சுடர்போல்
உணர்வுபிறி தினையுணர்த்தித் தனையுணர்த்து மென்னின்
உருவாதி பொருளினையும் சுடரினையும் காணும் [ண்டே.
உலோசனம்போல் உணர்வுபொருள் [6]உணர்பவன்வே று

---

[1] டாதல் நின் று. [2] உடலுணர்வு. [3] ஆயுமுணர்வு. [4] உணர்பவரா றென்னில். [5] அஞ்ஞானம் உணர்ந்தவனார். [6] உணர்வது வேறு.

காயமுடன் இந்திரியம் மனம்நான் என்று
கதறுவாய் காயம்உறக் கத்தறியா தாகும்
வாயில்களும் அப்படியி னொன்றையொன் றங் கறியா
மனங்கணத்திற் கெடுங்கால மூன்றின்வர வறியா(து)
[1]ஆயுமறி வாகியுடல பொறிமனமூன் றறிந்தாங்(கு)
அவைநானல் லேனென்றும் அறிந்துமனத் தாலே
ஏயுமொரு பொருள்கருதி இந்திரியப் பாலே
இசைவித்துக் காயத்தால் இயற்றுவதான் மாவே. கஉக

கழிந்தஉணர் வேபின்னும் யானறிந்தே னென்று
கருதலினவ் வுணர்வறிந்த தென்னின் முன்னே
மொழிந்தமொழி நான்மொழிந்தே னென்றால் வாய்தான்
மொழிந்ததோ மொழிந்தவன்வே றுஞற் போல
எழுந்தவுணர் வெல்லாங்கொண் டியானறிந்தே [2]னென்ற
தெதுஅதுகாண் உயிருணர்வால் வாக்கால் மற்றை
ஒழிந்தகா யந்தன்னல் உணர்ந்துரைத்துச் செய்தங்(கு)
உணர்வினுக்கும் ஆதார மாய்நிற்கும் உயிரே. கஉஉ

இந்திரிய வீதிஎழுஞ் சித்தம் நெஞ்சத்
தெழுஞ்சித்த மென்றிரண்டு மொன்றுகெட்டே ஒன்று
வந்தெழுவ தெனிற்கனவில் கண்டபடி நனவின்
வாய்திறவார் நனவுகண்ட படிகனவிற் காணுர்
அந்தனுரு வன்னங்க ளறிந்திடா னின்றேல்
அறிகனவும் இறந்துணர்வும் அழிந்துறக்கம் அடைந்தால்
உந்துவதோர் சந்தான மில்லையுணர் வுதிப்ப
உயிர்கனவு நனவினையும் உணருங் காணே. கஉஙா

ஒருகாலத் தோரிடத்தில் ஒருணர்வேல் செவிதான்
ஒன்றுணரா திருசெவியும் உணரும் ஓசை
ஒருகாலத் திருகண்ணும் இருசெவியும் மனமும் [யும்
ஒருவனைக்கண் டவனுரைகேட் டுணர்ந்திடுமைம் பொறி
ஒருகாலும் உணராவுள் உணர்வின்றிப் பொறிகள்
ஒன்றென்று [3]வுணர்வதுமுள் ளுணர்வைந்தும் உணரா
ஒருகாலும் பொறிவிகற்பித் துணராவுள் ளுணர்வுக்
குள்ளதுகாண் விகற்பமிரண் டும்முணர்வ துயிரே. கஉச

[1] ஆயுமுணர்வாகி. [2] னென்றங்கெது அதுதான். [3] உணர்வதுள்.

அருஉணர்வு மாய்ஆறும் மாறி மாறி
அங்கங்கே தோன்றியிடின் அகத்துநிலை யின்றி
உருவினொடு பாலதரு ணவிருத்தா வத்தை
உண்டாகா துறக்கத்தின் உடல்[1]தட்ட அழைப்ப
வருவதுணர் வெங்கிருந்து நெஞ்சிலிருந் தென்னில்
வாயில்வினை [2]யறிந்தெழுப்ப ஆயுஅறி யாதாம்
திரியொழிய இடிஞ்சில்தொடத் தீபமெழா தடக்கஞ்
சென்றபொழு தாலுணர்வு நின்றநிலை செப்பே. கஉரு

இச்சைவெறுப் பியற்றலின்பத் துன்பம் ஞானம்
இவையணுவின் குறியாகும இவற்றில் இச்சை
நச்சிநுகர்ந் தொருபழத்தின் இனங்கண்டு முன்பு
நான்நுகர்ந்த கனியினின மென்றுநச்சல் பின்பும்
எச்சவெறுப் பாதிகளும இப்படியே யாகும்
இவைமுன்பும பின்புமுணர்ந் திடுத லாலே
நிச்சயகர்த் தாஒருவ னுளனென்று நல்லோர்
நிறுத்திடுவர் வெறுத்திடுவர் நின்னுடைய பொருளே.

எப்பொருட்கும் இரந்தரமாய் இடங்கொடுத்து நீங்கா(து)
[3]இருளொளிதா னன்றிஇரண் டினுக்குமிட வகையாய்
ஒப்பிலகுணஞ் சத்தமதாய் வாயு வாதி
உதித்தொடுங்க நிற்கும்வா னுயிர்முன்னே சொன்னேம்
செப்பிடுங்கா லம்பொழுது நாளாதி யாகித்
திரிவிதமாய்த் தீமைநன்மை செய்யுந் திக்குத்
தப்பில்குணக் குக்குடக்குத் தெற்குவடக் காதி
தானாகித் திரியாதே நின்றுபலந் தருமே. கஉஎ

காரியமாய் உலகமெலாம் இருத்த லாலே
கடாதிகள்போல காரியகர்த் தாவொருவன் வேண்டும்
ஆரியமாய் அறமபொருளோ டின்பம்வீ டெல்லாம்
[4]அறைந்துயிர்கட் கறிவுசெயல அளிப்பதுநூல் அந்நூல்
கூரியராய் உள்ளவர்கள் ஓத ஓதிக்
கொண்டுவர லான்முன்னே குற்ற மின்றிச்
சீரியபே ரறிவுடையோன் செப்ப வேண்டும்
செயலினுக்குங் கரிவேண்டுஞ் சிவனுளனென் றறியே.

---

[1] தட்டி எழுப்ப. [2] அறிந்தெழுப்பா. [3] இருள் வெளி, [4] அறிந்துயிர்கட்கு.

மரங்களுயி ரல்லவென்று மறுத்துச் சொன்னாய்
  வாடுதல்பூ ரித்தலால் மரங்களுயி ராகும்
திரங்குமநீர் பெருதொழியில் பெறிற்சிரத்தை சேரும்
  சீவனல எனினுலகில் சீவ னெல்லாம்
உரங்கொள்வ தூண்பெறில் சோரும்ஊண் பெருவேல்
  உலர்ந்தமரம் நீர்பெற்ருல் உய்யாதுள் ளுயிர்கள்
கரந்தசினை முட்டைகட்கு வாயிலின்று வாயில்
  கண்டிலதேற் பூத்துக்காய்த் தெழல்மரங்கள் உயிரே.

ஒருமரத்தின் உயிரொன்றேல் கொம்பொசித்து நட்டால்
  உய்யுமுயிர் ஒன்றுபல வாமோ வென்னில்
கருமரத்தின் வித்துவேர் கொம்புகொடி கிழங்கு
  கண்கலந்து கொள்ளுமுயிர் அண்டம் வேர்ப்புத்
தருபிறப்புச் சராயுசங்கள் சனனமும்[1]பெற் ருற்போல்
  தானடையும [2]உற்பிச்சம் தலநடவா வென்னில்
பெருநிலத்தில காலிலார் நடப்புரோ பேதாய்
  பிறப்பின்விதம் அனேகங்காண் பேசுங் காலே. கநō

தின்னுமது குற்றமிலை செத்ததெனும் புத்தா
  தின்பையெனக் கொன்றுனக்குத் தீற்றினர்க்குப் பாவம்
மன்னுவதுன் காரணத்தால தின்ஞ தார்க்கு
  வதைத்தொன்றை இடாமையினல் வதைத்தவர்க்கே பாவ[ம்]
என்னினுனை யூட்டினர்க்குப் பாவஞ் சேர
  என்னதவம் புரிகின்ருய் புலால்கடவுட் கிடாயோ
உன்னுடலம் அசுசியென நாணி வேருேர்
  உடலுண்ணில் அசுசியென உணர்ந்திலைகாண் நீயே.

குடைநிழலும் கண்ணடிச் சாயையும்போல் பிறப்புக்
  கொள்ளும்உணர் வென்னிலகா ரணமழிய அழியும்
அடைநிழல்போல் கந்தமைந்தும் அழியுமுனக் கிங்கே
  அவையழிந்தால் அருங்கதியின் அணையுமுணர் வின்ரும்
இடைகனவில் எழுமுணர்வு நனவுணர்வா ருற்போல்
  எழுமுணர்வு கன்மத்தால் நினைந்துகதி யென்னில்
மிடைசினையும் அந்தனுமுட் டையுமுயிர்விட் டக்கால்
  [3]மேவுவதென் பிறப்பினுடல் விடாதுகன்ம வுணர்வே.

---

[1]போலுலகில். [2]உற்பீசம். [3]மேவுவதெப் பிறப்பின்.

ஐந்துகந்தம் சந்தானத் தழிதல்பந்த துக்கம்
அறக்கெடுகை முத்தியின்பம் என்றறைந்தாய் கந்தம்
ஐந்துமழிந் தால்முத்தி அணைபவர்யா ரென்ன
அணைபவர்வே றில்லையென்றாய் ஆர்க்குமுத்தி யின்பம்
ஐந்தினுணர் வினுக்கென்னில் அழியாத உணர்வுண்
டாகவே [1]அவ்விடத்தும் உருவாதி கந்தம்
ஐந்துமுள வாமதுவும் பந்த மாகி
அரந்தைதரும் முத்தியின்பம் அறிந்திலைகாண் நீயே. கருரு

அனாதிமுத்த னாய்ப்பரனாய் அசலனாய் எல்லா
அறிவுதொழில் அனுக்கிரக முடையஅரன் கன்மம்
நுனாதிகமற் றொத்தவிடத் தேசத்தி நிபாதம்
நுழைவித்து மலங்களெலாம் நுங்க நோக்கி
மனாதிகர ணங்களெலாம் அடக்கித் தன்னை
வழிபடுநல் லறிவருளி மாக்கருணைக் கையால்
இனாதபிறப் பினில்நின்று மெடுத்து மாறா
இன்பமுத்திக் கேவைப்பன் எங்கள்முத்தி யிதுவே. கருச

## 3 - க. [2]யோகாசாரன் மதம்

**போ**தமே பொருளாய்த் தோன்றும் பொருளதாய் எழலாற்
வாதனை அதனாற் கூடி வருதலால் வடிவி லாமை [போதம்
ஆதலாற் கனவே போலும சகமுள தறிவே யாமென்(று)
ஓதினான் ஓதா னைய உணர்வினால் யோகா சாரன். கருரு

## 3 - உ. யோகாசாரன் மத மறுதலை

**போ**தமுந் தவிர வேறோர் வாதனை புகன்றாய் போதம்
வாதனை இரண்டுண் டென்னாய் போதவா தனையும் என்னிற்
காதலாற் பொருளி னோடு [3]கலந்தபின் எழுங்க ருத்தாம்
வாதனை கனவுகண்ட பொருளின்மேல் வருங்கருத்தே. கருசு

அறிவதே பொருள தாயின் அகம்சடம் என்ன வேண்டும்
பிறிபொரு ளாகும் பேதித் திதம்பிர பஞ்ச மென்னில் [கும்
உறுபொருள் உருவந்தோய்ந்தால் உணர்வுமவ் வுருவாய்நிற்
செறிபொரு ளதுவாய் நிற்கும் தெளிபளிங் கதுவேபோல.

---

[1]எவ்விடத்தும். [2]யோகசாதன். [3]கலந்துபின்.

## 4 - க. மாத்தியமிகன் மதம்

அவயவம் பொருளாய்த் தோன்றும
அவயவம் [1]ஒழிந்தாற் பின்னை
இவைபொரு ளென்ன வேறொன்
றிலாமையாற் பொருள்கள் இன்றாம்
அவைபொருள் இலாமை யாலே
அறிவுமின் றாகு மென்று
நவைதரு மொழியி னாலே
நவிலுமாத் தியமி கன்றான். கநஅ

## 4 - உ. மாத்தியமிகன் மத மறுதலை

கடத்தினில் அவய வங்கள்
படத்தினிற் புகாமற் காத்தும்
படத்தினில் அவய வங்கள்
கடத்தினிற் [2]புகாமற் கொண்டும்
இடத்தினில நிற்கும் ஆகும்
அவயவி இரண்டுங் கூடி
உடைத்தொரு பொருளுண் டாகப்
பொருளுமுண் டுணர்வும் உண்டே. கநகூ

கருவியும ஒளியும் வேறு
[3]கருதிடுங் கருத்தும் நிற்கப்
பொருள்புண ராமை யாலே
போதம்வந் தெழுவ தின்றாம்
மருவிடும் பொருளுண் டாக
வந்தெழும் புந்தி யானல்
பொருளுள தாகும் ஆகப்
போதமும் உள்ள தாமே. கசய

## 5 - க. வைபாடிகன் மதம்

அரிசனம் நூறு கூட வருணம்வந் தெழுந்தாற் போல
விரிசகம் பொருள்கள் ஞானம் விரவிட மேவித் தோன்றும்

---

[1] அழிந்தாற். [2] படாமற். [3] கண்டிடும்.

தெரிசன மிதுவே யென்று தெளிந்திடும் தேரர் வீடு
பரிவொடும் அடைவீ ரென்று பகரும்வை பாடி கன்முன்.

## 5 - உ. வைபாடிகன் மத மறுதலே

பொருளது புறம்ப தாகும் போதம்அந் தரம தாகும்
தெருளிடின் இரண்டுஞ் சென்று சேர்ந்திடு மாற தின்றும்
அருவுணர் உருவ ஞேய மாதலி ஞலுங் கூடா
[1]உருவரு வுடைய வைபா டிகற்கினி மாற்றம் இன்றே. கசஉ

## 6 - க. நிகண்டவாதி மதம்

வாச மாமலர் அசோகு பேணிமறை
நீதி யோடுமலே யுந்தவத்(து)
ஆசை யாலுடை அகன்று மாசினே
அடைந்தில் வாழ்தரும அறத்தினில்
பாச மானது தவிர்நது பண்டிபட
உண்டு பாயினெடு பீலிமேல்
நேச மாயவை தரித்து ளோர்களின்
நிகண்ட வாதியை நிகழுத்துவாம். கசங.

ஈறி லாதன அனந்த ஞானமுதல
எண்கு ணங்களொனும ஒண்குணம்
மாறி லாதமதி மேவு சீதமென
மன்னி வானவர் வணங்கவே
வேறு லாவுகுண ஞானஆவரணி
யாதி எட்டினேயும் விட்டசீர்
ஏறு பான்மையுடை நீடு வாழ்அருகன்
எங்களுக் கிறைவன் என்றனன். கசச

கருவி கண்படு தொடக் கொழிந்துவரு
கால மூன்றின்நிகழ் காரியம்
பெருக நின்ெருரு கணத்தி லேஉணர்
பெருந்தவக் கடவுள் பீடினல்

---

[1]மருளுணர்வுடைய.

மருவி நின்றுவழி பட்ட வர்க்குமலே
வுற்ற வர்க்குமனம் ஒத்திடும்
குரிசில் எங்களிறை யென்று பின்னும்நிகழ்
குற்ற மின்மையது கூறுவான். கசரு

பசித்தல் தாகபய செற்ற மோடுவகை
மோக சிந்தனை பழித்தல்நோய்
நசித்தல் வேர்வினொடு கேத மோடுமதம்
வேண்ட லீண்டதி சயித்தலும்
புசிப்பு வந்திடு பிறப்பு றக்கமிவை
விட்டொ ரட்டகுண பூதனுய்
வசித்த வன்னுலகின் மேலிருந் தொருசொல்
இகல னுக்கருளும் என்றனன். கசசு

அந்த வாய்மொழியி னல்அவன் சரண
மாதி யோகமுத லானநூல்
இந்த மாநிலம் மயங்கி டாதவகை
இங்கி யம்பினன் இதன்பொருள்
வந்த காலமுயிர் தன்ம தன்மிஅறம
மற்றும விணமருவு புற்கலம்
பந்தம் வீட்டினொ டனுதி யாயிவை
படைப்ப தின்றியுள பத்துமே. கசஎ

நிற்ற லோடுதலே போதல் அன்மையை
நிகழ்த்து நீடுவெதி ரேகமும்
உற்ற தாமஇவை கணத்தி லேமருவி
உள்ள வாபுரியு மாறுதான்
கற்ற காலமள வெய்தி வாழுமுயிர்
காய மேவிநிறை வானதே
பெற்று வேறுவரு தன்மை நேரறிவு
பெற்ற தாகியுள பேசிலே. கசஅ

பரந்து மீதுதரு மாத்தி காயம்அழி
வித்(து)அ நித்தமது பண்ணிடும்
நிரந்து கீழதரு மாத்தி காயமது
நித்த மாய்மிக நிறுத்திடும்

புரந்த புண்ணிய மிதற்கு நன்மைபுகல்
பாவ மானவது தீமையே
தரும்பொ ருட்கிடம தாகும் வானமிகு
புற்க லன்களவை சாற்றுவாம். கசசு

ஏ ணும ஒன் றுடைய் வாகி எங்கும்அணு
வாய்இ ரும்புகல் மரங்களும்
பூணும் அங்குருவெ லாமு மாகுமிவை
புற்க லப்பொருள்கள் என்னலாம
காணும் அங்கறு வகைத்தொ ழில்களவை
கட்டு விட்டநெறி கன்மமேல்
மாண நின்றுவரு மாறி மாறிமுன்
வகைந்த துண்டு[1]விட மாட்சியே. கருо

## 6 - உ. நிகண்டவாதி மத மறுதலை

அருகனுக் கனந்தஞான மாதிஆதி யாகவே
பெருகநிற்றல் சீதமா மதிக்கடைந்த பெற்றியேல
ஒருவும்இட்ட ஒப்பவன் னுயிர்த்திறத்தி னுள்ளபின்
மருவுமிக்க குற்றம்மேல அறத்தின்மன்னி னெனில். கருக

அறத்தின்மன்னு வித்தவன் ஒருத்தனுய் அவன்அறத்
திறத்தினிற்றல மற்றொருத்த னல்விளைந்த செய்தியாம்
மறத்தின்அற்ற வர்க்கெலாம வணக்கமஉன் இறைக்குமேற்
பிறக்குமிங் கவத்தைகொண்ட தாரையின்று பேசிடே.

கருவிதன் தொடக்கொழிந்து கணடுவாழும் என்றியேல்
உருவுகொண்டு நின்றதென்னில் உண்டுதான் மனுதிகள்
ஒருவிநின்ற தென்னில்அத்த மொன்றையும் உணர்ந்திடான்
பொருளதெரிந்து போகைகால மொனறிலே புணர்நதிடான.

ஆர்வகோப மானவை அடைந்தொறுப்ப வர்க்கெலாம
சேர்வதின்மை செப்பில்இன்று [2]சீவன்மேவு காயமால
ஓருமன்னர் போலவே உயிர்க்களித்தல் [3]என்றியேல்
ஏர்கொள்பொன் எயிலிடத்திருத்தல்பெற்றதென்கொலோ.

---

[1]விடல். [2]சீவனேகு காயமாம். [3]இன்றியே.

சொல்லதொன்று [1]கொண்டிகலின்ஆத்தன்நாடவேசொலின்
இல்லையாம் மறுதிதான் இயம்புமாற தெங்ஙனே
நல்லவாம் மறுதிதான் அவர்க்குநாட வேயிலை
ஒல்லைஊமர் ஊமருக் குரைத்தவாற தொக்குமே. கருரு

இன்பபூமி சேரிகலில் நாதன்இவ் விருநிலத்
துன்பம்அங் குணர்ந்திடாமை [2]இங்குவந்த சொல்லிடான்
இன்பபூமி யில்இருந் திருந்தியாவும் எய்திடில்
துன்பபூமி யாமுணர்ந்து சொல்லவல்ல தில்லையே. கருசு

நிறைந்துகாய மோடுசீவன் நின்றதாகில் இவ்வுடல்
குறைந்தபோது தானும்இத்தொ டொக்கவே குறைந்திடும்
இறந்துபோகும இக்கடம் இறந்தபோது நீர்குடத்(து)
உறைந்துடைந்தி டக்குடம் உலர்ந்தவாற தொக்குமே.கருஎ

கண்டநூல் தருந்தன்மாத்தி காயமோ டதன்மமும்
உண்டுமீது கீழ்உலாவி உறறுநின்றி டப்பொருள்
கொண்டதென்னில் அத்தமிவ விரண்டுதன்மை கூடிடா
வண்டுபுட்கள் போலெனின் வழங்கிடா கணத்திலே.

நீடுபாவ புண்ணியங்க ளால்நிரய வானகம்
கூடுவோர்கள் இன்றுநின்று கூட்டுவோர்கள் இன்மையின்
ஓடுமா கணைத்திறத்தின் உறறவா றுரைத்தியேல
வீடுமா கணைக்குநாடும் விலலிபோல வேண்டுமே. கருகூ

ஏணதொன்று புறகலத்தின் எய்துமென்னின் நாசமே
காணலாகும் அக்கடம் கழிந்ததனமை இல்லவை
[3]பூணவேண்டும் மேலுறும பொருத்தமின்மை யொன்றினின்
மாணவே அணுப்பொருள் [4]நிகண்டவாதி வைத்ததே. கசுo

ஆறுகாரி யங்கள்மாற வேதவங்க ளாமெனின்
மாறிவாணி பஞ்செயா திருக்கவந்தி டாதனம்
ஈறிலாத ஊழுதென்னின் எங்குமுள்ள தூழுதே
பேறுகாரி யமவிடப் பிறப்பதில்லை பேசிலே. கசுக

---

[1]கொண்டிகலில் நாதன். [2]இங்கறிந்து. [3]பூணவேணோர் காலுறும். [4]நியாயவாதி.

உடல்வருந்தல் மாதவங்கள் உறுதியென் றுரைத்திடில்
படவருந்து நோயிஞேர்கள் படர்வர்பொன் னெயில்எஞய்
திடவ ருந்த இன்பம்இச்சை [1]செய்தல் செய்தல் செய்தியேல்
கெடஅரிந்தி டாய்உன்நாசி கேடில்இன்பம் உன்னியே.கசுஉ

பூர்வகன்மம் அற்றிடப் புசித்தபின்பு பொன்னெயில்
நேர்வதென்னின் அக்கன்மத்து நிச்சய மிலாமையில்
தீர்வதின்மை தீரின்வாயில் சேர்வதின்மை தெண்கடல்
நீர்வறந்த [2]பின்புபூஞை மீனருந்த நின்றதே. கசுஙு

கூறுகூவல் மன்னும்அக் குடம்குறித்து நீள்கரை
ஏறலுற்ற தன்மைநீ ஒருத்தரின்றி ஏறுதல்
வேருெருத்தன் அக்குடத்தை மீதுநின் றெடுக்கவே
ஏறலுற்ற தன்மையில் சிவன்திறத்து நின்றிடே. கசுச

## 7 - க. ஆசீவகன் மதம்

என்உயி ரதற்குப் போல எவர்க்கும்ஒத் திருப்பன் என்று
தன்னுயிர் வருந்தத் தானும்[3]தலையினைப் பறித்துப் பார்மேல்
மன்உயிர் எவற்றி னுக்கும் வருந்தவே அறங்கள் சொல்லும்
அன்னதோர் வாய்மை ஆசீ வகன்அம ணர்களிற் கூறும்.

வரம்பிலாஅறிவன் ஆதி வைத்தநூற் பொருள்கள் தாமும்
நிரம்பவே அணுக்கள் ஐந்து நிலமபுனல் தீகால சீவன்
பரந்திவை நின்ற பான்மை பாரது கடினம் சீதம
தருமபுனல் சுடுமதீ வாயுச் சலித்திடும் உயிர்போ தத்தாம்.

பார்புனல் பரக்கும கீழமேல் படர்ந்திடும தேயு வாயுச்
சேர்வது விலங்கின் உள்ளம அவற்ருெடும சேரும் வேறு
சார்வது பெற்றபோது சார்நதஅப் பொருளின் தன்மை
நேர்வது மாகி நிற்கும் இதுபொருள் நிகழ்த்து மாறே. கசுஎ

உணர்தரா அணுக்கள் நான்கும் ஒன்றுகெட்டொன் றதாகா
புணர்தரா ஒன்றில் புக்கொன் ருயினும் பொருந்தி வாழும்
அணைதரா புதிய வந்திங் கழிதரா பழைய வான
இணைதரா ஒன்ருென் ருகி மாறுதல் ஒன்றும் இன்றே.

---

[1]செய்து செய்தி. [2]போது. [3]தலைமயிர்.

கொண்டுமுன் விரித்தல நீட்டல குறுக்குதல் குவித்தல்ஊன்றல்
உண்டுதின் [1]றுலர்த்தல மீட்டல உடைததிடல ஒனறும் ஒண்ணு
விண்டுபின் புறம்பும் போகும் வேறுநின் றுள்ளு மேவும்
பண்டுமின் றென்றும எங்கும் பரந்தொரு தன்மைப் பாலே.

கண்ணினில் காண வொண்ணு சனித்தந்தக் கன்மத் தாலே
நண்ணிடும் உருக்க ளாகி நின்றபின் நரரோ காண்பார்
விண்ணினில் தேவர் காண்பர் ஓர ணு மிக்க நான்காய் [னே.
எண்ணிய பொருள்க ளெல்லாம இசைவதென் றியம்புமின்

ஒன்றினை ஒருவி மூன்றங் குற்றிடா [2]திரண்டு விட்டு
நின்றிடா [3]திரண்டு கூடும் நெறிநிலம நான்கு நீர்மூன்(று)
இன்றிரண் டழல்கா லொன்ருய் இசைந்திடும் பூமி யிவ்வா
றென்றுநீர் தீகா லாகி ஈண்டுவ தென்றி யம்பும. களக

[4]வெண்மைநன் பொன்மை செம்மை[5]நீல்கழிவெண்மைபச்சை
உண்மையிவ் வாறின் உள்ளும் கழிவெண்மை ஓங்கு வீட்டின்
வண்மைய தாகச் சேரும் மற்றவை உருவம் பற்றி
உண்மையவ் வொட்டுததிட்டுக கலபபினில உணருமெ னருன்.

பேறிழ விடையூ றின்பம் பிரிவிலா திருக்கை [6]மற்றும்
வேறொரு நாட்டிற் சேறல் விளைந்திடு மூப்புச் சாதல்
கூறிய எட்டும முன்னே கருவினுட் கொண்ட தாகும்
தேறிய ஊழிற் பட்டுச் செலவதிவ் வுலகம் என்றுன். களரு

புண்ணிய பாவம் என்னும் இரண்டணுப் பொருந்த வைத்
எண்ணிய இவற்றி னேடும் ஏழென எங்க ளோடு [தே
நண்ணிய ஒருவன் கூறும் ஞானமிவ் வாற தென்று
கண்ணிய கருத்தி னோர்கள் கதியினைக் காண்பர் என்றுன்.

## 7 - உ. ஆசீவகன் மத மறுதலை

**வா**ராநெறி வீடானபின் மண்மேல்அவன் வந்து
தாராமையின் நூலானது தானேஉள தின்றும்
சேராமையின் அணுவானவை ஐந்தும்ஒரு தேயத்(து)
ஓராெறாரு காலத்தினில் ஒன்ருமுணர் வின்ரும். களரு

---

[1](று) உதிர்த்தல். [2]இரண்டும். [3]இரண்டுங கூடி. [4]வெண்மையும், வெண்மைவண். [5]கழிவெண்மை நீலம் பச்சை. [6]பின்னும்.

இருபான்மையர் இவர்மண்டலர் செம்போதகர் என்றே
வருபான்மையர் இவர்மண்டலர் மண்மேல்[1]வரு நூலும்
தருபான்மையர் [2]எனின்நீதல மதில்வாழ்பவர் தம்போல்
ஒருபான்மையின் உளராகுவர் உணராதுரை செய்தாய்.

உயிரானவை உடல்[3]தீண்டலொ டொட்டுக்கலப் பெய்தும்
பயில்வால்உணர் வெய்துமமெனும மொழியானது பழுதாம்
துயிலார்தரு மவர்பாலகர் தொடரார்அறி விணைநீ
செயிரார்தரும் உரையேதரும அதுவோஉன செயலே. கஎஎ

அணுவானவை கீழ்மேல்உள வானல்அவ யவமும்
நணுகாவென லாமேவரின் நாசம்அவை யெய்தும்
அணுகாவெனின் இவைதொள்ளைகொள் ஆகமஉள வாகும்
துணிவாலிவை கலவாபல தொகையாமவகை இலவாம்.

மிகையாம்அணு [4]உளவாகையின் அவையாம்மிக வென்னில்
தொகைநாலிடை அறலால்அவை தொகுமாறில வாகும்
[5]பகையாகையின் மிசைதாழ்மையின் நிலையாவகை பண்ணும்
நகையாமஉரை கழியாயிரம் அவைதூணென நண்ணு.கஎகூ

கூடாஅணு அறியாமையின் வளிகூட்டுதல் கூறின்
நாடாவளி அணுவானவை நணுகச்செயும் அவரை
நீடாவினை தன்னலெனின் நினைவின்றது இன்றும்
தேடாயொரு [6]வனைநீஇவை செய்வானுள னென்றே. கஅ௦

## 8 - க. பட்டாசாரியன் மதம்

வேதமே யோதி நாதன் இலையென்று விண்ணில் ஏறச்
சேதமாங் கன்மஞ் [7]செய்யச் சைமினி செப்பும நூலின்
நீதியே கொண்டு பட்டா சாரியன் நிகழ்த்தும் நீர்மை
ஓதநீர் ஞாலத் துள்ளே உள்ளவா றுரைக்க லுற்றும். கஅக

உற்றிடுங் காம மாதி குணங்கள்தாம உயிர்கட் குண்டாம்
மற்றிவை தருமே யாகின் மறைமொழி வாய்மை யின்றும்

---

[1]வளர். [2]என்னிற்றல மதில். [3]தீண்டிடல் ஒட்டுக். [4]உளவாயிடின். [5]பகையாயின மிசைதாழ்வினை. [6]விணைநீ. [7]செய்யும்.

[1]கற்றநூல் அளவாற் போதம் கலப்பது கல்வி யின்றேல்
பெற்றிடும் மழவு மூங்கை என்னவே பேச லாமே. கஅஉ

உண்டொரு கடவுள் வேதம் உரைத்திட உயிரின் தன்மை
கொண்டவன் அல்லன் என்றுங் கூறிடின் உருவங் கூடில்
பண்டைய உயிரே யாகும் படித்தநூ லளவே ஞானம்
கண்டிடும் உருவ மின்றேல் கருதுவ தில்லை என்றான். கஅங

தேவரும் முனிவர் தாமும் சித்தரும் நரரும் மற்றும்
யாவரும் உரைப்பர் வேதம் [2]இயமபினர் இன்ன ரென்னப்
[3]போவதன் றென்று நாளும் பரம்பரை புகல்வ தாகும்
[4]கூவல்நீ ரென்னில கொளளேம மறுமையைக் குறித்த லாலே.

உன்னிய அங்க மாறும் மூன்றுப வேதந் தானும்
தன்னுளே அடக்கி வேறு தங்கிடா வகையைச் சார்ந்து
முன்னமோர் தோற்ற மின்றி முடிவின்றி நித்த மாகி
மன்னியோர் [5]இயல்பே யாகி வழங்கிடும் மறைய தென்றான்.

செய்தியும் நெறியும் மேவுந் தேவரும் பொருளும் எல்லாம்
எய்திய பன்மை யாலே ஓரியல் பியம்பா தாகும்
ஐயமில் காலம் மூன்றும் அறிந்தபின் நெஞ்ச கத்தாய்
மெய்யதாய் வந்து [6]தோன்றி விளங்கிடும வேத நூலே. கஅ௬

தப்பிலா வாகுந் தாது பிரத்தியந் தன்னி னோடே
ஒப்பிலா தாம்பி ராதி பதிகமாம் உறுப்புங் கொண்டு
[7]செப்புமாம் வேதம் சொன்ன விதிப்படி செய்யச் சேம
வைப்பதாம வீடு பாசம் மருவலாம ஒருவ லாமே. கஅஎ

போக்கொடு வரவு காலம் ஒன்றினில் புணர்வ தின்றி
[8]ஆக்கவே ரொருவ ரின்றி அனுதியாய் அணுக்க ளாகி
நீக்கிடா வினையிற் கூடி நிலமுத லாக நீடி
ஊக்கமா ருலகம் என்றும் உள்ளதென் றுரைக்க லாமே.

நித்தமாய் எங்கு முண்டாய் நீடுயிர் அறிவு தானுய்ப்
புத்திதான் ஆதி யாய கருவியின் புறத்த தாகிச்
சுத்தமாய் அருவ மாகித் தொல்லைவல்வினையின் தன்மைக்(கு)
ஒத்ததோர் உருவம் பற்றிப் புலன்வழி [9]உணரா நிற்கும்.

---

[1]கற்றிடு நூலாற் போதம். [2]இயற்றினர். [3]போவதொன் றன்று. [4]கூவலிநகென்னில். [5]இயல்பா யெநகும். [6]தோன்றும் விளம்பிடின். [7]செப்பமா. [8]ஆக்குவோரொருவர். [9]உணர்ந்து.

செயல்தரும் வினைகள் மாய்ந்து சிந்தையிற் சேர்ந்து நின்று
பயனொடு பலியா நிற்கும் பலாலமும் தழையு மெல்லாம்
வயல்தனின் மருவி நாசம் வந்தபின் பலத்தை வந்திங்(கு)
இயல்பொடுந் தந்தாற் போல என்றும்பின் இயம்பு கின்றான்.

நீதியா நித்த கன்மம் நிகழ்த்திடச் சுபத்தை நீங்கார்
தீதிலா இச்சா கன்மம் செந்தழல் ஓம்பிச் செய்ய
ஏதுதான் வேண்டிற் றெல்லாம் எய்தலாம் சோம யாகம்
ஆதிதான் ஆசை வீசி அமைத்திட வீட தாமே. கசுக

கருதிய கன்மம் ஞானம் இரண்டுங்கா லாகக் கொண்டு
மருவிட லாகும் வீடு மதிதனை மதித்துச் செய்தி
ஒருவிடில் பதித னாகும் பதிதனைக் கதியின் உய்க்கத்
தருவதோர் [1]நெறிதான் இலலை என்னவுஞ் சாற்றி னானே.

பசுப்படுத்(து) யாகம் பண்ணப் புண்ணியம் ஆவ தென்று
வசிப்பினான் மறைகள் சொன்ன வழக்கினால் வாய்மை யாக
நசிப்பிலா மந்தி ரங்கள் நவிற்றலின் இன்ப மாகும்
பசிப்புளான் ஒருவன் உண்ணப் பசியது தீர்ந்த பண்பே.

## 8 - உ. பட்டாசாரியன் மத மறுதலை

வேதஞ் சுயம்புவென வேதந்த வாய்மொழியில்
வேறும ப்ரமாண முளதேல்
நீதந்து காணிங்கு மாதுங்க பாரதமும
நேர்கண்ட தாகும் அதுபோல்
ஓதுஞ் சொலாய்வருத லானுங்க டாதிபட
மோவந்தி டாஒ ருவரா
லேதந்த தாமமறைக ளாய்வந்த வாய்மொழியும்
வேறிந்து சேக ரனதே. கசுசு

உரைதந்தி டான்ஒருவன் எனிலிந்த வானினிடை
ஒலிகொண்டு மேவி உளதாம்
புரைதந்த [2]வாம்மறைகள் [3]அபிவெஞ்ச மாயொளிர்கை
பொருள்தநத தீப மதுவேல்

[1]உரைதான். [2]மாமறைகள். [3]பிரவஞ்ச.

வரைதந்த [1]தாலிவ்வுரை கபிலன்சொ லாகுமது
மறைகின்ற வாறும் வரவும்
விரைவின்சொ லாயிதனை எதுகொண்டு மேவுவது
விடைகொண்ட தாலுன் உரையே. கசுரு

உருவின்க ணேமருவி வரில்இன்று [2]தேரைஉரை
உளதுங்கள் நூலின் [3]மறையும்
தருகின்ற நாதரவர் இவரென்று நாமமது
தரவந்தி டாமை யதனால்
வருமென்று நேடியெனில் வளர்கின்ற தீவதனில்
வருகின்ற வாடை பலவால்
ஒருதந்து வாயனவன் இவனென்ற போதிலிவை
உளதென்று [4]நீடி யவையே. கசுசு

மறைநின்று நாலுதிசை யவர்ஒன்ற தாகவரும்
உரைதந்த வாய்மை அதனால்
நிறைவென்று நீடுமெனில் வனையுங்க டாதிபல
சொலவொன்றி நீடி யுளதாம்
குறைவின்றி நாடும்மொழி அவைசென்று கூடுவதொர்
குணமுண்ட தாகும் மலர்தான்
உறைகின்ற மாலைதனில் உளதென்ற தாகுமெனில்
உணர்வின்ற தாழி ஒலியே. கசுஎ

உடல்நின்று நாமுணரு மதுகண்ட வாறொருவன்
உலகங்க ளேஉ ருவமாய்
இடைநின்று மாமறைக ளவைஅன்று வாய்மொழிய
இவைகொண்டு லோக நெறியின்
கடனின்று வாழுமது கருதும்பின் ஆணைவழி
கருமஞ்செய் காசினி யுளோர்
திடமென்று சீர்அரச னுரைதங்கும் ஓலைதிரு
முகமென்று சூடு செயலே. கசுஅ

---

[1] தால் உன் உரை. [2] தேரருரை. [3] உரையும். [4] நீடி வருமே.

முடிவின் றி வேதியர்கள் முதல்வந்த மூவர்களும்
மொழியும்சொல் ஆரிய மெனில்
கடிவின் றி யேகணித ரவர்[1]கண்ட வாறதுவென்
வடகண்ட சாதி கடியா(து)
ஓடிவின் றி ஓதுவதென் உரைதங்கு வேதமொழி
உளதென்று கூறு மவர்தாம்
அடியின்று தானெனும [2]தறிவின் றி ஈனுமவர்
இலையென்ற ஆத ரவதே. கசக

அறிகின்ற பான்மைஅவ யவநின்ற தாகில்அணு
அழியுங்க டாதி யெனவே
செறிகின்ற வாறதிலை யெனின்வந்து சேருமது
திடமன்று கூட ஒருவன்
குறிகொண்டு காரின்முளை வருகின்ற பீசமவை
குலையொன்றி வேனி லழியும்
உறுகின்ற காலமவை [3]உடனின்று போயழியும
உலகென்று நீடி யிலதே. உ00

நிறைவெங்கு மாகில்உயிர் நெறிநின்று போய்வருதல்
அணைவின்ற தாம்உ டலிலே
குறைவின்றெ லாமுமஉள குடகந்த மாகில்அவை
விடநின்ற வாறு குறியா
உறைகின்ற மாதவர்கள் உடனின்று போய்வறிதோர்
உடல்கொண்டு மீள்வ துண்ராய்
மறைதந்த [4]வாய்மைதனில் நிறைவின் றி யேயுலகின்
மலைகின்ற தாலுன் உரையே. உ0க

அழிகின்ற தால்வினைகள் ஆகின்ற வாறெனெரு
வதுமங்கி யான பரிசேல்
ஒழிவின் றி [5]ஓதனமும் அறவுண்ணநாம் வினைகள்
உறுகின்ற வாற தெனலாம
கழிகின்ற தாலறிவு வினைதந்தி டாவினைஞர்
கருமங்கள் நாடி [6]யுறுவோர்
பழுதின் றி யேஉதவும் அதுபண்ப தாகஅருள்
பரமன்க ணுகும் வினையே. உ0உ

---

[1]கொண்ட. [2]தனையின்றி. [3]உடன்வந்து. [4]வாய்மையதின். [5]ஓதனமுன் அறவுண்டு. [6]உரவோர்.

கருமங்கள் ஞானமது உடன்நின்ற லால்மருவு
கதி[1] தங்க லாகு மெனின்நீ
தரும்அங்க ராகமுதல் அவைதங்க மேலறிவு
தவிரும்பின் வீடும் அணையா
பொருள்நின்று தேடிவரு பயன்உண்டு போகவினை
புரிகின்ற வாற [2]தெனவே
திருநின்ற போகம்வளர் [3]அவிசென்று மேவியது
செலவுண்டு சூழ்வ செயலே. உ0ங

## 9 - க. பிரபாகரன் மதம்

அருந்தவனும் சைமினிபண் டாரண நூல் ஆய்ந்தானாய்த்
திருந்தும்உல கினிற்கொண்டு செப்பியநூல் திறமதனைப்
பரிந்துபிர பாகரன்பட் டாசானில் வேறாகிப்
புரிந்துரைசெய் நெறியதனைப் புவனிமிசைப் புகன்றிடுவாம்.

அருஞ்செயலின் அபாவத்தே அபூர்வமெனும்அதுதோன்றித்
[4]தருஞ்செயலே நின்றழியில தான்பலிப்ப தாகுமது
வருஞ்செயல்ஒன் றின்றியே மண்சிலைபோ லாமுத்தித்
தருஞ்[5]செயலீ தெனவுணர்ந்து தாரணிமேல் அவன்சாற்றும்.

## 9 - உ. பிரபாகரன் மத மறுதலை

வேறுபலந் தருவதுதான் வினையென்று வேதங்கள்
கூறவோர் அபூர்வந்தான் கொடுக்குமெனக் கொண்டவுரை
மாறுதரு மறையோடு முன்பின்றி வந்ததால்
தேறியவிண் பூமுடிமேற் சேர்ந்துமணந் திகழ்ந்ததுவாம்.

ஆனந்தம் கதியென்ன அறிவழிகை வீடென்கை
ஊனம்பின் உணர்விழந்தோர்க் குளதாகும் உயர்முத்தி
தானிங்குச் சிவப்பொழியத் தழல்நிற்கு மாறில்லை
ஞானங்கெட் டுயிர்நிற்கும் எனுமுரைதான் நண்ணுதால்.

---

[1] தஙகலாவதெனின். [2] தெனலாம். [3] வினை. [4] தருஞ் செயல் ஒன்றின்றியே தான்பலிபப, தருஞ்செயல் நின்றழியில் பின்பலிப்பிப்ப. [5] செயலுமென.

## 10 - க. சத்தப்பிரமவாதி மதம்

உரையா னதுமை யலின்ல் உலகாம்
புரையோ ருணரும் பொருள்பொய் யிதனை
விரையா துணரும் அதுவீ டெனவே
வரையா துரைவா திவகுத் தனனே. உ௦அ

பரிணா மம்விவர்த் தனம்மா யம்அதில்
தருமாம் உலகுள் ளதுசத் தமதே
பொருளா வதுசொல் நலம்அல் லவெனில்
மருவா துபொருட் டிறமற் றிலையே. உ௦கூ

பூமா வெனவே உரையும் பொருளும்
ஆமாம் பொருளொன் றில்அணைந் திலதால்
நாம்ஆ தரவெய் துசொல்நன் கருவாய்த்
தாமாம் பொருள்நெற் பொரிதா னெனவே. உக௦

சொல்வந் தெழலும் பொருள்தோன் றுதலால்
சொல்லே பொருளென் றுதுணிந் திடுநீ
சொல்லும் பொருளும் உடனின் றதெனின்
சொல்லும் பொருளின் றுசொல்நின் றதுவே. உகக

## 10 - உ. சத்தப்பிரமவாதி மத மறுதலை

உரையா னதுமை யலின்ல் உலகேல்
உரையாய் ஒருமை யலும்உள் ளதென
வரையா துணரும் அதுவண் கதியேல்
வரையா மறையோ டுமலைந் தனையே. உகஉ

அருவம் உரையா தலின்அவ் [1]வுருவாய்
மருவும் பரிணா மம்[2]மறந் திடுமாம்
பருகுந் ததியா னதுபா லதெனில்
உருவம் அதுவாய் அழியும் உரையே. உகங

ஆயம் உடன்அந் தவிவர்த் தனமும்
மாயவ் வுளதென் றுசொல்எவ் விடமு
மாய்நின் றமையின் உரையின் நலமும்
ஆயும் பொருளுக் கறிநா மமதே. உகச

[1]உரையாய். [2]மறைந்திடுமாம்.

உரைபோல் பொருளுக் குரு[1]வின் மையினல்
உரையே [2]பொருளென் றனை இன் றரியென்
உரையே கவிமா லவனுக் குளதாம்
உரையாய் கவியா கவொர்மா லினையே. உஉரு

நெல்லில் பொரியா வதுநீ டழலில்
சொல்லில் பொருளொன் றுடுதொக் கிடலால்
கல்வித் திறமாம் உரைகாட் சியினல்
மல்லற் பொருள்சா லவளந் தருமே. உஉசு

முன்கண் டபொருள் பெயரா தலினல்
பின்கண் டபிழும் புணரும் பெயரால்
நன்கண் டபொருட் கொருநா சமதின்(று)
என்கண் டனைகா ரணமின் றழிவே. உஉஎ

பொருள்இந் திரியம் உணர்வோ டுபுமான்
இருளின் றியிடும் ஒளிஇத் தனையும்
மருவும் பொழுதில் வருஞா னமதின்
ஒருவும் பெயர்அத் தம்உதித் திடுமே. உஉஅ

அத்தம் [3]தெளிதற் கொளியா னதுபோல்
சத்தம் பொருள்[4]தான் அறிதற் குளதாம்
நித்தம் அதுவன் றுரைநின் றழியும்
சித்தன் ஒருவன் உரைசெய் தனனே. உஉகூ

## 11 - க. மாயாவாதி மதம்

நானே பிரமம் என்றுரைத்து
ஞாலம் பேய்த்தேரெனஎண்ணி
ஊனே புகுந்து நின்றுயிர்கட்
குபதே சங்கள் உரைத்துவரும்
மாணு மதிகே டனுமாய
மாயா வாதி பேயாகித்
தானே உரைக்கும் அந்நூலின்
உண்மை தன்னைச் சாற்றுவாம். உஉ௦

---

[1]இன்மையினல். [2]யுளதென்றனை. [3]தருதற் கொளியானமை யிற். [4]தோன் றிடுதற் குளதாம்.

அறிவாய் அகில காரணமாய்
அனந்தா னந்த மாய்அருவாய்ச்
செறிவாய் எங்கும் நித்தமாய்த்
திகழ்ந்த சத்தாய்ச் சுத்தமாய்க்
குறிதான் குணங்க ளொன்றின்றிக்
கூறும் வேதம் தனக்களவாய்ப்
பிறியா அனுபூ திகந்தனக்காய்
நின்ற தந்தப் பிரமந்தான். உஉக

ஒன்றும் இரவி பலபாண்டத்(து)
உண்டாம் உதகத் தங்கங்கே
நின்றாற் போல உடல்தோறும்
நிகழ்ந்து நிற்கும் பொருள்மேற்கண்
சென்றாற் போலப் புலன்களுக்குஞ்
சிந்தை தனக்குந் தெரிவரிதாம்
என்றால் காட்சி முதலாய
இருமூன் றளவைக் கெட்டாதால். உஉஉ

இருளில் பழுதை அரவெனவே
[1]இசையும் இரவி இருங்கதிர்கள்
அருளப் பழுதை மெய்யாகி
அரவு பொய்யாம் அதுவேபோல்
மருளில் சகமுஞ் சத்தாகி
மருவித் தோன்றும் மாசில்லாத்
தெருளில் சித்தே சத்தாகும்
பித்தாம் சகத்தின் செயலெல்லாம். உஉங

உலகந் தானும் நிருவசனத்
துண்டாம் இனமேல் உதியாது
நிலவி யுண்டேல் அழியாது
நிற்ப தாகும் மித்தையால்
இலகு சுத்தி கனல்சேர
இன்றும் வெள்ளி நின்றதாம்
குலவு சகமும் அவிகாரம்
பரமார்த் தத்தில் கொள்ளாதால். உஉச

[1]இசைந்து நிற்கும்.

தாங்கும் உலகுக் குபாதானம்
சத்தாம் சிலம்பி நூல்தன்பால்
வாங்கி வைத்துக் காப்பதுபோல்
வைய மெலலாம் தன்பக்கல்
ஓங்க உதிப்பித் துளதாக்கி
நிறுத்தி ஒடுக்கத் திலதாக்கும
ஆங்கு வநத வாறதனால்
சத்தாம் சகத்தின் அமைவெல்லாம். உஉரு

[1]மன்னும் பிரமந் தனின்வானாய்
வானின் வளியாய் அந்தவளி
தன்னின் அழலாய் அழலின்பால
சலமாய்ச் சலத்தில தாரணியாய்ச்
சொன்ன இதனின் மருந்தாகித்
தோற்றும மருந்தில் அனனமாய்
அன்ன மதனில துவக்காதி
ஆறு தாது ஆயினவால். உஉசு

ஆறு தாதுக் களும்கூடி
வந்த கோசம் அன்னமயம்
மாறில் பிராண கோசமயம்
மன்னு மதனில மனோமயந்தான்
வேறு வருமவிஞ் ஞானமயம்
மேவும் அதனின் அதுதனனில
கூறி வரும்[2]ஆ னநதமயம
கோச மயமபின் கூடியதால். உஉஎ

கோச உருவில பிரமந்தான்
கூடித் தோன்றும் நீடுமொரு
காசம் [3]மருவும் கடந்தோறும்
நின்றுற போலக் கதிரவன்தன்
வீசு கிரணம உருவின்கண்
வெளிபபட் டிடுவ ததிற்பற்றும்
பாசம் அதனுக் கின்றாகும்
என்றுற பரத்திற் பற்றுண்டோ. உஉஅ

---

[1]மன்னு பிரமத்தினின். [2]ஆனந்தமய கோசம் பின்பு. [3]மருவிக்.

அலகில் மணிக ளவைகோவை
அடைந்த பொழுதின் அங்கங்கே
நிலவும் ஒருநூல் பலநிறமாய்
நின்றாற் போல நீடுருவம
பலவும் மருவு பேதத்தால்
பன்மை [1]யாகும பிரமந்தான்
குலவு போக போக்கியங்கள்
கொள்ளும் போன்று கொள்ளாதால். உஉகூ

போற்றும் செயலால் பலநாமம
புனைந்து போக போக்கியத்தில்
தோற்றும் நனவு கனவினுடன்
சுழுத்தி துரியம் எய்தும்இதற்(கு)
ஏற்ற கரணம் நிரைநிரையே
ஈரேழ நாலொன் றெலலாமும்
மாற்றி நிற்கும கேடின்றி
வந்த போகம மாய்நதிடவே. உ௩0

கருவி யெல்லாம நானெனவே
கருதல பந்தம அக்கருத்தை
ஒருவ முத்தி யுணடாகும
உள்ளம·வித்தாம் செய்தியினல்
மருவும் மாயா காரியங்கள்
அவித்தை மாய வேமாயை
பிரியும் பிரிய ஞானமது
பிறக்கும் பிறவா பேதமே. உ௩௧

ஆன கன்ம அனுட்டயஙகள்
அந்தக் கரண சுத்திதரும்
ஊன மின்றி அச்சுத்தி
ஞான மதனை உண்டாக்கும்
ஞான மதுதான் பிரமத்தை
நானென் றுணர்த்தும நான்பிறந்தால்
வான மதிநீர்த் துளக்கமெனக்
காணுந தன்னை மாயையிலே. உ௩உ

[1] யாகிப்.

தானே தானுய் அனுபோகம்
தன்னில் தன்னை அனுபவத்திட்(டு)
ஊனே உயிரே உணர்வேயென்
றொன்று மின்றி உரையிறந்து
வானே முதலாம் பூதங்கள்
மாய மாயா தே[1]மன்னி
நானே பிரமம் எனத்தெளியும்
ஞானம் பிரம ஞானமே. உ௩௩

சாற்றும மறைதத் துவமசிமா
வாக்கி யங்கள் தமையுணர்ந்தால்
போற்றி அதுநீ யானுயென்
றறைவ தல்லால் பொருளின்றே
தேற்று மிதனைத் தெளியாதார்
தெளியப் பஞ்ச ஆதனமேல்
ஏற்ற இயம நியமாதி
யோகம் இருநான் கியற்றுவரால். உ௩௪

## 11 - உ. மாயாவாதி மத மறுதலை

ஏகம் நானென இயம்பி இப்படி
அறிநது முத்தியடை மின்னென
மோக மானஉரை [2]சோகம் இன்பொடு
முடிந்தி டாதுமல டாகிய
காக மானது கருங்க லின்தசை
பறித்த மூங்கரிய குஞ்சியின்
தாக மார்பசி தவிர்க்க வாயிடை
கொடுத்ததென் றுரைசெய் தன்மையே. உ௩௫

நீடு வேதம்அள [illegible] ஏகமெனும்
நீதி தான்நிகழ்[illegible]ாகுமேல்
நாடி ஞாதிருவும் ஞான ஞேயமுடன்
நாளும் நான்மறையும் ஓதலால்

---

[1] நின்று. [2] சோம்பு மூன்றேடு.

ஓடு மாகுமுன(து) ஏகம் ஓதுமிவை
ஊன மாகிஉரை மாறுகோள்
கூடு மாகும்அணு பூதி தானுமது
கூடிடா தறிவி லாமையால். உ௩௬

நீதியால் ஒளிகொள் பானு வான(து)அகல்
நீரி லேநிகழு மாறுபோல்
ஆதி தானுருவ மாய காயமதின்
மேவி ஆவதிலை யாகுமாம்
தீதி லாஅருவ மாதலால நிழல்கள்
சேர வேறிடமி லாமையால்
ஓதில் ஓர்அகலின் நீரி லேயொருவர்
காணலால் இலதுன் ஏகமே. உ௩௭

வேறு வாயில்புல னோடு மேல்மனமும
மேவி டாதுபிர மாணமும்
[1]கூறி டாதறிவு தானெ னுஉணர்தல்
கோடு நீமுயலின் நாடினுய்
ஈறி லாதபரம் ஏக மேயென
[2]இயமபுநீ இசையும ஞானமும்
[3]பேற தாவதிலை பேத மானஇது
பேண வேயுளது பேசிலே. உ௩௮

இலகு சோதிமணி எனவும் ஏகமெனின்
இதனில் ஏகமது விலகினுய்
குலவு காசுமொளி அதுவும நீடிவளா
குணமும் நாடுவதொர் குணியுமாம
பலவு மானகுண மொருவும் ஏகமது
எனவும நீபகரில நிகரிலா
உலக மானதனை உதவு மாறதிலை
உணர்வு தானுமிலை உணரிலே. உ௩௯

புற்றி னேர்பழுதை [illegible]க போதுமயிர்
புளக மாகஅர[illegible]விலே
உற்ற தாம்அதனை [illegible]க்க வேஉல(கு)
உதிக்கு மாறுமொரு சத்திலே

[1]கூறிடாதுளது. [2]இயம்புவோர். [3]பேறதாகிமிகு.

பெற்ற தாகுமெனின் அப்பி ராந்தியுடை
யோரும் [1]அப்பிரம பேதமாய்
[2]நிற்பர் நீபகரின் முற்றும் ஐயநிலை
பெற்றும் [3]இன்ப மதிலாததாம். உசம

ஓதி யேஉலக மதனை நீயும்நிரு
வசன மாகஉரை [4]செய்வதென்
பேதை யோய்உளதும் இலதும அலலபொருள்
பேசு வாரும்உள ரோசொலாய்
ஆதி யேயுளது வருத லால்இலதி
லாவ தின்மைய தழிநதுபோம்
நீதி யால்உளதி லாமை நேர்வதெனின்
நேர்மை யாகியது நின்றதே. உசக

வேற தாகியது போல்இ ருந்தமையில்
வெள்ளி சுத்தியெனில ஐயமே
கூற லாமஒரு பரத்தொ டொத்தபொருள்
கொண்டு [5]விண்டநிலை கண்டனம
மாறி டாதுநிலம நீர தாகிஅனல்
வாயு வாகிஅவை மாறியும்
[6]சேறி லாதுவிவ கார மன்றுபர
மார்த்த மாயது செறிந்ததே. உசஉ

மாய நூலது சிலமபி வாயினிடை
வந்த வாறதனை மானவே
ஆய தேஉலக மான தும்பிரம
மதனி லேயெனில அடங்கிநின்(று)
ஏயு மாகுமொரு சித்து மத்துடன்
நிலாத தென்றுபின் [7]இயம்பின்நீ
பேய னேகடம மிருத்தில் வந்தது
பிறப்ப தாவதிலை பேசிலே. உசங

---

[1]வேறு பிரமத்திலே. [2]நிற்றல்நீ. [3]நின்மலமிலாததாம்.
[4]தருவதென். [5]வைத்தபடி. [6]சேறிடாது. [7]இயம்பும் நீ.

வேற தாகும்உரு வத்தி லேபரம்
வெளிப்ப டும்மென விளம்பில்நீ
ஊறி லாஉரு அசத்தி லேபிரமம்
உண்டு [1]தானுணர் விலாதமென்
மாறி வாயுவும் மனுதி யானவையும
வந்தி டாமையினி வின்றெனின்
ஈறு தானுடைய தாய தோபிரமம்
என்கொ லோஇவை இறப்பதே. உசச

பற்ற தின்றிஉடல் நின்றி டும்பரம்
எனப்ப கர்ந்தனை பரிந்துடன்
உறறு டம்பு[2]நரை திரைகள் நோய்சிறை
உறுப்ப ழிந்திவையு முள்ளபின்
குற்ற மென்றிதனை விட்டி டாதுவிட
வென்ற லுமகுலைவு கொண்டிடும
பெற்றி கணடுமொரு பறற றுமபரிசு
பேச வேஉளதுன் ஆசையே. உசரு

சோதி மாமணிகள் ஊடு போனதொரு
நாலு மானநிலை சொலலிடும்
நீதி யாலமணிகள் பேத மாகிஒரு
நூலின் நின்றமை நிகழ்த்தினுய்
ஆதி தானொருவ னுகி யேபல
அனந்த யோனியில அமர்ந்தவன்
பேதி யாதநிலை பேசி னுய்உலகு
பேத மேஇலத பேதமே. உசசு

ஒத்து நின்றுடலின் இன்ப துன்பமவை
உறறும உற்றிடுவ தின்றெனும
பித்த உன்னுரையின உறற தேயிலது
பெற்ற தின்றிலது பெறறதேல
[3]துய்த்த லென்னுறுதல சீவ பாவமது
சொல்லி னெனறினுந்தோய் விலாமைநீ
வைத்து நித்தமன வாக்கி றந்தபர
மென்ன மானமிலை இனனமே. உசஎ

---

[1] காணுணர்வ தின்றுதான். [2] திரை நோய் நரைச்சிறை.
[3] துய்த்தலின் றுறுதல்.

எங்கும் நின்றிடில் அவத்தை யின்றிடும்
இசைந்தி டுங்கரண மென்னில்நீ
அங்கு நின்றபரம் எங்கொ ளித்ததது
நின்ற தேலஅவை அடங்கிடா
இங்கு நின்றதொரு காந்த மானகல்
இரும்பு சன்னிதி இயங்குநேர்
தங்கி நின்றதெனில் [1]நீங்கி மீளும்வகை
தங்கி டாதுனுரை தப்பதே. உசஅ

இருள்பொ திந்ததொரு பரிதி இவ்வுலகில்
இசையில இனறுடலம நானெனும
மருள்பொ திந்ததொரு பிரம மிங்குளது
மருவி நின்றஉரு ஒருவியே
தெருள்பொ திந்துபரம நானெ னுமதெளிவு
சென்ற போதுகதி யென்றிடும்
பொருள்பொ திந்ததெனில அமல னுக்குமலம
வருத லாலுளது புன்மையே. உசகூ

சுத்த மானது பரத்தி னுக்கணவ
தின்று சுத்தமத னுதிநீ
வைத்த [2]மாயமுறு சித்(து)அ சுத்தமுற
மற்ற தற்குமலம் [3]வைத்தனை
ஒத்த சீவன்மல கனம மாயையுறு
கின்ற காரணம உணர்நதிடாய்
பித்த னேவிறகி னிற்பி றப்பதெரி
யென்னில் வேறுபொருள் பெற்றதே. உரு௦

உன்னின் நீயும் அனுபோக மென்றபொழு
துற்றி டும்துவிதம் மற்றதிங்(கு)
என்னில் இல்லையெனில் இலலை நீயுமறி
வின்மை கணட இடம உண்மையேல
மன்னு மோருணர்வு வந்தி டும்உணர்வெ
லாமு மாயையெனில் மாயையே
சொன்ன தோர்பிரம மாயி டும்பிரமம
மாயை யாய்அறிவு சோருமே. உருக

---

[1]இங்கு. [2]மாயைமுன். [3]வைத்திடாய்.

ஆர ணங்கள்தரு தத்து வம்அசி
பதங்க ளின்பொருள் அறிந்திடாய்
கார ணம்அதுவும் நீயும் என்றிருமை
கண்டு வேறதின்மை [1]கருதிடாய்
நார ணன்பிரம னுலும நாடரிய
நாய கன்கழல்கள் நண்ணிநீ
ஏர ணைந்துபொலி சாத னங்கள்கொடு
யோக ஞானமும இயற்றிடே. உ௫உ

## 12 - க. பாற்கரியன் மதம்

மன்னு மறையின் முடிவென்று
மாயா வாதி உடன்மலைந்து
பின்ன மாகிப் பிரமத்தைப்
பேதா பேதம சாதித்துப்
பன்னு மொருநூல் அதுவாகப்
பாரின் மீது பாறகரியன்
சொன்ன இதனை இந்நூலின்
அகத்தே தோன்றச் சொல்லுவாம. உ௫௩

சித்தே உலகாய்ப் பரிணமித்துச்
சீவ னுகித் திகழ்ந்தமையால
சத்தே யெல்லாம [2]முத்தியினைச்
சாரக் கண்ட ஞானங்கள்
வைத்தே மொழியும மாமறைகள்
சொன்ன மரபே வந்தக்கால்
ஒத்தே கெட்டுப் பிரமத்தோ
டொன்ருய்ப் போமென் றுரைத்தனனே. உ௫௪

## 12 - உ. பாற்கரியன் மத மறுதலை

இயம்பு கின்றதுல காயி டாது[3]சட
மின்றி நின்றுசட மாகியே
முயங்கு கின றமையில் இலவணத்திரத
முழுதுமே கனதை முயல்கைபோல்

---

[1]கருதலால். [2]முத்திதனை. [3]சடமென்று நின்ற.

பயந்த தென்னில்அறி யப்ப டும்பொருளும்
அறிவு மென்றுபல வாகுமோ
தியங்கு கின்றதெனு ரைத்தி டாய்கடின
மாதி யாகிவரு சித்தனே. உருரு

உன்னு கின்ற[1]பிர மத்தி லேசிறிதிவ்
வுலக மானதென ஓதின்நீ
மன்னு கின்றசில கால மோடழியும்
அழிய வந்துதவு மாயையால
தன்னி லொன்றுமெனில வருத லோடிறுதி
தருத லாலஅதுச டத்ததாம்
[2]உன்னெ டச்சகமும உண்மை யன்றுசட
மென்ன வேஉறுதி மன்னுமே. உருசு

வித்தெ ழுந்துமர மாய்வி ளைந்தமை
விளமபி னுய்உவமை வேறுநீ
நித்த மென்றஉரை பொய்த்து நீடு[3]சட
மாய்எ ழுநதழியும் நின்பரம்
ஒத்தெ ழும்பொழுது வித்தி னுக்கவனி
யுண்டு தாரகமு னக்கெனு
பித்த னென்றுல குரைத்தி டுமபிரம
மாயி னுய்இவைபி தற்றிலே. உருஎ

சூட கம்கடகம் மோதிரம் சவடி
தொடரொ டாரம்முடி தோடுநாண்
ஆட கந்தருவ தாகும் அப்படி
அனைத்தும அப்பிரம மாகுமேல
[4]நீடும அப்பணிகள் செய்து ளோர்அவை
[5]புனைந்து ளோர்களைநி கழ்த்திடும்
நாடி டும்சகம் இயற்று வோர்கொடு
நடத்து வோர்உளர்ந விற்றிலே. உருஅ

---

[1]பரமதனிலே. [2]இன்னமுஞ் சகம துண்மை. [3]சகமாய்.
[4]நீடிடும் பணிகள். [5]புனைந்துளோாதமை.

அறிவி னோடுசெயல் [1]மாறில் வீடதனை
அணுகொ ணாதவைஇ ரண்டினால்
உறுதி யானபிர மத்தி னோடழிய
ஒன்ற லாமென உரைத்திகாண்
இறுதி யேல்அதனொ டிசைவ தின்றிசைவ
[2]துள்ள தாயிடின்அவ வின்பமே
பெறுதி நீஉடலொ டுயிர்க ளாய்[3]அறிவு
பிரியு மாறுசெயல பெறுவதென். உருசு

## 13 - க. நிரீச்சுரசாங்கியன் மதம்

மூலம் புரியட் டகம்விகிர்தி
யாகி மூன்றாய்ப் பிரகிருதி
தூல சூக்கம [4]பரமாயச்
சுத்த புருடன் சன்னிதியில்
பாலன் சேட்டை புரிந்துலகம
யோனி பலவாய்ப் பரந்தொடுங்கும்
சால வென்று நிரீச்சுவர
சாங்கி யன்றான் சாற்றிடுமே. உசுO

## 13 - உ. நிரீச்சுரசாங்கியன் மத மறுதலை

சுத்தன் அறிவன் புருடனெனில்
சூழா தாகும் பிரகிருதி
பெத்தம் நீங்கி னாலும்பின்
பெத்த னவன் பேரறிவால்
கத்த மேவும் பிரகிருதி
கண்டு கழிக்க மாட்டானேல்
[5]முத்த னாகான் சுத்தனுக்கு
மூலப் பிரகி ருதியிலையாம். உசுக

[1]மாறி. [2](து) உள்ளதாயிடினும் இன்பமே. [3]அது பிறக்கு மாறு செயல் பெற்றியால். [4]அம்பரமாய்ச். [5]முத்தனாய.

புருடன் பிரகி ருதிபெற்ருல்
போதம் சிறிதங் குண்டாகிக்
குருடன் முதுகில் முடவனிருந்
தூர்ந்தாற் போலப் பிரகிருதி
இருள்த னிடத்தே இருந்தியங்கும்
கன்மால் இறையன் றிரண்டினையும்
மருள்த னுருவாய்ச் சேட்டிப்பித்
தறியும அமலன் அரனேயாம். ௨௬௨

அறியான் புருடன் பிரகிருதி
அசேத னமகா ரியத்தினுக்குக்
குறியாய் நாதன் உளனென்று
கூறும முத்தி விவேகமெனில்
செறிவாம் தனைபோ காதறியில்
சேர்த்தோன் [1]வேண்டும செயலிற்போம்
நெறியால் பணிசெய் துடற்பாசம்
நீக்கிக் கொள்நீ நின்மலனுல். ௨௬௩

## 14 - க. பாஞ்சராத்திரி மதம்

ஆதியாய் அருவ மாகி அகண்டபூ ரணமாய் ஞானச்
சோதியாய் நின்ற மாயன் சுவேச்சையால் உருவு கொண்டு
நீதியார் கருணை யாலே நீள்கடல் துயின்று நாலும்
ஓதினு னென்று பாஞ்ச ராத்திரி உரைப்ப னுற்றே. ௨௬௪

உந்தியில் அயனை [2]ஈன்றும் அவனைக்கொண் டுலகுண் டாக்கி
அந்தநல் லுலக ழிக்க அரனையும் ஆக்கு வித்துத்
தந்திடுஞ் சகத்தி னுக்குத் திதிகர்த்தா தானே யாகி
வந்திடும் தோற்றம ஈறும நிலைமையும் பண்ணும் மாயன்.

மீன்ஆமை கேழல் நார சிங்கம்வா மனனாய் வென்றி
ஆனுத இராமர் மூவர் ஆயனாய் அளித்தான் கற்கி
தானுயும் வருவன் இன்ன மென்றவன் சாற்றித் தேவர்
கோனுயும் நிற்ப னென்று கூறுவன் குறிப்பி னோடே. ௨௬௬

---

[1]வேண்டிற். [2]ஈன்றங்கவனைக்.

ஏழ்கடல் செலுவில் ஏற்றும் இருங்கிரி முதுகில் ஏற்றும்
தாழ்தலம் முழுதுங் கண்டும் [1]தமனியன் உடல்பி ளந்தும்
வாழுல களந்தும மண்ணுய் மன்னர்க்கு மன்ன ராயும்
பாழ்பட உழறிப் பாரும் நோக்கும்பின் பரியு மாயே. உகூஎ

[2]பொய்கைவாழ் முதலைவாயில் போதகமபோத மாட்டா(து)
ஐயனே நாதா ஆதி மூலமே என்ற ழைப்ப
உய்யயாம பணிமால ஓல ஓலவென் ரேடிச் சென்று
வெய்யவாய் முதலை வீட்டிக் கரிக்கும்வீ டருளி ஞனே.

அலைகடல் கடைந்து வானோர்க் கமுதினை அளித்தும் தீய
கொலைபுரி அசுரர் தம்மைக் கொன்றுல கங்கள் காத்தும்
கலைமலி பொருளன் பர்க்குக் கருணையால் உரைத்தும மிக்க
தலைமையில் நிற்பன் மாயன் எனறும்பின் சாற்றி ஞனே.

மாயையாய் உயிராய் மாயா காரிய மாகி மன்னி
மாயையாற் பந்தஞ் செய்து வாங்கிடும் அவனு லன்றி
மாயைபோ காதென் றெண்ணி மாயனை வணங்கப் பின்னை
மாயைபோம் போனல மாயன வைகுணடம வைபப னனறே.

## 14 - உ. பாஞ்சராத்திரி மத மறுதலை

ஆதிதா னுகில் ஆதிக்(கு) அந்தமுண் டாகும் அந்தக்
கோதிலான் இறைவ னென்று கூறிடும் வேதம் ஞானச்
சோதியாய் நின்ரு னுகில் தோய்ந்திடான் மாயை ஞானத்
தீதிலா உருவ மென்னில சேர்ந்திடான் தாதுச் சென்றே.

தாதுவா னதுஏ தென்னில் சங்கரன் பலிக்குச் செல்லத்
தீதிலாக் கோதண் டத்தைத் திறந்தவன் விட்ட போது
போதுவ துதிர மன்ரே போந்துமூர்ச் சித்து வீழ்ந்தான்
நாதனுர் எழுப்பப் பின்னே நடந்தனன் கிடந்த வன்ருன்.

இசையால் உருவங் கொள்வன் அரியெனில இகழ்வேள் விக்
எச்சனுய் உண்ணப் புக்கங் கிருந்தஅன் றீச னுலே [கண்
அச்சமார் தலைய றுப்புண் டான்தலை யாக்கிக் கொள்ளான்
நச்சினர் போற்ற நாதன் நாரணன் தலைகொ டுத்தான்.

---

[1] தபனியன். [2]பொய்கைவாய்.

நூலினை உரைத்து வேத நூலினை நுவலும் வண்ணம்
மால்அருள் செய்தான் என்றாய் மறைநீதி உலகி யற்கை
சாலவே தெரியா தாகிக் கிடந்தநாள் சகத்து யார்க்கும்
ஆலின்கீ ழிருந்து வேதம் அருளினன் அறைந்தான் நூலே.

அயன்தனைப்[1]பயந்தா னென்றாய் அரிஅயன் சிரஞ்சே திப்பப்
பயந்திடான் தலைமாலதா னுமபடைததிடான்சிரததைக்கிள்ளுும
சயந்தரும் அரனைத் தந்தான் அயனென்கை தப்பே யன்றோ
தியங்கிடா துணரா யெல்லாஞ் சிவன்செயலென் றுதேர்ந்தே.

சீவன்கள் சனனம் போலச் சிலர்வயிற் றுதித்த மாலைத்
தேவெனறே[2]உலகங்காககச சுவேசசையா றசனிததானென்பீர்
பூஅன்பின் படைக்க மாட்டா தரனடி போற்ற வேதக்
கோவநது முகததிலதோன் றிச்சிருட்டியைக் கொடுததலகூறும்.

நாரணன் அயனை யீன்றும் அயனும்நா ரணனை யீன்றும்
காரணம் ஒருவ ருக்கங் கொருவர்தாம் இருவ ருக்கும்
வாரண முரித்த வள்ளல் காரண னென்று [3]மன்ற
ஆரணம் உரைக்கும் பக்கத் தவர்களும [4]அடைந்தா ரன்றே.

அழிப்(பு)அரி யேவலென்றாய் அரிதனையழிக்கும் அன் றங்(கு)
அழிப்பது தவிர்க்க மாட்டான் அஙகமும் அழித்தே பூணடான
அழிப்(பு)அரி யேவ லென் றங் கறைந்ததும் அழிந்த தன்றோ
அழித்திடும் அரனே ஆக்கம நோக்கமும ஆக்கு வானே.

வானம்கீழ் மண்ணு மெலலாம் மாயனே காப்பா னென்றாய்
தான்அஞ்சும் சலந்த ரன்தன் உடல்கீண்ட சக்க ரத்தை
ஆன்அஞ்சும் ஆடு வான்பாற் பெற்றுல களித்த வார்த்தை
தானெங்கு மாகுமெல்லாம் சங்கரன் [5]காப்பே யாமே. உஎகூ

மாலினார் சேலி னாராய் வாரிகள் அடக்கிக் கொண்டன்(று)
ஆலியா உலக மெல்லாம் அழிப்பவன் நானே என்னச்
சேலினார் தமைப்பி டித்துச் செலுவினை இடந்து கண்ணைச்
சூலியார் மேல ணிந்தான் சூலிதா னுகு மன்றே. உஅ௦

---

[1]படைத்தான். [2]வையம். [3]மன்றத்(து). [4]அறைந்தார். [5]காப்பதாகும்.

ஆமையாய் மேருத் தாங்கி அடைகலாய்க் கிடந்த போது
நாமெனு உலகா தார நாதனென் றகந்தை பண்ண
ஆமெனுர் அன்று மென்னுர் அமரரு மானுர் பார்த்துத்
தாமநாள் ஆமையாரைத் தகர்த்தோடு தரித்தா ரன்றே.

எழுதலம் இடந்து பன்றி யாய்இருங் கொம்பி லேற்றுத்
தொழுதுல கிறைஞ்ச நின்ற சோதிநா னென்ற போதன்(று)
அழுதல மந்து வீழ அருங்கோடு பறித்த ணிந்தான்
கழுதல மந்த காட்டில ஆடிடுங் கடவு ளன்றே. உ அஉ

இங்கடா உளனே மாலென் றிரணியன் தூணை எற்ற
உங்கள்தா மோத ரன்ருன் உருநர சிங்க மாகி
எங்கடா போவ தென்னு உடல்பிளந் திறையா னென்ன
அங்கடா சிம்பு ளாகி யெடுத்தடர்த் தான்அ ரன்ருன்.

தானமென் றிரந்து செலலத் தனக்குமூ வடிகொ டுப்ப
வானமும அளந்து கொண்டு மாபலி தன்னைப் பின்னை [ட்(கு)
ஈனமாஞ் சிறையிலிட்டான் இறையனருென றீந்தோர் தங்க
ஊனஞ்செய் திடுவோர் தாங்கள் உத்தம ரல்ல ராகும்.

மாயமான் தன்னைப் பொய்மமா னெனஅறி யாத ரக்கன்
மாயையி லகப்பட்டுத்தன் மனைவியைக் கொடுத்தான் தன்னை
மாயைக்குக் கர்த்தாஎன்பை மதிகெட்டங் கவனைக்கொன்று
நாயனுர் தமைப்பூ சித்தான் கொலைப்பாவம் நணுகி டாமே.

பரசுடன் பிறந்தான் தானும பத்தனுய்ப் பரசி னுலே
அரசறுத் தரனை நோக்கி அருநதவம் புரிந்தான் அன்று
பரசிய பரசு ராமன் பலதேவன் உலக மெல்லாம்
உரைசெயும உமையாள் கோனை உள்நினைந் தியோகி னின்ருன்.

ஓதிய வர்சு தேவர் தமைஉப மனியு தேவர்
தீதிலா நோக்கஞ் செய்து சிவகரஞ் சிரத்திற் சேர்த்தி
ஆதிபா.லடிமை யாக்க அரிஉடல் பிராணன் அத்தம்
ஈதெலாம் கொள்நீ என்றங் கிறைஞ்சினுர் அறிந்தி டாயே.

பின்வரும் பரிதா னுகி அரியென்ருய் பின்பு வந்தால்
என்வரும் ஈச னுலென் றறிகிலோம் இவுளி யார்க்கு
முன்வரும் அவதா ரங்கள் முடிந்தமை அறிந்தா யன்றே
பொன்வரும் சடையி னுன்தன் புகழெங்கும் புக்க தன்றே.

கைவரை மூல மேயோ எனக்கரிக் குதவுங் காட்டின்
மொய்வரை எடுத்தான் மூலம ஆயிட வேண்டு மோதான்
ஐயனே முறையோஎன்றால் அரசனே அங்குச் செல்வான்
வையகங காப்பானசெய்கைவழக்கன்றோஊர்காபபான்போல்.

அன்றியும் ஆணை மாலுக் கடிமையாய் மூல மேயோ
என்றிடுமதனால மால்தான் இறைவனென் றியமபவேண்டா
உன்றனக் கடிமை யானார் உன்னைஎம் பெருமா னென்றால்
இன்றுநீ [1]வணங்கு முன்றன் எம்பெரு மானே நீயே. உகூ०

ஞாலம்உண் டவனால் உண்டார் நல்லமு தமரர் என்றாய்
வேலைநஞ் செழுமா லாதி விண்ணவா வெந்து சென்று
காலமின் றெமக்குக் காவாய் கடவுளே என்ன நாதன்
ஆலமுண் டிலனேல் தேவர் அமுதமுண் டிடுவ தெங்கே.

அஞ்சியன் றரிதா னோடு அசுரனைக் குமர னாலே
துஞ்சுவித்தொருபெண்ணாலே தாரகன் உடலதுணிப்பித்(து)
அஞ்சிடப் புரம்தீ ஊட்டிச் சலந்தர னுடல்கீண் டோத
நஞ்சினை உண்டு மன்றோ நாயகன் உலகங் காத்தான். உகூஉ

பார்த்தனார் இரதமேறிப் படைதனைப் பார்த்துச் சார்பைக்
கூர்த்தஅம் பாலே எய்து கொன்றர சாளேன் என்னத்
தேர்த்தனிலிருந்துமாயைசெய்துமால்கொல்லச்செப்பும்[யே.
வார்த்தைநூ லாககிக கொணடாய புரங்கொல நூலமதிததிடா

மாயைதான் உயிர்க ளாகா துயிர்கள்தாம் மாயை யாகா
மாயவன் இவைதா னுகான் இவைதாமும மாய னுகா
ஏயுமாம் அனாதி யாக இறைபசு பாச மென்றே
தூயவன் [2]கலப்பி னாலே எல்லாமாய்த் தோன்று வன்காண்.

பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை அடைய முத்தி
ஆசற்ற ஆக மங்கள் அறைந்திட அறிவின் றிங்கே
மாசற்ற மால்மா சாகி மாயையு முறுவ னென்னில்
கூசிப்பின் கொள்ளார் நல்லோர் உன்க்காமிக்குழப்பு நூலே.

பிரமம்நா னென்ற போது பிரமனோ டரியுங் கூடிப்
பரமனார் இகலி டாமே பார்த்திடா் பண்ணி நின்ற

[1] இறைஞ்சும் உங்கள். [2] கலிப்பினாலே.

உரமனூர் அழலு ருபம் தன்னையு முணர மாட்டான்
கரமநாள் திகிரி ஏற்றான் கடவுளென் றறைவ தென்னே.

தேரரி இறையன் றென்றே சிவமுனி ததீசி யோடே
போர்[1]புரிந் திகல மாலைப் புக்கவன் பிடித்த டித்து
மார்பினி லுதைத்து மால்தன் சக்கரமவயிற்றில்வைத்திட்(டு)
ஏர்மலி படைப டைத்திட் டரிபட எறிந்தா னன்றே. உகஎ

சூலிகாண் இறைமால்அல்லன் சூலியைத் தொழுந்துர்வாசன்
மாலினூர் மார்மி திப்பத் திருமறு மார்ப னாகி
நூலினூர் மார்பன் நோன்றாள் பட்டிடஞ் சுத்த மென்று
பாலினூர் கடலான் ஆங்கே பரிவொடும் திருவை வைத்தான்.

தவகுண னும்மால் சென்று தீவியைச் சக்க ரத்தால்
அவகுணஞ் செய்தன் றூடப் பிருகுவந் தவனைப் பார்த்துச்
சிவனல தறியே னாகில இதுசெய்தோன் செறிக பத்துப்
பவமென மொழிய மாலும பயப்பட்டுப் பதறி வீழ்ந்தான்.

பயப்பட்டுப் பரனைநோக்கித் தவம்பணணப் பரனுமதோனறி
நயத்தஞ்ச லென்று வேண்டிற் றென்னென நார ணன்தான்
பெயர்த்தருள் பிருகு சாப மெனஅன்பன் பிருகு வென்ன
உயக்கொள்நீ பவநதோ றெனன ஓமென்றான் உலக நாதன்.

இப்படிப் பிருகு சாபத் தீரைந்து பிறப்பின் [2]வீழ்ந்து
மெய்ப்படு துயர முற்று வருபவன் விமலன் அல்லன
எப்படி யானுஞ் சொன்னேன் இறைஅரி அல்ல னென்றே
மைப்படி கண்டன் அண்டன் மலரடி வணங்கி டாயே.



[1] புரிந்திகன் றகாலைப். [2] மூழ்கி.

## சிவஞான சித்தியார் பாடல்தொகை

### பரபக்கம்

1. முகவுரையிற் றசமெழுமூன் றதன்முப்பா ஞென்று
மூதுலகன் முப்பாஞென் றெண்ணைந்தாம் புத்தன்
திகழ்மூவர்க் கோரெட்டாம நிகண்டனுக்கெட் டேரேழ்
சீவகனுக் கீரைந்தோ டிருமூன்றும் பாட்டன்
பகர்பதின்மூன் றீரைந்தே பாகரனீ ரிரண்டாம்
பரிஞமன் நான்கிருநான் கேமாயா வாதன்
நிகழெமமூன் றறுமூன்றும் பாற்கரியற் கேழாம்
நிரீசுரற்குச் சதுராத்திரி யெழுமுப்பா ஞெனறே.

### சுபக்கம்

2. ஐந்துதுதி யீரேழு மளவை யாகும
ஆதிதனி லெழுபதுபின் தொண்ணூற் ருறு
நந்துசதுட் டயநாற்பா னவமும்பின் நவமும்
நனிநான்கு நாற்பதினி லொன்றிழிந்தீ ராறும்
கந்தன்முக மோராறுங் கரமங்கீ ராறும்
கருதிடுவம் கணபதியைங் கரமுமிரு பதமும்
சிந்தையிவை மூவொன்ப தொடுமுந் நூறும
சிவஞான சித்திசுவ பககமெனத தெளியே.

3. சிதநியினமுற் சூத்திரததுக் கெணபத தொனபான
திகழிரண்டிற் கொருதொண் ணூற் ருறு மூனறிற
சுத்தநான் கொருநான்கி ஞற்ப தைந்திற்
சொல்லுமொன்பா ஞறினுக்கு மந்த ஓன்பான
இத்திறத்தேழ் சூத்திரததிற கொருநான கெட்டின
இயல்முப்பத் தொனபதந்த ஒன்பா னுக்குப்
பததிரண்டு பத்துக்கோ ராறுபதி ஞெனறிற்
பன்னிரண்டப பன்னிரண்டிற் பனுவல ஏழே.

சிவமயம

திருச்சிற்றம்பலம்

# 4 - உ. சிவஞானசித்தியார் - சுபக்கம்



## பாயிரம்

### விநாயக வணக்கம்

ஒருகோட்டன் இருசெவியன் மும்மதத்தன்
நால்வாய்ஐங் கரத்தன் ஆறு
தருகோட்டம் பிறைஇதழித் தாழ்சடையான்
தருமொருவா ரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி ஓவாதே
இரவுபகல் உணர்வோர் சிந்தைத்
திருகோட்டும் அயன்திருமால் செல்வமுமொன்
றோஎன்னச் செய்யும் தேவே. க

### பரசிவ வணக்கம்

அறுவகைச்சமயத்தோர்க்கும் அவ்வவர்பொருளாய்வேறும்
குறியது உடைத்தாய் வேதா கமங்களின் குறியி றந்தங்(கு)
அறிவினில் அருளால் மன்னி அம்மையோ டப்ப ளுகிச்
செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம். உ

### நூல் வழி

என்னை இப் பவத்திற் சேரா வகையெடுத் தென்சித் தத்தே
தன்னைவைத் தருளி ஞலே தாளிணை தலைமேற் சூட்டும்[நூல்
மின்னமர் பொழிலசூழ வெணணெய் மேவிவாழ மெய்கண்டான
சென்னியிற் கொண்டுசைவத் திறத்தினைத் தெரிக்கலுற்றும்.

### நுதலிய பொருளும் கேட்போரும் பயனும்

பண்டைநற் றவத்தால்தோன்றிப் பரமனைப் பத்திபண்ணும்
தொண்டரைத் தானே தூய கதியினில் தொகுப்பன் மார்க்
கண்டநூ லோதி வீடு காதலிப் பவர்கட் கீசன் [கர்
புண்டரி கத்தாள் சேரும் பரிசினைப் புகல லுற்றும். ச

### அவையடக்கம்

மறையினான் அயனான் மாலான் மனத்தினான் வாக்கான் மற்
குறைவிலா அளவி னானுங் கூறொணா தாகி நின்ற [றும்
இறைவனார் கமல பாதம் இன்றியான் இயம்பும் ஆசை
நிறையினார் குணத்தோர்க்கெல்லாம நகையினை நிறுத்துமன்றே.

அருளினால் ஆக மத்தே அறியலாம் அளவி னாலும்
தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தை யுள்ளே
மருளெலாம் [1]நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாயா
இருளெலாம் இரிக்க லாகும் அடியரோ டிருக்க லாமே. ௬

## அளவை

### அளவை மூவகை

அளவை காண்டல் கருதல்உரை
அபாவம் பொருளொப் பாறென்பர்
அளவை மேலும் ஒழிபுண்மை
ஐதி கத்தோ டியல்பெனநான்(கு)
அளவை காண்பர் அவையிற்றின்
மேலும் அறைவர் அவையெல்லாம்
அளவை காண்டல் கருதலஉரை
என்றிம மூன்றின் அடங்கிடுமே. ௭

வேறு

மாசறு காட்சி ஐயந் திரிவின்றி விகற்ப முன்னு
ஆசற அறிவ தாகும அனுமானம் அவினா பாவம்
பேசுறும் ஏதுக் கொண்டு மறைபொருள் பெறுவ தாகும்
காசறு முரையிம் மானத் தடங்கிடாப் பொருளைக் காட்டும.

### காட்சி நால்வகை

கண்ட பொருளை இரட்டுறவே
கருதல் ஐயம் திரியவே
கொண்டல் திரிவாம் பெயர்சாதி
குணமே கன்மம் பொருளெனஐந்(து)

---

[1] நீங்கி.

உண்டவ் விகற்ப உணர்வினுக்குப்
பொருளி னுண்மை மாத்திரத்தின்
விண்ட லில்லா அறிவாகும்
விகற்ப மில்லாக் காட்சியே. கூ

### பிரமாண பிரமேயங்களின் பாகுபாடு

காண்டல் வாயில் மனம்தன்வே
தனையோ(டு) யோகக் காட்சியென
ஈண்டு நான்காம் அனுமானம்
தனக்கும் பிறர்க்கும் என்றிரண்டாம்
மாண்ட உரைதந்த் ரமந்த்ரத்தோ(டு)
உபதே சச்சொல் எனமூன்றும்
பூண்ட அளவைக் கெதிர்புலன்தன்
னியல்பு பொதுவென் றிரண்டாமே. க०

### சிறப்பியல்பு, பொதுவியல்பு

அன்னிய சாதி யும்தன் சாதியும் அகன்று நிற்றல்
தன்னியல் பன்னி யத்தைத் தவிர்ந்துதன் சாதிக் கொத்தல்
துன்னிய பொதுஇ யற்கை சொன்னஇவ் விரண்டி னுள்ளே
மன்னிய பொருள்கள் யாவும் அடங்கிடும் மான முற்றல். கக

### இந்திரியக் காட்சி, மானதக் காட்சி

உயிரினோ டுணர்வு வாயில் ஒளியுரு வாதி பற்றிச்
[1]செயிரொடு விகற்ப மின்றித் தெரிவதிந் திரியக் காட்சி
அயர்விலிந் திரிய ஞானம ஐம்புலன் சார்ந்து யிர்க்கண்
மயர்வற வந்த ஞானம் மானதக் காண்ட லாமே. கஉ

### தன் வேதனைக் காட்சி, யோகக் காட்சி

அருந்தின்பத் துன்பம் உள்ளத் தறிவினுக் கராக மாதி
தரும்தன்வே தனையாங் காட்சி சமாதியான் மலங்கள் வாட்டிப்
பொருந்திய தேச கால இயல்பகல் பொருள்க ளெல்லாம்[ப்
இருந்துணர் கின்ற ஞானம் யோகநற் காண்ட லாமே. கந

---

[1]செயிருற.

### அனுமானம்

பக்க மூன்றின் மூன்றேது
வுடைய பொருளைப் பார்த்துணரத்
தக்க ஞானந் தன்பொருட்டாம்
பிறர்தம் பொருட்டாம அனுமானம்
தொக்க இவற்றாற் பிறர்தெளியச்
சொல்ல லாகும் அச்சொல்லும்
மிக்க அந்நு வயத்தினொடு
வெதிரே கச்சொல் எனஇரண்டாம். கச

### பக்கம்

மூன்று பக்கம் பக்கம்நிகர்
பக்கம் நிகரில் பக்கமெனத்
தோன்றும் பக்கந் துணிபொருளுக்
கிடமாம் உவமை நிகர்பக்கம்
ஆன்ற பொருள்சென் றடையாத
இடமாம் நிகரில் பக்கமுதல்
என்ற இரண்டும் பொருளுண்மைக்
கிடமாம் ஒன்று பொருளின்றாம். கரு

### ஏது

ஏது மூன்றாம் இயல்புகா
ரியத்தோ டநுப லத்தி[1]யிவை
ஓதி னியல்பு மாமரத்தைக்
காட்டல் உறுகா ரியம்புகைதன்
ஆதி யாய அனல்காட்ட
லாகும் அநுப லத்தியது
சீத மின்மை பனியின்மை
காட்டல் [2]போலுஞ் செப்பிடிலே. கசா

### சொல்

புகையால் அனலுண் டடுக்களைபோல்
என்னப் புகறல் அந்நுவயம்
வகையாம் அனலில் லாவிடத்துப்
புகையின் றாகும் மலரினொடு

---
[1]என. [2]ஆகும்.

முகையார் நீரிற் போலென்று
மொழிதல் வெதிரே கச்சொல்இவை
தொகையார் உறுப்பைந் தொடுங்கூடச்
சொல்லு வாரு முளர்துணிந்தே. கஎ

### பிற அனுமானங்கள்

போது நாற்றத் தால்அறிதல்
பூர்வக் காட்சி அனுமானம்
ஓது முறையா லறிவின்அள
வுணர்தல் கருதல் அனுமானம்
நீதி யால்முற் கன்மபலம்
நிகழ்வ திப்போ திச்செய்தி
ஆதி யாக வரும்பயனென்
றறிதல் உரையால் அனுமானம். கஅ

### ஆகமம்

அனாதியே அமல னாய
அறிவன்நூல் ஆக மந்தான்
பின்ஆதிமா றின்றிப் பேணல்
தந்திர மந்தி ரங்கள்
மனாதிகள் அடக்கித் தெய்வம்
வழிபடும் வாய்மை யாகும்
தனாதிஈ றிலாதான் தன்மை
உணர்த்துதல் உபதே சந்தான். கசு

### அனுமானப்போலி

ஈண்டு பக்கப் போலிநான்
கேதுப் போலி ஒருமூன்றாய்
வேண்டும் எழு[1]மூன் றாகுமவிளங்
குவமைப் போலி ஈரொன்பான்
காண்டுந் தோல்வித் தானம்இரண்
டிருபத் திரண்டாம் கருதிலிவை
யாண்டும் மொழிவர் அவையெல்லாம்
அளக்கில் அறுபத் தைந்தாகும். உ0

---

[1]மூன்றாய் விளங்கும் உவமைப்.

# பிரமாணவியல்

## முதற் சூத்திரம்

### பதியுண்மை

ஒருவனோ டொருத்தி ஒன்றென் றுரைத்திடும் உலகமெல்லா
வருமுறை வந்து நின்று போவதும ஆதலாலே [ம்
தருபவன ஒருவன் வேண்டும் தான்முதல் ஈறு மாகி
மருவிடும் அனாதி முத்த சித்துரு மன்னி நின்றே. உக

உதிப்பதும் ஈறுமுண்டென் றுரைப்பதிங் கென்னை முன்னோர்
மதித்துல கனாதி யாக மன்னிய தென்பர் என்னின்
இதற்குயான் அனுமா னாதி எடேனிப் பூதாதி யெல்லாம்
விதிப்படி தோற்றி மாயக் காணலான் மேதி னிக்கே. உஉ

இயலபுகாண் தோற்றி மாய்கை என்றிடின் இயல்பி னுக்குச்
செயலதின் றியல்பு செய்தி செய்தியேல் இயல்ப தின்றும்
இயல்பதாம் பூதந தானே இயற்றிடுஞ் செய்தி யென்னில் [ல.
செயலசெய்வான் ஒருவன வேணடும செயறபடும [1]சேதனத்தா

நிலமபுனல் அனல்காலகாண நிறுத்திடும் அழிக்கும ஆக்கும்
பலநதரு மொருவ னிங்குப் பண்ணிட வேண்டா என்னின்
இலஙகிய தோற்றம நிறறல் ஈறிவை இசைத லாலே
நலங்கிளர் தோற்றம நாசம தனக்கிலா நாதன் வேணடும்.

சார்பினில் தோன்று மெல்லாம் தருபவன் இல்லை யென்னில்
தேரின்இல் லதற்கோ தோற்றம் உள்ளதற் கோநீ செப்பாய்
ஓரின்இல் லதுவுந் தோன்றா துள்ளதேல உதிக்க வேண்டா
சோர்விலா திரண்டு மின்றி நிற்பது தோன்று மன்றே. உரு

உள்ளது மிலது மின்றி நின்றதொன் றுளதே லுண்டாம
இல்லதே லில்லை யாகும் தோற்றமும் இசையா தாகும் .
உள்ளகா ரணத்தி லுண்டாம் காரிய முதிக்கும மண்ணில்
இல்லதாம் படங்க டாதி [2]எழில்தரு மியற்று வானால். உசு

---

[1] அசேதனத்தால். [2] எழுதரும்.

ஒருபொரு ளொருவ னின்றி உளதில தாகு மென்னில் [ய்
தருபொரு ளுண்டே லின்றும் தன்மையின் றின்றே லுண்டா
வருதலின் றிலது கார்யம் முதலுள தாகு மென்னில்
கருது[1]கா ரியமு முண்டாய்த் தோற்றமுங் கருத்தா வாலாம்.

காயத்தின் அழிவு தோற்றம் கண்டனம் உலகிற் [2]காணும்
நீஇத்தை உரைத்த வாறிங் கென்னெனில் நிகழ்த்து முண்
மாயத்த உலகம் பூநீர் தீவளி வான மாதி [மை
யாயித்தா ஞென்றி ஞென்று தோன்றிநின் றழித லாலே.

ஓரிடம் அழியப் பின்னும ஓரிடம் நிற்கும் ஒக்கப்
பாரிடம் அழிவ தின்றும் என்றிடிற் பயிலவித் தெல்லாம்
காரிட மதனிற் காட்டும் அங்குரங் கழியும் வேனில்
சீருடைத் துலகு காலஞ் சேர்ந்திடப் பெயர்ந்து செல்லும.

காலமே கடவு ளாகக் கண்டனம் தொழிலுக் கென்னில்
காலமோ அறிவின் றாகும் ஆயினுங் காரி யங்கள்
காலமே தரவே காண்டும் காரணன் விதியி னுக்குக்
காலமுங் கடவு ளேவ லால்துணைக் [3]கார ணங்காண். ௩௦

அழிந்தபின் அணுக்கள் தாமே அகிலமாய் வந்து நின்று
கழிந்திடுங் கன்மத் தென்னில் கன்மமும் அணுவுங் கூட
மொழிந்திடுஞ் சடமே யாகி மொழிதலான் முடியா செய்தி
ஒழிந்திடும் அணுரு பங்கள் உலகெலா மொடுங்கு மன்றே.

காரண அணுக்கள் கெட்டாற் காரிய உலகின் றென்னில்
காரண மாயை யாகக் காரியங் காண லாகும்
காரண மாயை யென்னை காண்பதிங் கணுவே யென்னில்
காரண மாயை யேகாண் காரியம் அணுவிற [4]கண்டால். ௩௧

காரிய மென்ப தென்னை காரண அணுவை யென்னில்
காரியம் அவய வத்தாற் கண்டனம் கடாதி போலக்
காரிய உருவ மெல்லாம அழிதருங் கார ணத்தால
காரிய உருப்பின் மாயை தருமெனக் கருதி டாயே. ௩௩

தோற்றமும் நிலையு மீறும மாயையின் தொழில தென்றே
சாற்றிடும் உலகம் வித்துச் சாகாதி அணுக்க ளாக

[1]காரணமும். [2]காணேம். [3]காரணந்தான். [4]கண்டாய்.

ஏற்றதேல் [1]ஈண்டு நிற்கும் இல்லதேல் [2]இயைவ தின்றும்
மாற்றம்நீ மறந்தா யித்தால் மாயையை மதித்தி டாயே. ௩௪

மாயையி னுள்ள வஞ்சம் வருவது போவ தாகும்
நீயதிங் கில்லை யென்னில் [3]நிகழ்த்திடு முயலிற் கோடு
போய்உகும் இலைக ளெல்லாம் மரங்களிற் புக்குப் போதின்
ஆயிடும் அதுவு மென்னிற் காரணங் கிடக்க வாமே. ௩௫

கருதுகா ரணமுண் டாகக் காரிய முள்ள தாகி
வருதலால் அனாதி வையம் மற்றொரு கடவுள் இத்தைத்
தருதலால் ஆதியாகச் சாற்றலு மாகும் மாயைக் [கேள்நீ.
கொருவனு ரென்னிங் கென்னின் உள்ளவா றுரைப்பக்

புத்திமற் [4]காரி யத்தால் பூதாதி புருடன் தானும்
அத்தனுகரணம் பெற்றால் அறிதலால் அவற்றை மாயை[றே
உய்த்திடும அதனுன்மாயைக் குணர்வொன்று மில்லை யென்
வைத்திடு மதனால் எல்லாம் வருவிப்பா னொருவன் வேண்டும்.

பதி பிரபஞ்சத்தைக் காரியப்படுத்தும் முறைமை

காரியங் கார ணங்கள் முதல்துணை நிமித்தம் கண்டாம்
பாரின்மண் திரிகை பண்ணு மவன்முதல் துணைநி மித்தம்
தேரின்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக
ஆரியன் குலால னாய்நின் றாக்குவன் அகில மெல்லாம். ௩௮

விந்துவின் மாயை யாகி மாயையின் அவ்வி யத்தம்
வந்திடும் விந்துத் தன்பால் வைகரி யாதி மாயை
முந்திடும அராக மாதி முக்குண மாதி மூலம்
தந்திடுஞ் சிவன வன்தன் சன்னிதி தன்னில் [5]நின்றே. ௩௯

வைகரி செவியில் கேட்ப தாய்அத்த வசன மாகி
மெய்தரும் உதான வாயு மேவிட விளைந்த வன்னம்
பொய்யற அடைவு டைத்தாய்ப் புந்திகா ரணம தாகி
ஐயமில் பிராண வாயு அடைந்தெழுந் தடைவு டைத்தாம்.

உள்ளுணர் ஓசை யாகிச் செவியினில் உறுதல் செய்யா(து)
ஒள்ளிய பிராண வாயு விருத்தியை உடைய தன்றித்

---

[1]ஈண்டி. [2]இல்லையாகும். [3]நிகழ்ந்திடும். [4]காரியஙகாண். [5]அன்றே.

தெள்ளிய அக்க ரங்கள் சிந்திடுஞ் செயல தின்றி
மெள்ளவே எழுவ தாகும் மத்திமை வேற தாயே. சக

வேற்றுமைப் பட்ட வன்னம் வெவ்வேறு விபாக மாகித்
தோற்றுதல் அடைவொ டுக்கிச் சுயமபிர காச மாகிச்
சாற்றிடு மயிலி னண்டம் தரித்திடும் சலமே போன்றங்(கு)
ஆற்றவே உடைய தாகிப் பைசந்தி அமர்ந்து நிற்கும். சஉ

சூக்கும வாக்க துள்ளோர் சோதியாய் அழிவ தின்றி
ஆக்கிடும் அதிகா ரத்துக் கழிவினை தன்னைக் கண்டால்
நீக்கமில அறிவா னந்தம முதன்மைநித் தியமு டைத்தாய்ப்
போக்கொடு வரவி லைப்பும் விகாரமும புருட னின்றும்.

நிகழ்ந்திடும் வாக்கு நான்கும் நிவிர்த்தாதி கலையைப் பற்றித்
திகழ்ந்திடும் அஞ்ச தாகச் செயலபரி ணும மன்று
புகழ்ந்திடும் விருத்தி யாகும் படங்குடி லாறுற் போல
மகிழ்நதிடும் பிரம மன்று மாமாயை என்பர் நல்லோர். சச

வித்தைகள் வித்தை ஈசர் சதாசிவர் என்றி வர்க்கு
வைத்துறும பதஙகள் வனனம் புவனங்கள் மநதி ரஙகள்
தததுவம சரீரம போகம கரணங்கள் தாமெ லாமும
உய்த்திடும் வைந்த வந்தான் உபாதான மாகி நின்றே. சரு

மூவகை அணுக்க ளுக்கு முறைமையால விநது ஞானம்
மேவின தில்லை யாகில் விளங்கிய ஞான மின்றும
ஓவிட விந்து ஞானம் உதிப்பதோர் ஞான முண்டேல்
சேவுயர் கொடியி னுன்றன் சேவடி சேர லாமே. சசு

அருவினில் உருவந் தோன்றி அங்காங்கி பாவ மாகி
உருவினில் உருவ மாயே உதித்திடும் உலக மெல்லாம்
பெருகிடும் சுருங்கும பேதா பேதமோ டபேத மாகும்
ஒருவனே எல்லா மாகி [1]அலலவா யுடனு மாவன். சஎ

அருஉரு ஈறு தாகும் விகாரமும் அவிகா ரத்தின்
வருவது மில்லை என்னின் வான்வளி யாதி பூதம்
தருவது தன்னின் மேக சலனசத் தங்க ளோடும் [ளே.
[2]உருவின்மின் உருமே றெலலாம உதித்திடும உணர்ந்து கொள

---

[1] அல்லனய். [2] உருவமின்.

மண்ணினிற் கடாதி யெல்லாம் வருவது குலால னாலே
எண்ணரிய உருவ மெல்லாம் இயற்றுவன் ஈசன் தானும்
கண்ணுகா ரியங்க ளெல்லாம காரண மதனிற் காண்பன்
பண்ணுவ தெங்கே நின்றிங் கென்றிடிற் பகரக் கேள்நீ. ௪௯

சீலமோ உலகம் போலத் தெரிப்பரி ததனால் நிற்கும
கோலமும் அறிவா ரில்லை ஆயினுங் கூறக் கேள்நீ
ஞாலமே மீளயுந் தந்து நிறுத்திப்பின் நாசம் பண்ணும்
காலமே போலக் கொள்நீ [1]நிலைசெயல் கடவுட் கண்ணே.

கற்றநூற பொருளுமசொலலும கருததினில அடங்கித் தோன்
பெற்றியும் சாக்கி ராதி உயிரினிற் பிறந்தொ டுக்கம [றும்
உற்றதும் போல வெல்லா உலகமும உதித்தொ டுங்கப்
பற்றொடு பற்ற தின்றி நின்றனன் பரனு மன்றே. ருக

உயிரவை ஒடுங்கிப பின்னும் உதிபபதென அரனபா லெனனில
செயிருறு மலத்தினுகும சிதைந்ததே தென்னிற் சித்தத்(து)
அயர்வொழி காரி யங்கள் அழியும்கா ரணங்கி டக்கும்
பயிலதரு காரி யம்பின் பண்டுபோற் பண்ணும் ஈசன். ருஉ

தோறறுவிததளித்துபபின்னும் துடைததருள்தொழில்கள் மூன்
போற்றவே உடைய னீசன் புகுந்தது விகார மென்னில் [றும்
சாற்றிய கதிரோன் நிற்கத் தாமரை அலரும காந்தம
காற்றிடும் கனலை நீரும் கரந்திடும் காசி னிக்கே. ருங

உரைத்தஇத் தொழில்கள் மூன்றும மூவருக் குலகம் ஓத
வரைத்தொரு வனுக்கேயாக்கி வைத்ததிங்கென்னை என்னின்
விரைக்கம லத்தோன் மாலும் ஏவலான் மேவி னோர்கள்
புரைத்ததி கார சத்தி [2]புண்ணியம் நண்ண லாலே. ருச

இறுதியாம் காலந் தன்னில் ஒருவனே இருவ ருந்தம்
உறுதியின் நின்று ரென்னின் இறுதிதா னுண்டா காதாம்
அறுதியில் அரனே யெல்லாம் அழித்தலால்அவனு லின்னும
பெறுதுநாம் ஆக்கம நோக்கம் பேரதி கரணத் தாலே. ருரு

சொன்னஇத் தொழில்களென்ன காரணந் தோற்றஎன்னி
முன்னவன் விளையாட்டென்று மொழிதலுமாம் உயிர்க்கு[ன்

---

[1] அச்செயல், [2] புண்ணியன்.

மன்னிய புத்தி முத்தி வழங்கவும் அருளால் [1]முன்னே
துன்னிய மலங்கள் எல்லாம் துடைப்பதுஞ் சொல்ல லாமே.

அழிப்பிளைப் பாற்றல் ஆக்கம் அவ்வவர் கன்ம மெல்லாம்
[2]கழித்திடல் நுகரச் [3]செய்தல் [4]காப்பது கன்ம வொப்பில
தெழித்திடல் மலங்களெல்லாம் மறைப்பருட் செய்திதானும்
பழிப்பொழி பந்தம்வீடு பார்த்திடின் அருளே எல்லாம. ருஎ

### பதியின் பொது இலக்கணம்

அருவமோ உருவா ரூப மானதோ அன்றி நின்ற
உருவமோ உரைக்கும் கர்த்தா வடிவெனக்குணர்த்திங் கென்
அருவமும் உருவா ரூபம் ஆனது மன்றி நின்ற [னின்
உருவமும் மூன்றுஞ் சொன்ன ஒருவனுக் குள்ள வாமே.

நண்ணிடும் உருவ மென்னின் நமக்குள உருவம் போலப்
பண்ணிட ஒருவன் வேண்டும் இச்சையேற் பலரும் இச்சை
கண்ணிய உருவங் கொள்ளேம் யாம்பெருங் கடவுள் தானும்
எண்ணிய [5]யோக சித்தர் போலுரு இசைப்பன் [6]காணே.

வித்தக [5]யோக சித்தர் வேண்டுருக் கொள்ளு மாபோல
உத்தமன் கொள்வ னென்னின் அவர்களி லொருவ னுவன்
அத்தகை யவர்க ளெலலாம் ஆக்குவ தருளா லாங்கு
வைத்தது மாயை யென்னின் வடிவெலாம் மாயை யாமே. சுo

மாயைதான் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவ மாகும்
ஆயஆ ணவம கன்ற அறிவொடு தொழிலை ஆர்க்கும்
நாயகன் எல்லா ஞானத் தொழில்முதல் நண்ண லாலே
காயமோ மாயை யன்று காண்பது சத்தி தன்னால். சுக

சத்தியே வடிவென் றாலும் தான்பரி ணாம மாகும்
நித்தமோ அழியும் அத்தால் நின்மலன் அருவே யென்னின்
அத்துவா மார்க்கத் துள்ளான் [7]அலனிவன் அருமை தன்னைப்
புத்திதா னுடையை போல இருந்தனை புகலக் கேள்நீ. சுஉ

உலகினில் பதார்த்த மெல்லாம் உருவமோ டருவ மாகி
நிலவிடு மொன்றொன் றாகா நின்றஅந் நிலையே போல

---

[1] ஆங்கே. [2] கழித்திட. [3] செய்யக், செய்கை. [4] காத்திடல். [5] யோகர். [6] தானே. [7] அன்றிவன்.

அலகிலா அறிவன் ருனும் அருவமே யென்னி லாய்ந்து
குலவிய பதார்த்தத் தொன்ருய்க் கூடுவன் குறித்திடாயே.

பந்தமும் வீடு மாய பதபதார்த் தங்க ளல்லான்
அந்தமும் ஆதி யில்லான் அளப்பில ஞை லாலே
எந்தைதான் இன்ன னென்றும் இன்னதா மின்ன தாகி
வந்திடா னென்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்ற மின்றே.

குறித்ததொன் ருக மாட்டாக் குறைவிலன் ஆத லானும்
நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமை யானும்
வெறுப்பொடு விருப்புத் தன்பால் மேவுதல் இலாமையானும்
நிறுத்திடும் நினைந்த மேனி நின்மலன் அருளி னலே. ௬௫

ஆரண மஆக மங்கள் அருளினல் உருவு கொண்டு
கார ணன் அருளா ஞகில் கதிப்பவ ரில்லை யாகும்
நாரணன் முதலா யுள்ள சுரர்நரர் நாகர்க் கெல்லாம்
சீரணி குருசந் தானச் செய்தியும் சென்றி டாவே. ௬௬

உருவருள் குணங்க ளோடும் உணர்வருள் உருவிற் ருேன்
கருமமும் அருள ரன்றன் கரசர ணுதி சாங்கம் [றும்
தருமரு ளுபாங்க மெல்லாம் தானருள் தனக்கொன் றின்றி
அருளுரு உயிருக் கென்றே [1]ஆக்கினன் அசிந்த னன்றே. ௬௭

உலகினை இறந்து நின்ற தரன்உரு வென்ப தோரார்
உலகவ னுருவில் தோன்றி ஒடுங்கிடு மென்றும் ஓரார்
உலகினுக் குயிரு மாகி உலகுமாய் நின்ற தோரார்
உலகினி லொருவ னென்பர் உருவினை யுணரா ரெல்லாம்.

தேவரி னொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர்
மூவராய் நின்ற தோரார் முதலுருப் பாதி மாதர்
ஆவது முணரார் ஆதி அரிஅயற் கறிய வொண்ணு
மேவரு நிலையு மோரார் [2]அவனுரு விளைவு மோரார். ௬௯

போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்
யோகியா யோக முத்தி உதவுதல் அதுவும் ஓரார்
வேகியா னற்போற் செய்த வினையினை வீட்ட லோரார்
ஊகியா மூட ரெல்லாம் உம்பரின் ஒருவ னென்பர். ௭௦

---

[1] ஆக்குவன். [2] அதனுரு.

ஒன்றொடொன் றெவ்வா வேடம்
ஒருவனே தரித்துக் கொண்டு
நின்றலால் [1]உலக நீங்கி
நின்றனன் என்று மோரார்
அன்றிஅவ் வேட மெல்லாம்
அருள்புரி தொழிலென் றோரார்
கொன்றது வினையைக் கொன்று
நின்றஅக் குணமென் றோரார். எக

நாயகன் கண்ந யப்பால்
நாயகி புதைப்ப எங்கும்
பாயிரு ளாகி மூடப்
பரிந்துல கினுக்கு நெற்றித்
தூயநேத் திரத்தி னாலே
சுடரொளி கொடுத்த பண்பில்
தேயமா ரொளிக ளெல்லாஞ்
சிவனுருத் தேச தென்னார். எஉ

கண்ணுதல் யோகி ருப்பக்
காமன்நின் றிடவேட் கைக்கு
விண்ணுறு தேவ ராதி
மெலிந்தமை ஓரார் மால்தான்
எண்ணிவேள் [2]மதனை ஏவ
எரிவிழித் திமவான் பெற்ற
பெண்ணினைப் புணர்ந்து யிர்க்குப்
பேரின்ப மளித்த தோரார். எங

படைப்பாதித் தொழிலும் பத்தர்க்
கருளும்பா வனையும் நூலும்
இடப்பாக [3]மாத ராளோ
டியைந்துயிர்க் கின்ப மென்றும்
அடைப்பானும் அதுவும் முத்தி
யளித்திடும் யோகும் பாசம்
துடைப்பானுந் தொழிலும் மேனி
தொடக்கானேற் சொல்லொ ணாதே. எச

---

[1]உலகும். [2]மகனை. [3]மாதராரோ(டு).

உருமேனி தரித்துக் கொண்ட தென்றலும் உருவி றந்த
அருமேனி யதுவுங் கண்டோம் அருவுரு வான போது
திருமேனி உபயம் பெற்றோம் செப்பிய மூன்றும் நந்தங்
கருமேனி கழிக்க வந்த கருணையின் [1]வடிவு காணே. எரு

அத்துவா மூர்த்தி யாக அறைகுவ தென்னை என்னின்
நித்தனாய் நிறைந்த வற்றின் நீங்கிடா நிலைமை யானும்
சித்துடன் அசித்துக் கெல்லாம் சேட்டித னாதலானும்
வைத்தவாம் அத்து வாவும் வடிவென மறைக ளெல்லாம்.

மந்திர மத்து வாவின் மிகுத்தொரு வடிவ மாகத்
தந்ததென் அரனுக் கென்னில் சகத்தினுக் குபாதா னங்கள்
விந்துமோ கினிமான் மூன்றும் இவற்றின்மே லாகி விந்துச்
[2]சிந்தையா ரதீத மான சிவசத்தி சேர்ந்து நிற்கும். எஎ

சுத்தமாம் விந்துத் தன்னில் தோன்றிய ஆத லானும்
சத்திதான் பிரேரித் துப்பின் தானதிட் டித்துக் கொண்டே
அத்திறற் புத்தி முத்தி அளித்தலால் அரனுக் கென்றே
வைத்தவாம் மந்திரங்கள் வடிவென மறைக ளெல்லாம். எஅ

மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவ மாகத்
தந்திரம் சொன்ன வாறிங் கென்னெனிற் சாற்றக் கேள்நீ
முந்திய தோற்றத் தாலும் மந்திர மூலத் தாலும்
அந்தமில் சத்தி யாதிக் கிசைத்தலு மாகு மன்றே. எகூ

அயன்றனை ஆதி ஆக அரனுரு வென்ப தென்னை
பயந்திடுஞ் சத்தி யாதி [3]பதிதலாற் படைப்பு மூலம்
முயன்றனர் இவரே யாயின் முன்னவ னென்னை முற்றும்
நயந்திடும் அவனி வர்க்கு நண்ணுவ தொரோவொன் றுமே.

### சத்தியின் இலக்கணம்

சத்திதான் பலவோ வென்னில் தானொன்றே அனேக மாக
வைத்திடுங் காரி யத்தான் மந்திரி யாதிக் கெல்லாம்
உய்த்திடு மொருவன் சத்தி போலரன் உடைய தாகிப்
புத்திமுத் திகளை யெல்லாம் புரிந்தவன் நினைந்த வாறும். அக

[1]விளைவு. [2]சிந்தையாதீதமான. [3]படைத்தலால்.

சத்திதன் வடிவே தென்னில் தடையிலா ஞான மாகும்
உய்த்திடு மிச்சை செய்தி இவைஞானத் துளவோ வென்னின்
எத்திறம் ஞான முள்ள தத்திறம் இச்சை செய்தி
[1]வைத்தலான் மறைப்பில் ஞானல் மருவிடுங்கிரியையெல்லாம்.

ஒன்றதாய் இச்சா ஞானக் கிரியையென் றொருமூன் ருகி
நின்றிடுஞ் சத்தி இச்சை உயிர்க்கருள் நேச மாகும்
நன்றெலாம் ஞான சத்தி யால்நயந் தறிவன் நாதன்
அன்றருட் கிரியை தன்னல் ஆக்குவன் அகில மெல்லாம். அங

சீவனும் இச்சா ஞானக் கிரியையாற் சிவனை யொப்பன்
ஆவனென் றிடின்அ ஞதி மலம்இவற் றினைம றைக்கும்
காவல னிவன்செய் கன்மத் தளவினிற் கொடுப்பக் காண்பன்
பாவியாம் புத்தி முத்திப் பயன்கொளும் பண்பிற் ருகும்.

## இலயபோக அதிகாரம்

ஞானமே யான போது சிவன்தொழில் ஞான மொக்கின்
ஈனமில் சதாசி வன்பேர் ஈசனும் தொழில தேறின்
ஊனமேற் கிரியை வித்தை [2]உருத்திரன் இலய போகம்
ஆனபே ரதிகா ரத்தோ டதிகர ணத்த னுமே. அரு

வித்தையோ டீசர் சாதாக் கியஞ்சத்தி சிவங்கள் ஐந்துஞ்
சுத்ததத் துவஞ்சி வன்தன் சுதந்தர வடிவ மாகும்
நித்தமென் றுரைப்பர் காலம் நீங்கிய நிலைமை யாலே
வைத்திலர் முற்பிற் பாடு வுருவித்தார் கருமத் தாலே. அசு

ஒருவனே இராவ ணுதி பாவக முற்ருற் போலத்
தருவனிவ் வுருவ மெல்லாம் தன்மையும் திரியா னுகும்
வருமவடி வெல்லாஞ் சத்தி சத்திதான் மரமுங் காழ்ப்பும்
இருமையும் போல மன்னிச் சிவத்திேேன டியைந்து நிற்கும்.

பொன்மைநீ லாதி வன்னம் பொருந்திடப் பளிங்க வற்றின்
தன்மையாய் நிற்கு மாபோல் சத்திதன் பேத மெலலாம்
நின்மலன் தானுய்த் தோன்றி நிலைமையொன் ருயே நிற்பன்
முன்னருட்சத்தி தன்பால் முகிழ்க்குந்தான் முளையானன்றே.

---

[1]வைத்திடும். [2]ஒளிர்சிவன்.

சத்தியுஞ் சிவமு மாய தன்மைஇவ் வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உணர்குண [1]குணியு மாக
வைத்தனன் அவளால் வந்த ஆக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்
இத்தையும் அறியார் பீட லிங்கத்தி னியல்பு மோரார். அகூ

### பதியின் சிறப்பிலக்கணம்

சிவன்அரு உருவும் அல்லன் சித்தினோ டசித்தும் அல்லன்
பவமுதல் தொழில்க ளொன்றும் பண்ணிடு வானும் அல்லன்
தவமுதல் யோக போகம் தரிப்பவ னல்லன் தானே
இவைபெறஇயைந்துமொன்றும் இயைந்திடாஇயல்பினனே.

## இரண்டாஞ் சூத்திரம்

### அத்துவிதம்

உலகெலா மாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி
அலகிலா உயிர்கள் கன்மத் தாணையின் அமர்ந்து செல்லத்
தலைவனாய் இவற்றின் தன்மை தனக்கெய்த லின்றித் தானே
நிலவுசீர் அமல னாகி நின்றனன் நீங்கா தெங்கும். கூக

ஒன்றென மறைக ளெல்லாம் உரைத்திட உயிர்கள் ஒன்றி
நின்றனன் என்று பன்மை நிகழ்த்துவ தென்னை யென்னின்
அன்றவை பதிதான் ஒன்றென் றறையும்அக் கரங்கள் தோறும்
சென்றிடும் அகரம் போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே.

உருவொடு கருவி யெல்லாம் உயிர்கொடு நின்று வேறாய்
வருவது போல ஈசன் உயிர்களின் மருவி வாழ்வன்
தருமுயி ரவனை யாகா உயிரவை தானு மாகான்
[2]வருமவ னிவைதா னாயும் வேறுமாய் மன்னி நின்றே. கூஙூ

### இருவினை யுண்மை

இருவினை இன்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்தி றந்து
வருவது போவ தாகும் மன்னிய வினைப்ப யன்கள்
தருமரன் தரணி யோடு தராபதி போலத் தாமே
மருவிடா வடிவுங் கன்ம பலன்களும் மறுமைக் கண்ணே.

---

[1] குணியுமாகி. [2] வருபவன்.

இருவினை என்னை இன்பத் துன்பங்கள் இயல்ப தென்னின்
ஒருதன்மை இயல்புக் குள்ள தொருவனுக் கிரண்டு செய்தி
வருவதென் மலருந் தீயும் மருவலின் வாசம் வெம்மை
தருவதென் நீரென் செய்து தானியல் பாகு மன்றே. கூ௫

தன்னியல் பொழியப் பூவும் தழலும்வந் தணைய நீரின்
மன்னிய திரண்டு செய்தி வருமிரு வினையி னாலும்
உன்னிய இன்பத் துன்பம் உறும்உயி ருணர்வி லாத
துன்னிய அசித்தை இன்பத் துன்பங்கள் சூழ்ந்தி டாவே.

இம்மையின் முயற்சி யாலே இருநிதி ஈட்டி இன்பம்
இம்மையே நுகர்வர் செய்தி இலாதவர் பொருளு மின்றி
இம்மையே இடரு ழப்பர் வேறிரு வினைய துண்டேல்
இம்மையின் முயற்சி யின்றி எய்திட வேண்டும் இங்கே. கூஎ

இருவினைச் செயல்காண் இம்மை இரும்பொரு ளின்பம் வே
வருவினை செய்யுங் காலை மடிவரும் மடியு மின்றித் [ண்டி
தருவினை யதனில் அத்தந் தானறும துயருந் தங்கும்
ஒருவினை செய்யா தோரும் உடையர்இவ் வுலகத் துள்ளே.

## வினைப்பயன் நுகரும் முறைமை

பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்கா டென்னும்
ஆறுமுன் கருவுட் பட்ட தவ்விதி அனுப வத்தால்
ஏறிடும் முன்பு செய்த கன்மமிங் [1]கிவற்றிற் கேது
தேறுநீ இனிச்செய் கன்மம் மேலுடற் [2]சேரு மென்றே. கூகூ

உடற்செயல் கன்மம இந்த உடல்வந்த [3]வாறே தென்னின்
விடப்படு முன்னு டம்பின் வினைஇந்த உடல்வி ளைக்கும் [ன்
[4]தொடாசசியால ஒன்றுக்கொன்று தொன்றுதொட்ட ஞுதிவிதறி
இடத்தினின் மரம்ம ரத்தின் வித்தும்வந் திடையு மாபோல்.

முற்செயல் விதியை இந்த முயற்சியோ டனுப வித்தால்
இச்செயல் பலிக்கு மாறென் இதமகி தங்கள் முன்னர்
அச்செய லானுல் இங்கும் அவைசெயின் மேலைக் காகும்
பிற்செயா தனுப விப்ப தின்றுபின் தொடருஞ் செய்தி. ௪0௧

[1]இதனுக்கேது. [2]சேருமன்றே. [3]வாறென் என்னின்.
[4]தொடர்ச்சியாய்.

மேலைக்கு வித்து மாகி விளைந்தவை உணவு மாகி
ஞாலத்து வருமா போல நாம்செய்யும் வினைக ளெல்லாம்
ஏலத்தான் பலமாச் செய்யும் [1]இதமகி தங்கட் கெல்லாம்
மூலத்த தாகி என்றும் வந்திடும் முறைமை யோடே. ௧0௨

இதமகி தங்கள் என்ப திகல்மன வாக்குக் காயத்(து)
இதமுயிர்க் குறுதி செய்தல் அகிதமற் றதுசெய் யாமை
இதமகிதங்களெல்லாம் இறைவனே ஏற்றுக்கொண்டிங்(கு)
இதமகி தத்தால் இன்பத் துன்பங்கள் ஈவ னன்றே. ௧0௩

இறைவனிங் கேற்ப தென்னை இதமகி தங்க ளென்னின்
நிறைபர னுயிர்க்கு வைத்த நேயத்தின் நிலைமை யாகும்
அறமலி இதஞ்செய் வோருக் கனுக்கிர கத்தைச் செய்வன்
மறமலி அகிதஞ் செய்யின் நிக்கிர கத்தை வைப்பன். ௧0௪

நிக்கிர கங்கள் தானும் நேசத்தால் ஈசன் செய்வ(து)
அக்கிர மத்தால் குற்றம் அடித்துத்தீர்த் தச்சம் பண்ணி
இக்கிர மத்தி னாலே ஈண்டறம் இயற்றி டென்பன்
எக்கிர மத்தி னாலும் இறைசெயல் அருளே என்றும். ௧0௫

தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் தம்சொ லாற்றின்
வந்திடா விடின் உறுக்கி வளாரினால் அடித்துத் தீய
பந்தமும் இடுவர் எல்லாம் பார்த்திடில் பரிவே யாகும்
இந்தநீர் முறைமை யன்றோ ஈசனார் முனிவு மென்றும். ௧0௬

செயல்களே பலத்தைச் செய்யும் தெய்வம்வேண் டாஇங் கென்
முயலுமிச் செயல்கள் இங்கே முழுவதும் அழியும் எங்கே[னின்
பயனளிப் பனஅ ழிந்தே பலன்களைப் பண்ணும் கெட்டே
வயலிடும் தழையும் தின்னும் மருந்தும்பின் பலிக்கு மாபோல்.

செய்க்கிடுந் தழையும் தின்னுந் திரவிய மதுவும் போல
உய்த்திடுஞ் செய்தி கெட்டே உறுவிக்கும் பலத்தைஎன்னின்
வைத்திடுஞ் சோறும் பாக்கும் அருந்தினர் வயிற்றின்மாயந்தால்
மெய்த்திடும் பலம்உ னக்கு மலமலான் வேறு முண்டோ.

---

[1]இதமகி தங்க ளெல்லாம்.

திரவியம் உவமை யன்று செய்திக்கண் திரவி யங்கள்
விரவிய இடத்தே வீந்து பலந்தரும் இம்மை அம்மை
பரவிநீ பார்நீர் அங்கி பாத்திரத் திட்ட வெல்லாம்
கரவிடு மிங்கே எங்கே பலன்கொளக் கருதி ஞயே. ௧௦௯

செய்தவர் மனத்தே எல்லாச் செய்தியும் கிடந்து பின்னர்
எய்தவே பலன்க ளீனும் என்றிடின் இருஞ்சு வர்க்கம்
பொய்யர்வாழ் நரகம் பூமி புந்தியிற் கிடந்து [1]போந்த
ஐயனே அழகி துன்சொல் இந்திர சால மாய்த்தே. ௧௧௦

தானஞ்செய் பொருள்த ரித்தோர் செய்தவர் தக்க செய்தி
ஊனம்பின் ஞறவே காண்டும் பலமுறு விப்பான் வேண்டும்
ஈனமில் செய்தி ஈச னிடும்பணி இவைநாம் செய்தால்
நூனங்கள் அதிகம் நோக்கி நுகர்விப்பன் வினைநோய் தீர.

உலகுடல் கரணங் காலம் உறுபலம் நியதி செய்தி
பலவிவை கொண்டுகன்மம் பண்ணுவ துண்ப தாஞல் [ளா
நிலவிடா இவைதாம் சென்று நினைந்துயிர் நிறுத்திக் கொள்
அலகிலா அறிவ ஞனை அணைத்திடும் அருளி ஞலே. ௧௧௨

ஒழுக்கம்அன் பருள்ஆ சாரம் உபசாரம் உறவு சீலம்
வழுக்கிலாத் தவம்தா னங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை
அழுக்கிலாத் துறவ டக்கம் அறிவொடர்ச் சித்த லாதி
இழுக்கிலா அறங்க ளாஞல் இரங்குவான் பணிய றங்கள்.

மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல
இனமலர் கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம் போற்றிச்
சினமுத லகற்றி வாழும் செயலற மாஞல் யார்க்கும்
முனமொரு தெய்வ மெங்கும் செயற்குமுன் னிலையா மன்றே.

யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி [2]ஆங்கே
மாதொரு பாக ஞர்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படும்இ றக்கும் பிறக்கும்மேல் வினையுஞ் செய்யும்
ஆதலான் இவையி லாதான் அறிந்தருள் செய்வ னன்றே.

---

[1]போந்தது. [2]அங்கே.

இங்குநாம் சிலர்க்குப் பூசை இயற்றிடுல் இவர்களோவந்(து)
அங்குவான் தருவா ரன்றேல் அத்தெய்வ மத்த னைக்காண்
எங்கும்வாழ் தெய்வமெல்லாம் இறைவனாணையினுல் நிற்ப(து)
அங்குநாம் செய்யுஞ் செய்திக் காணைவைப் பால ளிப்பன்.

காண்பவன் சிவனே [1]யாஞல் அவனடிக் கன்பு செய்கை
மாண்பறம் அரன்றன் பாதம் மறந்துசெய் அறங்களெல்லாம்
வீண்செய லிறைவன் சொன்ன விதியறம் விருப்பொன் றில்லா
பூண்டனன் வேண்டல் செய்யும் பூசனை புரிந்து கொள்ளே.[ன்

தாபர சங்க மங்க ளென்றிரண் டுருவில் நின்று
மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்
நீபரன் தன்னை நெஞ்சில் நினைவையேல் நிறைந்த பூசை
ஆய்பரம் பொருளை நாளும் அர்ச்சிநீ அன்பு செய்தே. ககஅ

அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த பாதகம் நன்மை யாய்த்தே. ககக

மறைகளீ சன்சொல் அச்சொல் வழிவாரா உயிரை வைக்கும்
[2]சிறைகள்மாநிரயம் இட்ட பணிசெய்வோர் செல்வத்தோடும்
உறையும்மா பதிகள் உம்ப ருலகங்கள் யோனிக் கெல்லாம்
இறைவனு ணையினுல் இன்பத் துன்பங்கள் இயைவ தாகும்.

ஆணையால் அவனி மன்னன் அருமறை முறைசெய் யாரை
ஆணையில் தண்டஞ் செய்தும் அருஞ்சிறை யிட்டும் வைப்பன்
ஆணையின் வழிசெல் வோருக் கரும்பதி செல்வம் நல்கி
ஆணையும் வைப்பன் எங்கும் ஆணையே ஆணை யேகாண்.கஉக

அரசனும செய்வ தீசன் அருள்வழி அரும்பா வங்கள்
தரையுளோர் செய்யில் தீய தண்டலின் வைத்துத் தண்டத்
துரைசெய்து தீர்ப்பன் பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்
நிரயமும் சேரார் அந்த [3]நிரயமுன் நீர்மை ஈதாம். கஉஉ

---

[1]ஆயின். [2]சிறைகொள். [3]நிரயமும், நிரமிங் நீர்மை போலும்.

அருளினால் உரைத்த நூலின் வழிவாரா ததன்மஞ் செய்யின்
இருளுலாம் நிரயத் துன்பத் திட்டிரும் பாவந் தீர்ப்பன்
பொருளுலாஞ் சுவர்க்கமாதி போகத்தாற் புணியந் தீர்ப்பன்
மருளுலாம் மலங்கள் தீர்க்கும் மருந்திவை வயித்ய நாதன்.

மருத்துவன் உரைத்த நூலின் வழிவரிற் பிணிகள் வாரா
வருத்திடும் பிணிகள் தப்பில் தப்பிய வழியுஞ் செய்யத்
[1]திருத்தினன் மருந்து செய்யா துறும்பிணி சென்றுந் தீர்ப்பன்
உரைததநூற் சிவனும்[2] இன்னே உறுங்கன்மமூட்டித தீர்ப்பன்.

மண்ணுளே சிலவி யாதி மருத்துவன் அருத்தி யோடும்
திண்ணமா யறுத்துக் கீறித் தீர்த்திடும் சிலநோ யெல்லாம
கண்ணிய கட்டி பாலும் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன்
அண்ணலும் இன்பத் துன்பம் அருத்தியே வினைய றுப்பன்.

பூதனு சரீரம் போனால் புரியட்ட ரூபந் தானே
யாதனு சரீர மாகி இன்பத்துன் பங்க ளெல்லாம்
நாதனார் ஆணை உய்க்க நரகொடு சுவர்க்கம் துய்த்துத்
தீதிலா அணுவாய் யோனி சேர்ந்திடும் சீவ னெல்லாம். கஉசு

உடல்விடா யோனி பற்றி உதிப்பினும் உதிக்கு மொன்றிற்
படர்வுறு துறும்பா வத்தாற் பாடாணம் போற்கி டந்து
கடனதாங் காலஞ் சென்றுற் கடுநர கதனில் வீழ்ந்தங்(கு)
இடருறும் உருவங்கன்மத் தளவினில் எடுக்கு மன்றே. கஉஎ

பன்னகம் அண்ட சங்கள் பரகாயந் தன்னிற் பாய்வோர்
துன்னுதோல் முட்டை யாக்கை துறந்துசெல் வதுவே போல
உன்னிய வுயிர்கள் தூல வுடல்விட்டு வானி னூடும்
மன்னிடும் நனவு மாறிக் கனவினை மருவு மாபோல். கஉஅ

## இருவினை இலக்கணம்

தன்மமோ டதன்ம மாகித் தானிரு பயனுந் தந்து
நன்மைதீ மையினும் இன்பத் துன்பினும் நாடிக் காண
முன்னமே ஆன்மா வின்தன் மும்மலத் தொன்ற தாகிக்
கன்மமும் மூலங் காட்டிக் காமிய மலமாய் நிற்கும். கஉகூ

---

[1] திருத்துவன். [2] இவ்வா(று).

இருவினை அனாதி யாதி இயற்றலால் நுகர்வால் அந்தம்
வருமலஞ் சார்ந்து மாயா உருவுகள் மருவி யார்த்துத்
தருசெயல் முறைமை யாலே தான்பல பேதங் காட்டி
அருவதாய் நின்ற ரன்தன் ஆணையின் அமர்ந்து செலலும். கஙo

## தனுக்களின் தன்மை

சங்கமம் தாப ரங்கள் தத்தம்கன் மத்துக் கீடா
அங்குரு யோனி மாறும் அச்சுமா றுதிங் கென்னின்
இங்குமா னுடர் இயற்றும் புண்ணியத் தின்ப ஈட்டம்
அங்குவான் சுரர்க ளாயோ நரர்களாய் அருந்து வாரோ.

நரர்களாய்த் துய்ப்ப ரென்னின் நரர்பதி சுரரு லோகம்
சுரர்களாய் துய்ப்ப ரென்னிற் சொன்னஅச் சுழியு மாகும
சுராகளாயப் பலன்கள்துய்த்துத் தாமிங்குத் தோன்றும்போது
நரர்களரய்ப் பிறப்பர் ஞாலத் தமரராய் நண்ணி டாரே.

வண்டுக ளாகி மாறும் மயிர்க்குட்டி மற்றோர் செந்துப்
பண்டைய உருவந் தானே வேட்டுவ னாய்ப்பி றக்கும்
கண்டுகொள் யோனி யெல்லாம் கன்மத்தால் மாறுமென்றே
கொண்டன சமயமெல்லாம் இச்சொல்நீ [1]கொண்ட தெங்கே.

அகலியை கல்ல தானாள் அரிபல பிறவி யானான்
பகலவன் குலத்திற் றோன்றிப் பாரெலாம் முழுதும் ஆண்டு
நிகரிலா அரச னாகும் [2]சிலந்திநீ டுலகம் போற்றச்
சகமதில் எலிதா னன்றோ மாவலி [3]யாய்த்துத் தானே. கஙச

செப்பினாய் மாற வேறு சிலர்விதி யாலே கன்மால்
வைப்புறும் யோனி எல்லாம் மாறிவந் திடாவிங் கென்னின்
எப்படி யானுஞ் செய்திக் கிறைகரி யாவ னென்றே
முற்பட மொழிந்தே னெலலாம் முதல்வன்தன் விதியேயாகும்.

அவ்வவ யோனி தோறும் அவ்வவ உலகந் தோறும்
செவ்விதின் அறிந்து கன்மம் சேர்ந்திடா சீவன் சேரா
இவ்வகை தம்மிற் சேர்வும் இறைசெய லானாற் செய்த
எவ்வுரு வுந்தன் கன்மால் மாற்றுவன் இறைவன் தானே.

---

[1]கொண்ட தென்னே. [2]சிலம்பி. [3]ஆயினனே.

மாறியிவ் வுருவ மெல்லாம் வருவதெங் கேஙின் றென்னில்
கூறிய சூக்கு மத்தாம் உருவெனிற் குறியொன் றென்னின்
வேறொரு குறியா மாரம் வீரசங் கிலியு மாகும்
தேறுநீ ஒருவ னலிச் செயலெலாம் சிவனு லாகும். கஙஎ

சூக்குமங் கெட்டுத் தூலந் தோன்றிடா சூக்கு மத்தின்
ஆக்கியோ ருடல்கி டப்ப தின்றுட லாக்குந் தன்மைக்(கு)
ஒக்கிய சத்தி யுண்டாய் உடல்தருங் காலம் உற்று
நீக்கிட மரம்பின் வேரோர் நீள்மரம் நிகழ்த்து மாபோல்.

விதிப்படி சூக்கு மத்தே உருவரும் வினையா லிங்கே
உதித்திடா உருவ மாக உருவரு மரங்கள் வித்தில்
கதித்தெழு மரமும் வித்தும கழியும்பின் அழியுஞ் சூக்க
மதிக்கெழு கலைகள் போல வருவது போவ தாமே. கஙக

தூலமாம உருவி னுக்குச் சூக்குமம முதல தற்கு
மூலமான் அதற்கு மூலம் மோகினி அதன்மு தற்றன்
மேலதாம் விந்து சத்தி சிவமிவை மிசையா மெல்லாம்
சாலஇன் றுகும் ஆன்மாச் சிவத்தினைச் சார்ந்த போது. கசo

கரணங்களின் தன்மை

அரன்விதி அருள தென்றே அறைந்தனம் அதுவு முன்னே
தரை[1]நர கருந்து றக்கம் தனுகர ணாதி யெல்லாம்
வருவதுஞ் செய்த னாதி மலங்களிம மருந்தால் தீர்த்துப்
பரகதி யதுவுந் தந்து பாதபங் கயமும் சூட்டும். கசக

எழுமுடல் கரண மாதி இவைமலம் மலம லத்தாற்
கழுவுவ னென்று சொன்ன காரண மென்னை என்னில்
செழுநவ அறுவை சாணி உவர்செறி வித்த மூக்கை
முழுவதுங்கழிப்பன்மாயை கொடுமலமொழிப்பனமுன்னேன்.

மாயை

நித்தமாய் அருவாய் ஏக நிலையதாய் [2]அகிலத் துக்கோர்
வித்துமாய் அசித்தா யெங்கும் வியாபியாய் விமல னுக்கோர்
சத்தியாய்ப் புவன போகந் தனுகர ணமும்உ யிர்க்காய்
வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யு மன்றே.

---

[1]நரகந் துறக்கம். [2]உலகத் திற்கோர்.

### தத்துவங்களின் தோற்ற ஒடுக்கங்கள்

மாயையிற் கால மோடு நியதிபின் கலாதி தோன்றும்
ஆயஅக் கால மூன்றாய் ஆக்கியும் அளித்தும் போக்கிக்
காயமோ டுலகுக் கெல்லாம் காலசங் கையினைப் பண்ணி
நாயக னாணை யாலே நடத்திடுஞ் சகத்தை யெல்லாம். கசச

நியதிபின் தோன்றிக் கன்ம நிச்சயம் பண்ணி நிற்கும்
அயர்விலாக் கலைபின் தோன்றி ஆணவம் ஒதுக்கிச் சித்தின்
செயல்புரி கிரியா சத்தி தெரிவிக்குஞ் சிறிதே வித்தை
உயர்கலை யதனில் தோன்றி அறிவினை உதிக்கப் பண்ணும்.

விச்சையின் அராகந் தோன்றி வினைவழி போகத் தின்கண்
இச்சையைப் பண்ணி நிற்கும் தொழிலறி விச்சை மூன்றும்
வைச்சபோ திச்சா ஞானக் கிரியைமுன் மருவி ஆன்மா
[1]நிச்சயம் புருட னாகிப் பொதுமையின் நிற்ப னன்றே. கசரு

வருங்குண வடிவாய் மூலப் பிரகிருதி கலையில் தோன்றித்
தருங்குண [2]மூன்றாய் ஒன்றிற் றுன்மூன்றாய் மும்மூன் றாகும்
இருங்குண ரூப மாகி இயைந்திடு மெங்கும் ஆன்மாப்
பெருங்குண வடிவாய்ப் போக சாதனம் பெத்த மாமே.

சித்தமாம் [3]அவ்வி யத்தம் சிந்தனை யதுவுஞ் செய்யுஞ்
புத்திஅவ் வியத்தில் தோன்றிப் புண்ணிய பாவஞ் சார்ந்து
வத்துநிச் சயமும் பண்ணி வருஞ்சுக துக்க மோகப்
பித்தினின் மயங்கி ஞானக் கிரியையும் பேணி நிற்கும்.

ஆங்காரம் புத்தி யின்கண் உதித்தகந் தைக்கு வித்தாய்
ஈங்கார்தான் எனனோ டொப்பார் என்றுயான் என்ன தென்
நீங்காதே நிற்குந் தானும் மூன்றதாய் நிகழு மென்பர் [றே
பாங்கார்பூ தாதி வைகா ரிகம்தைச தம்தா னென்றே. கசகூ

மனமது தைச தத்தின் வந்தொரு பொருளை முந்தி
நினைவதுஞ் செய்தங் கைய நிலைமையின் நிற்கும் ஆங்கே
இனமலி சோத்தி ராதி கன்மஇந் திரிய மெல்லாம்
முனமுறை செய்த வைகா ரிகம்தரு மென்பர் முன்னோர்.

---

[1]நிச்சய புருடன். [2]மூன்றும். [3]அவ்வியத்திற்.

நற்செவி துவக்குக் கண்நா நாசிஐந் திணையும் நல்லோர்
புத்திஇந் திரிய மென்று புகன்றனர் இவைத மக்குச்
சத்தநற் பரிச ரூப இரதகந் தங்கள் ஐந்தும்
வைத்தனர் விடய மாக அடைவினின் [1]மருவு மென்றே.கருக

வாக்கொடு பாதம் பாணி பாயுவோ டுபத்தம் ஐந்தும்
நீக்கினர் முன்னே கன்மேந் திரியங்க ளெனநி னைந்தே
ஆக்கிய வசன கமன தானமும் விசர்க்கா னந்தம்
ஊக்கமார் ஐந்தும் ஐந்தின் தொழிலென ஓதி னாரே. கருஉ

வாயாதி சோத்தி ராதி புறத்துவாழ் கருவி யாகும்
ஓயாத மனாதி காயத் துணருமுட் கருவி யாகும்
ஆய்வார்கட் கராக மாதி அவற்றினுட் கருவி யென்பர் [மா.
மாயாள்தன் வயிற்றி வற்றால் தொடக்குண்டு வாழு மான்

ஓசைநற் பரிச ரூப இரதகந் தங்க ளென்று
பேசுமாத் திரைகள் ஐந்தும் பிறக்கும்பூ தாதி கத்தின்
நேசஇந் திரியங் கட்கு நிகழறி விதனாற் காண்டும்
ஆசைசேர் மனாதி தன்மாத் திரைபுரி யட்ட கந்தான். கருச

சாற்றிய பஞ்ச தன்மாத் திரைகளிற் சத்த முன்னாத்
தோற்றும்வான் வளிதீ நீர்மண் தொடக்கியே ஒன்றுக்கொன்ற
ஏற்றமா மோசை யாதி இருங்குண மியைந்து நிற்கும் [ங்(கு)
ஆற்றவே விடய பூதம் அங்காங்கி பாவத் தாமே. கருரு

இரந்தர மாகி வான்றான் இடங்கொடுத் திடும்[2]ச லித்துப்
பரந்தவை திரட்டும்கால்தீச் சுட்டொன்றுவித்தல்பண்ணும்
நிரந்தரங் குளிர்ந்து நின்று பதஞ்செயும் நீர்மண் தானும்
உரந்தருங் கடின மாகித் தரித்திடும் உணர்ந்து கொள்ளே.

மண்புனல் அனல்கால் வான்பால் வடிவுநாற் கோண மாகும்
தண்பிறை மூன்று கோணம் தரும்அறு கோணம் வட்டம்
வண்பொன்மை வெண்மை செம்மை கறுப்பொடு தூம வன்
எண்தரும் எழுத்துத் தானும் லவரய [3]ஹவ்வு மாமே. [னம்.

[1]மருவுமன்றே. [2]சலித்தே பரந்திவை. [3]வவ்வும்.

குறிகள்வச் சிரத்தி னோடு கோகன தஞ்சு வத்தி
அறுபுள்ளி அமுத விந்து அதிதெய்வம் அயன்மா லாதி
செறிபுகழ் ஈச னோடு சதாசிவம் பூத தெய்வம்
நெறிதரு கலைஐந் திற்கும் நிகழ்த்துவர் இந்த நீர்மை. கருஅ

சுத்ததத் துவங்க ளென்று முன்னமே சொன்ன ஐந்தும்
இத்தகை மையின்இ யமபும் இவைமுப்பத் தொன்று மாகத்
தத்துவம் முப்பத் தாறுஞ் சைதன்னி யங்கள் ஐந்து
சித்தசித் தான்மா ஒன்று முப்பதும அசித்தே செப்பில்.

ஐந்துசுத் தத்தின் கீழேழ் சுத்தாசுத் தம்அ சுத்தந்
தந்திடும் புமான்கீ ழெண்மூன் றுயதத் துவஞ்சீ வர்க்கு
வந்திடும் பிரேர காண்டம்[1]மருவுபோக சயித்தி ரத்தோ(டு)
அந்தமில் அணுக்க ளுக்குப் போக்கிய காண்ட மாமே.

தத்துவ ரூப மாகும் தரும்அரு வுருவ மெல்லாம்
தத்துவம் தூல சூக்க பரங்களு மாகி நிற்கும்
தத்துவம் தன்னிற் சாரும் அணுக்கள்சா தாக்கி யத்தில்
தத்துவ சத்தம் சாரும் சகலமும் தத்து வங்காண். கசுக

தத்துவம எணமூன் றும்சென்(று)ஆனமதத் துவத்தொடுங்கும்
வித்தையி னொடுங்கும் ஆறும் சிவத்தினி னொடுங்கும மூன்றும்
நித்ததத் துவம்இம் மூன்றும் என்பர்கள் இரண்டும் நின்ற
சுத்தமாம் சிவத்தொ டுங்கும் தோற்றமும் இதுபோ லாகும்.

மொய்தரு பூத மாதி மோகினி அநத மாகப்
பொய்தரு சமய மெல்லாம் புக்குநின் றிடும்பு கன்று
மெய்தரு சைவ மாதி இருமூன்றும் வித்தை யாதி
எய்துதத் துவங்க ளேயும் ஒன்றுமின் றெம்மி றைக்கே.

### பதி எங்கும் நிறைந்து நிற்கும் முறைமை

சிவஞ்சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தருள் உருத்தி ரன்தான் மால்அயன் ஒன்றினொன்றாய்ப்
பவந்தரும் அருவ நாலிங் குருவநா லுபய மொன்றாய்
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர். கசுச

சத்தியாய் விந்து சத்தி யாய்மனோன் மனிதா னாகி
ஒத்துறு மகேசை யாகி உமைதிரு வாணி யாகி

---

[1] மற்றது போக காண்டம்.

வைத்துறும் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி ஒருத்தி யாகும்
எத்திறம் நின்ருன் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள். கசுரு

சத்திதான் நாத மாதி தானுகுஞ் சிவமும் அந்தச்
சத்திதான் ஆதி யாகும் தரும்வடி வான வெல்லாம்
சத்தியும் சிவமு மாகும் சத்திதான் [1]சத்த னுக்கோர்
சத்தியாம் சத்தன் வேண்டிற் றெல்லாமாஞ் சத்தி தானே.

சிவம்சத்தி தன்னை ஈன்றும் சத்திதான் சிவத்தை ஈன்றும
உவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயி ரெல்லாம் ஈன்றும்
பவன்பிரம சாரி யாகும் பால்மொழி கன்னி யாகும்
தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் தெரியுமன்றே.

தனுகரண புவன போகம் தற்பரம பந்தம் வீடென்(று)
அணுவினே டெல்லா மாகி அடைந்திடுந் தத்து வங்கள்
இனிதறிந் திவைநி விர்த்தி முதல்கலை யிடத்தே நீக்கி
நனிபர முணர்ந்தோ னந்தத் தத்துவ ஞானி யாவன். கசுஅ

எல்லாமாய்த்தத்துவங்கள் [2]இயைந்ததென் அணுவுக்கென்னில்
தொல்லாய கன்ம மெல்லாம் துய்ப்பித்துத் துடைத்தற் கும்
[3]நில்லாமை முற்று வித்து நீக்கவும் கூடி நின்ற [பின்
பொல்லாத ஆணவத்தைப் போக்கவும் புகுந்த தன்றே.

### ஆணவ மலம்

ஒன்றதாய் அநேக சத்தி யுடையதாய் உடனுய் ஆதி
அன்றதாய் ஆன்மா வின்தன் அறிவொடுதொழிலை ஆர்த்து[ந்(து)
நின்றுபோத் திருத்து வததை நிகழ்ததிச்செம் பினிறகளிமபேய்
என்றும்அஞ் ஞானங் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே.

மலமென வேறொன் றில்லை மாயாகா ரியம தென்னின்
இலகுயிர்க் கிச்சா ஞானக் கிரியைகள் எழுப்பும் மாயை
விலகிடும் மலமி வற்றை வேறுமன் றதுவே ருகி
உலகுடல் [4]கரண மாகி உதித்திடும உணர்ந்து கொள்ளே.

மாயையே ஆன்ம ஞானக் கிரியையை மறைத்து நிற்கும்
[5]தூயவெம் பரிதி [6]தன்னைத் தொடர்முகில் மறைத்தாற் போ
போய்முகில் அகலச் சோதி புரிந்திடு மதுவே போலக் [லப்
காயமு மகல ஞானத் தொழில்பிர காச [7]மாமே. கஎஉ

---

[1]சத்தனுக்குச். [2]இயைவதென். [3]நில்லாமல். [4]கரணமாதி.
[5]தூய இப்பரிதி. [6]தன்னிற் சுடர்முகில். [7]மாகும்.

பரிதியை முகில் மறைப்பப் பாயொளி பதுங்கி னாற்போல்
உருவுயிர் மறைக்கின் ஞானக் கிரியைகள் ஒளிக்கு மாகும்
கருதிடும் இச்சா ஞானக் காரியம் காயம் பெற்றால்
மருவிடும் உயிர்க்குக் காயம் வந்திடா விடின்ம றைப்பே.

போதகா ரியம்ம றைத்து நின்றது புகல்ம லங்காண்
ஓதலாம் குணமு மாக உயிரினுள் விரவ லாலே
காதலால் அவித்தை சிந்தத் தரும்கலை யாதி மாயை
ஆதலா லிரண்டுஞ் சோதி இருளென வேறா மன்றே. ௧௭௪

புருடன்தன் குணம் அவித்தை யெனில்சடம் புருட னாகும்
குருடனதன் கண்ணின் குற்றம கண்ணின்தன் குணமோ கூறாய்
மருள்தன் றன் குணம தாகி மலம்அசித் தாகி நிற்கும்
தெருள்தன் றன் குணம தாகிச் சித்தென நிற்கும் சீவன்.

## மல பந்தம்

மும்மலம் நெல்லி னுக்கு முளையொடு தவிடு மிப்போல்
மம்மர்செய் தணுவி னுண்மை வடிவினை [1]மறைத்து நின்று
பொய்மமைசெய் போக பந்த போதநிருத் துவங்கள் பண்ணு
இம்மலம் மூன்றி னோடும் இருமல மிசைப்பன் இன்னும்.[ம்

மாயையின் காரி யத்தை மாயேய மலம தென்றும்
ஏயும்மும் மலங்கள் தத்தந் தொழிலினை இயற்ற ஏவும்
தூயவன் தனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்
ஆய்வர்இம் மலங்கள் ஐந்தும் அணுக்களை அணைந்து நிற்கும்.

மலம்மாயை கன்மம் மாயே யம்திரோ தாயி மன்னிச்
சலமாரும் பிறப்பி றப்பில் தங்கிஇத் தரைகீழ் மேலும்
நிலையாத கொள்ளி வட்டங் கறங்கென நிமிடத் தின்கண்
அலமாரும் இறைவ னாணை யால்உயிர் நடக்கு மன்றே. ௧௭௮

## மல நீக்கம்

அண்டசம் சுவேத சங்கள் [2]உற்பிச்சம் சராயு சத்தோ(டு)
எண்தரு நாலெண் பத்து நான்கு[3]நூ றாயி ரத்தால்
உண்டுபல் யோனி யெல்லாம் ஒழித்துமா னுடத்து தித்தல்
கண்டிடில் கடலைக் கையால் நீந்தினன் காரி யங்காண். ௧௭௯

---

[1]மறைத்திருக்கும். [2]உற்பீசம். [3]நூறாயிரத்தாய்.

நரர்பயில் தேயந் தன்னில் நான்மறை பயிலா நாட்டில்
விரவுத லொழிந்து தோன்றல் மிக்கபுண் ணியந்தா னுகும்
தரையினிற் கீழை விட்டுத் தவஞ்செய்சா தியினில் வந்து
பரசம யங்கள் செல்லாப் பாக்கியம் பண்ணொ ணுதே. கஅ0

வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாம் சிறுமை தப்பித்
தாழ்வெனும் தன்மை யோடும் சைவமாம் சமயம் சாரும்
ஊழ்பெறல் அரிது சால உயர்சிவ ஞானத் தாலே
போழிள மதியி னானைப் போற்றுவார் அருள்பெற் றாரே.

மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் [1]காயம்
ஆனிடத் தைந்து மாடும் அரன்பணிக் காக அன்றோ
வானிடத் தவரும் மண்மேல் வந்தரன் றனை அர்ச் சிப்பர்
ஊனெடுத் துழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ.

கருவினுள் அழிவ தாயும் கழிந்திடா தழிவ தாயும்
பரிணமித் தழிவ தாயும் பாலனுய் அழிவ தாயும்
தருணனுய் அழிவ தாயும் தான்நரைத் தழிவ தாயும்
[2]உருவவே யழிவே யானல் உள்ளபோ தேபார் உய்ய. கஅ௩

ஒருபுலன் நுகரும் போதங் கொன்றில்லை [3]ஒன்றின் பாலும
வருபயன் மாறி மாறி வந்திடும் எல்லாம் மாறும்
ஒருபொழு துணரி னுண்டாம் அல்லதிவ் வல்லல் வாழ்க்கை
மருள்கன வதுவும் [4]போல மாயும்பின் மாயு மன்றே. கஅ௪

அரிசனம் பூசி மாலை அணிந்துபொன் னுடை சாத்திப்
பரிசனம் பின்பு செல்லப் பாரகர் பரிக்கக் கொட்ட
[5]வரிசின்னம் ஊதத் தொங்கல் வந்திட உணர்வு மாண்டு
பெரியவர்பேச்சுமின்றிக் கிடத்தலால் பிணத்தோடொப்பர்.

பிணத்தினை ஒத்து வாழ்வோர் பின்நடைப் பிணங்கள் போல
உணக்கியே உழல்வீர் உங்க ளுடலுயிர் உணர்வு மெல்லாம்
கணத்திடைத் தோன்றி[6]மாயும் காயமென் றறிந்தொருக்கால்
வணக்குறீர் அரனை என்றும் வானவர் வணங்க வைப்பன்.

---

[1]காயத்(து). [2]உருவமே. [3]ஒன்றன். [4]போலும். [5]வருசின்னம். [6]நின்று கழியு மென்று.

## மூன்ருஞ் சூத்திரம்

### பசு உண்மை

உயிரெனப் படுவ திந்த உடலின்வே றுளதாய் உற்றுச்
செயிருறும் இச்சா ஞானச் செய்திகள் உடைய தாகிப்
பயில்வுறும் இன்பத் துன்பப் பலன்களும் நுகரும் பார்க்கில்
துயிலொடும் அஞ்ச வத்தைப் படும்உண்மை துரியா தீதம்.

உடலின்வேறுயிரேன் இந்த உடலன்ரு உணர்வதென்னின்
உடல்சவ மான போதும் உடலினுக் [1]குணர்வுண் டோதான்
உடலினின வாயுப போளுல உணர்ச்சியின் றுடலுக் கென்னின்
உடலினின் வாயுப் போகா துறக்கத்தும் உணர்வ தின்றே.

அறிவதைம் பொறியேயென்னின் உறக்கத்தி னறியாவாகும
அறிவதும் ஒன்ருென் ருக ஒன்ருென்ருய் [2]அறியு மென்னின்
அறிவுகளொனறையொன் றங் கறிந்திடா ஐந்தையுங்கொண(டு)
அறிவதொன் றுண்ட தான்மா [3]ஐமபொறி அறிந்திடாவே.

அறிந்திடும் பிராண வாயு அடங்குதல் விடுதல் செய்தால்
அறிந்திடா துடலு றக்கத் தறிவின்மை கரண மின்மை
அறிந்திடும் முதலி யாகின் அதுநிற்கக் கரணம் போகா
அறிந்திடும் பிராணன் தன்னை அடக்கியும் விட்டும் ஆன்மா.

---

## இலக்கணவியல்

## நான்காஞ் சூத்திரம்

உணர்வனகரணமென்னின்ஒன்றையொன்றுணராவெவ்வே(று)
அணைதருஞ் செயல்கள்நான்கும் அறிந்தவை அடக்கிஆக்கிப்
புணருமுட் [4]கரண மாக்கிப் புறக்கரு வியினும் போக்கி
இணைதரு மிவற்றின் வேருய் யானென தென்ப தான்மா.

கருவியாம் மனமும் புத்தி அகங்காரம் சித்தம் நான்கும்
மருவிஆன் மாவே என்ன வரும்தீபம் [5]எனத்தெரிந்தங்(கு)

---

[1] (கு) உணர்வுண் டாகும். [2] அறிவ தென்னின். [3] ஐம்புலன்.
[4] கருவியாக்கி. [5] எனமதித்தங்கு.

ஒருவியான் மாவினுண்மை உணர்ந்தவர் தமையு ணர்ந்தோர்
தருமிது பசுஞா னம்பின் சிவஞானந் தனக்கு மேலாம். கசுஉ

அவ்வுடன் உவ்வும் மவ்வும் மனம்புத்தி அகங்கா ரங்கள்
செவ்விய விந்து நாதஞ் சித்தமோ டுள்ள மாகும் [றும்
ஓவ்வெனும் எழுத்தாம ஐந்தும் உணர்வுதித் தொடுங்கு மா
பவ்வமும திரையும[1]போலும பாக்கில இப்பண்புந்தோன றும்.

அயன்அரி அரனும் ஈசர் சதாசிவம் அதிதெய் வங்கள்
உயவரும் அவ்வோ டுவ்வு மவ்விந்து நாதங் கட்குப்
பயனுறும் அஞ்சில் ஆன்மாப் பரவிடில் அசித்தாம பார்க்கில்
சயமுறு வளியி ரண்டும [2]தவிர்த்துறில் தானுந் தோன்றும்.

ஆன்மாவின் வடிவு [3]தானே அனேகார்த்தக் கூட்டமென்னில்
பார்ப்பார்கட் கான்மா இன்ருய்ப் பலபொரு ளுண்மையாகும்
சோப்பாய பலவே உண்மை என்றிடில செனறி வற்றை [மே.
ஓாபபான்வே றுணர்வோர்க கெலலாம உணாபொருள் வேற தா

பசுவிலக்கணம் - பர மத மறுப்பு

அறிவிச்சை செயல்க ளெலலாம் அடைந்தனல் வெம்மை
குறியுற்றங் [4]கேகா னேக குணகுணி பாவ மாகி [யும்போல்
நெறியுற்று நிற்கு மென்னில நிகழ்புலன் கரண மெல்லாம்
செறிவுற்றங் கறிவு கொள்ள வேண்டுமோ சீவ ஞர்க்கே.

குணங்களை யின்றி ஒன்ருங் குறியுடைத் தான்மா என்னின்
இணங்கிடா இச்சா ஞானக் கிரியைகள் இவைஉ டற்கட்
பிணங்கிடுஞ் சன்னி திக்கண் எனிற்பிணத் துறக்கத்தின்ரும்
உணங்கிடும கரண மென்னில் சன்னிதி ஒழிந்த தன்றே.

சன்னிதி குணம தாகும் தானென்போல் என்னிற் காந்தம்
முன்னிரும பென்ருய் ஈர்க்கு முறைமையுண் டகற்றலின்ரும்
உன்னுதல் ஒடுங்கல் ஓடல் இருத்தலே கிடத்தல் நிற்றல
என்னுமித்தொழிலகள்மற்றும இயற்றுவதான்மாஎன்னே.

உருவுயி ரென்னின் இந்த உடலினுட் காண வேண்டும
வருவது பரிணா மத்தாய் அநித்தமாம் பூத மாகும்

[1]போலப். [2]தடுத்திடத். [3]தானும். [4](கு) அனேகானேக.

கருவினில் நுழையு மாறும் காட்டிட வேண்டும் கண்ணின்
மருவிடா தென்னின் உன்றன் வாயினுல் உருவன் றென்னே.

சூக்கும உருவ தென்னில் தூலகா ரணம தாகும்
ஆக்கிய மனுதி தன்மாத் திரைவடி வசேத னம்பின்
நீக்கிய சூக்கு மத்தே நிற்பதோர் உருவுண் டென்னின்
ஆக்கிடும் உருவ மெல்லாம் அசித்துமாய் அநித்த மாமே.

அருவுரு என்னில் ஆன்மா அருவுரு வாவ தின்றும்
உருவரு வாகா தாகும் ஒருபொருட் கிரண்டு தன்மை
வருவது மில்லை காட்ட வன்னிபோல் மருவு மென்னின்
உருவமுங் காண வேண்டும் உண்மையும் [1]ஒழிந்து போமே.

சந்திரன் வடிவு போலத் தான்அரு வுருவ மென்னின்
வந்துநங் கண்ணிற் றேன்றும் வடிவுள தாமு யிர்க்கும்
இந்தஊ னுருவந் தாஞய் எழுவதும் உயிரே யென்னில்
பந்தமாய் அசித்தாய் ஆன்மாப் பவுதிக மாகு மன்றே. உ0உ

அருவவி காரி ஆன்மா ஆகாயம் போல வென்னின்
உருவினைக் கட்டி யாட்டி ஓட்டிமீட் டுலாவப் பண்ணி
மருவிநிற் பித்தி ருத்திக் கிடத்திமண் புரட்டி மற்றும்
பெருவிகா ரங்க ளெலலாம் தருவதென் பேசி டாயே. உ0ங

அசித்தெனின் உணரா தான்மா அசித்துச்சித் தாகுமென்னின்
அசித்துச்சித் தாகா தாகும சித்தசித் தாவ திலலை [(து)
அசித்தொரு புறமா [2]யொன்றில சித்தொரு புறமாய் நில்லா
அசித்துருச் சித்தே யென்னின் அசித்தடைந் தறிவ தின்றும.

உயிரினை அணுவ தென்னின் உடல்பல துவார மோடும
பயில்வுறக் கட்டு ணுது பாரமும் தரித்துச் செல்லா(து)
அயர்வுறும் அசித்தாய்ப் பூத அணுக்களி னென்ற தாகும
இயல்புறும் அவய வத்தால் அணுவுரு இறக்கு மன்றே.

உடலினின் ஏக தேசி உயிரெனின் உருவாய் மாயும்
படர்வுறு மறிவின் றெங்கும் சுடரொளிப் பண்ப தென்னில்
சுடர்தொடிற் சுடுவதெங்கும[3]தொட்டிடம்அறிவுண் டாகும்
அடர்புலன் இடத்து மொக்க அறிவெழ வேண்டு மன்றே.

---

[1]அழிந்து. [2]யொன்றிச். [3]தொட்டிட.

உருவினில் நிறைந்து நின்றங்
குணர்ந்திடும் உயிர தென்னின்
மருவிடா துறக்கம் வாயில்
அறிவொக்க வழங்க வேண்டும்
பெருகிடும் சுருங்கும் போதம்
பேருடல் சிற்று டற்கண்
வருமுடற் குறைக்க வொக்கக்
குறைந்துபின் மாயு மன்றே. உ௦எ

எங்குந்தான் வியாபி யாய்நின்
றுணரும்இவ் வான்மா வென்னில்
தங்கிடும் அவத்தை போக்கு
வரவுகள் சாற்றல் வேண்டும்
பங்கமார் புலனென் றென்றாய்ப்
பார்த்திடல் பகரல வேண்டும்
இங்கெலாம் [1]ஒழிந்தால் நிற்ப
தெங்ஙனம் இயம்பல் வேண்டும். உ௦அ

சுத்தமாம் ஆன்ம சித்தைத்
துகளுடல் மறைத்த தென்னின்
வைத்துரு துடற்கண் வாயில்
கரணங்கள் வழியால் ஞானம்
ஒத்துறும் மலமற் றாலும்
உறுமலம் வீடு மின்றாம்
பெத்தமும் அடையான் முத்த
னய்ப்பிர காச னமே. உ௦கூ

பசுவிலக்கணம் - சித்தாந்தம்

அசித்தரு வியாப கம்போல்
வியாபகம் அருவ மின்றாய்
வசித்திட வரும்வி யாபி
யெ.னுமவழக் குடைய னகி
நசித்திடா ஞானச் செய்தி
அனாதியே மறைத்து நிற்கும்
பசுத்துவ முடைய னகிப்
பசுவென நிற்கும் ஆன்மா. உக௦

[1] இறந்தால்.

மாயையின் வயிற்றுள் மன்னி வருஞ்செயல் ஞான மிச்சை
ஏயுமக் கலாதி மூன்றால் ஏகதே சத்தி னேய்ந்திங்(கு)
ஆயுமுக் குணங்கள் அந்தக் கரணங்க ளாதி யெல்லாம்
காய[1]பெத் தங்க ளாகிக் கலந்துடன் நிற்கும் ஆன்மா. உகக

சூக்கும தேகி யாகித் தூல[2]ரூ பத்தின் மன்னிச்
சாக்கிர முதலா யுள்ள அவத்தையுள் தங்கி எங்கும்
போக்கொடு வரவு மெல்லாம் புரிந்துபுண் ணியங்கள் பாவம
ஆக்கியும் பலன்க ளெல்லாம் அருந்தியும் நிற்கும் ஆன்மா.

வேறு

மருவா னந்தம் விஞ்ஞான மனோபி ராணன் அன்னமயம் [ய்
உருவாந்தன்மை யுண்டாய்முன் ஒன்றுக்கொன்றுசூக்குமமா
வருமாம் அன்ன மயம்பற்றி மாயை முதற்கா ரணமாகும்[ம்.
[3]அருவாயான்மாஐங்கோசத்தார்ப்புணடவற்றினஅகமபுறமா

வேறு

தோற்பாவைக்கூத்தும்தொல்லை மரப்பாவைஇயக்கமும்சேர்த்
தேர்ப்பாரிற் செலவும் வேறாய்ச் செலுத்துவோர் செய்தி தா
பார்ப்பாய வேடங் கட்டி ஆடுவோர் பரிசு போலும் [னும்
ஆர்ப்பாய காயந் தன்னை ஆன்மாநின் றாட்டு மாறே. உகச

என்னுடல் பொறிபி ராணன் கரணம்என் னுணர்வென் றக்
தன்னின்வே றாகும் நீஎன் றன்மனை என்ற வெலலாம் [கால்
நின்னின்வே றாகும் என்னின் நீங்கிடா இவையிங் கென்னின்
உன்னின [4]வாகும் நீயாம் உகிர்மயிர் உகவுங் காண்டி.உகரு

பொன்னணி ஆடை மாலை போதுமே லான போதிங்(கு)
என்னணி யானென் றுன்னி இருந்தனை [5]பிரிந்த போது
நின்னணி நீயும் [6]அல்ல [7]வாயினை காயம் நின்னில்
அன்னிய மாகும் உன்னை அறிந்துநீ பிரிந்து பாரே. உகசு

உடலியா னல்லேன் இந்த உணர்வுயான் அல்ல வான
கடனியா தென்னின் வேறு கண்டுணர் வென்ன தென்கை

[1]பந்தங்களாகிக். [2]தேகத்தின். [3]அருவாம் ஆன்மா. [4]ஆகி, ஆகில். [5]பிரித்த போது. [6]அல்லை. [7]ஆயின.

இடரிலா என்ற னுன்மா என்றபோ தான்மா வேருே
திடனதா உயிரை வேறு கண்டிடார் செப்ப லேகாண். உ௧௭

புந்தியை மனம தென்றும் மனமது புந்தி யென்றும்
சிந்தையைச் சீவ னென்றும் சீவனைச் சிந்தை யென்றும்
முந்தனை ஆன்மா வென்றும் ஆன்மாவை முந்த னென்றும்
வந்திடும் என்றன் ஆன்மா என்றது மற்ருென் றைக்காண்.

அறிவுடல் சிந்தை ஆன்மா அணைதலால் ஆன்மா என்பர்
எறிசுடர் விளக்கிருக்கு மிடத்தையும் விளக்கென்ருற்போல்
பொறிபுலன் கரண மெல்லாம் புலப்படும் [1]அபேத மாகிப்
பிறிதரா தறிவ தான்மா அறிபொருள் பின்ன மாமே. உ௧௯

கண்டுணர் புருடன் வேறு கனவுகண் டொடுங்கிக் காயம்
உண்டியும் வினையு மின்றிக் கிடந்துயிர்த் திடவு ணர்ந்து
கண்டிடுங் கனவுஞ் சொல்லி ஒடுக்கமுங் கருதி வேருய்
உண்டியும் வினையும் உற்றிங் குணர்த்திட உணரா நிற்கும்.

புருடனே அறிவ னுகில் பொறிபுல னுதி போதம்
தருவதென் அறிவு மாயா தனுகர ணுதி பற்றி
வருவதிங் கனுதி யாக மலத்தினின் மறைந்து நிற்பன் [வன்.
அருவனுய் இவற்ருே டாளும் [2]அமைச்சரும் அரசும் போல்

### அவத்தை இலக்கணம்

படைகொடு பவனி [3]போதும் பார்மன்னன் புகும்போதில்லில்
கடைதொறும் விட்டு விட்டுக் [4]காவலு மிட்டுப் பின்னர்
அடைதருந் தனியே அந்தப் புரத்தினில் அதுபோல் ஆன்மா
உடலினின் [5]அஞ்ச வத்தை உறுமுயிர் காவ லாக. உ௨௨

சாக்கிர முப்பத் தைந்து நுதலினிற் கனவு தன்னில்
ஆக்கிய இருபத் தைந்து களத்தினிற் சுழுனை மூன்று
நீக்கிய இதயந் தன்னில் துரியத்தில் இரண்டு நாபி
நோக்கிய துரியா தீதம் நுவலின்மூ லத்தி னென்றே. உ௨௩

---

[1]பேதமாகி. [2]அமைச்சரோ டரையன் போல்வன். [3]போந்து. [4]காவலும் விட்டுப். [5]அவத்தை ஐந்தும்.

[1]இருவகைச் சாக்கி ராதி அவத்தைக ளியல்பு தானும்
ஒருவகை கீழே நூக்கி உற்பவங் காட்டும் ஒன்று
பெருகமேல் நோக்கித் தீய பிறப்பறுத் திடும்யோகில்
தருவதோர் சமாதி தானும் தாழ்ந்துபின் சனனஞ் சாரும்.

அறிதரு முதல வத்தை அடைதரு மிடத்தே ஐந்தும்
செறிதருங் கரணந்தன்னில் செயல்தொறுங் கண்டுகொள்நீ
பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பற அருளா லாங்கே
குறியொடும் அஞ்ச வத்தை கூடுவர் வீடு கூட. உஉரு

ஐந்துசாக் கிரத்தின் நான்கு கனவினில சுழுனை மூன்று
வந்திடுந் துரியந் தன்னின் இரண்டொன்று துரியா தீதம்
தந்திடும் சாக்கி ராதி அவத்தைகள் தானந் தோறும் [ளே.
உந்திடுங் கரணந் தன்னில் செயல்தொறு முணர்ந்துகொள்

கேவல சகல சுத்தம் என்றுமூன் றவத்தை ஆன்மா
மேவுவன் கேவ லந்தன் னுண்மைமெய் பொறிக ளெல்லாம்
காவலன் கொடுத்த போது சகலஞும் மலங்க ளெல்லாம்
ஓவின போது சுத்த முடையன்உற் பவந்து டைத்தே. உஉஎ

அறிவிலன் அமூர்த்தன்நித்தன் அராகாதி குணங்களோடும்
செறிவிலன் கலாதி யோடும் சேர்விலன் செயல்க ளில்லான்
குறியிலன் கருத்தா வல்லன் போகத்திற் கொள்கை யில்லா
பிறிவிலன் மலத்திேனுடும வியாபிகே வலத்தில் ஆன்மா. [ன்

உருவினைக் கொண்டு போக போக்கியத் துன்னல் செப்பல
வருசெயல் மருவிச் சத்த மாதியாம் விடயம் தன்னில்
புரிவதுஞ் செய்திங் கெல்லா யோனியும் புக்கு மூன்று
திரிதரும் சகல மான அவத்தையிற் சீவன் சென்றே. உஉஅ

இருவினைச் செயல்க ளொப்பின் ஈசன்தன் சத்தி [2]தோயக்
குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத்
திரிமல மறுத்துப் பண்டைச் சிற்றறி வொழிந்து ஞானம்
பெருகிநா யகன்தன் பாதம் பெறுவது சுத்த மாமே. உகூ௦

[1]உஉச, உஉரு, உஉகூ ஆகிய மூன்று பாடல்களும் பல வகை களில் முறை மாறிக் காணப்படுகின்றன. [2]தோய்ந்து.

## ஐந்தாஞ் சூத்திரம்

### பாச மோசனம்

**பொ**றிபுலன் கரண மெல்லாம் புருடனால் அறிந்தான் மாவை
அறிதரா அவையே போல ஆன்மாக்க ளனைத்தும் எங்கும்
செறிதரும் சிவன்ற னாலே [1]அறிந்திடும் சிவனைக் காணா
அறிதரும் சிவனே யெல்லாம் அறிந்தறி வித்து நிற்பன்.

இறைவனே அறிவிப் பானேல் ஈண்டறி வெவர்க்கும் ஒக்கும்
குறைவதி கங்கள் தத்தம் கன்மமேற் கோமான் வேண்டா
முறைதரு செயற்குப் பாரும் முளரிகட் கிரவி யும்போல்
அறைதரு தத்தங் கன்மத் தளவினுக் களிப்பன் ஆதி. உ௩உ

அறிந்திடும் ஆன்மா வொன்றை [2]ஒன்றினால் அறித லானும்
அறிந்தவை மறத்த லானும் அறிவிக்க அறித லானும்
அறிந்திடுந் தன்னை யுந்தான் அறியாமை யானுந் தானே
அறிந்திடும் அறிவன அன்றாம் அறிவிக்க அறிவ னன்றே. உ௩௩

கருவியால்பொருளால்காட்டால் காலத்தால் கருமந்தன்னால்
உருவினால் அளவால் நூலால் ஒருவரா லுணர்த்த லானும்
அருவனாய் உண்மை தன்னில [3]அறியாது நிற்ற லானும்
ஒருவனே [4]எலலாத் தானும உணாததுவன அருளி னாலே. உ௩௪

கருவியும் பொருளும் காட்டும் காலமும் கன்மந் தானும்
உருவமும் அளவும் நூலும் ஒருவரு முணர்த்த லின்றி
அருவனா [5]யகில மெல்லாம் அறிந்தவை யாக்கி வேறாய்
ஒருவனே உயிர்கட் கெல்லாம உயிருமாய் உணர்ததி நிற்பன்.

இறைவன்தன் சன்னிதிக்கண் உலகின்றன்சேட்டையென்னு
மறைகளும் மறந்தாய் மாயை மருவிடான் சிவன வன்கண் [ம்
உறைதரா தசேத னத்தால் உருவுடை உயிர்கட் கெல்லாம
நிறைபரன் சன்னி திக்கண் நீடுணர் வுதிக்கு மன்றே. உ௩௬

உலகமே உருவ மாக யோனிகள் உறுப்ப தாக
இலகுபே ரிச்சா ஞானக் கிரியையுட் கரண மாக
அலகிலா [6]உயிர்ப்பு லன்கட் கறிவினை யாக்கி ஐந்து
நலமிகு தொழில்க ளோடும் நாடகம் நடிப்பன் நாதன்.

---

[1] அறிதரு. [2] மற்றொன்றால். [3] அறியாமை. [4] அனைத்தினும்.
[5] உலக மெல்லாம். [6] உயிர்கட் கெல்லாம் இருபய னாக்கி ஐந்து.

தெரிந்துகொண் டோரோவொன் றாகச்
சென்றைந்து புலனும் பற்றிப்
புரிந்திடும் உணர்வி னோடும்
போகமுங் கொடுத்(து) யோனி
திரிந்திடு மதுவுஞ் செய்து
செய்திகண் டுயிர்கட் கெல்லாம்
விரிந்திடும [1]அறிவுங் காட்டி
வீட்டையும் அளிப்பன் மேலோன். உ௫அ

அருளது சத்தி யாகும
அரன்தனக் கருளை யின்றித்
தெருள்சிவ மில்லை அந்தச்
சிவமின்றிச் சத்தி யில்லை
மருளினை அருளால் வாட்டி
மன்னுயிர்க் களிப்பன் கண்கட்(கு)
இருளினை ஒளியா லோட்டும்
இரவியைப் போல ஈசன். உ௫௬

## ஆறாஞ் சூத்திரம்

[2]அறிவுறும் பொருளோ ஈசன் அறிவுறா தவனோ என்னின்
அறிபொருள் அசித்த சத்தாம் அறியாத தின்றாம் எங்கும்
செறிசிவம் இரண்டு மின்றிச் சித்தொடு சத்தாய் [3]நிற்கும்
நெறிதருஞ் சத்தின் முன்னர் அசத்தெலாம நின்றி டாவே.

### பாச தரிசன இலக்கணம்

ஆவதாய் அழிவ தாகி வருதலால் அறிவு தானும்
தாவலால் உலகு போகம் தனுகர ணாதி யாகி
மேவலால மலங்க ளாகி விரவலால் வேறு மாகி
ஓவலால் [4]அசித்தாம் சுட்டி உணர்பொரு ளான வெல்லாம்.

மண்தனில் வாழ்வும் வானத் தரசயன் மாலார் வாழ்வும்
எண்தரு பூத பேத யோனிகள் யாவு மெல்லாம்
கண்டஇந் திரமா சாலம் கனாக்கழு திரதங் காட்டி
உண்டுபோல் இன்றாம் பண்பின் உலகினை அசத்து மென்பர்.

---

[1] உணர்வும். [2] அறிதரும். [3] நிற்பன். [4] அசத்தாம்.

உணராத பொருள்சத் தென்னின் ஒருபய னில்லைத் தானும்
புணராது நாமும் சென்று பொருந்துவ தின்றாம் என்றும்
தணவாத கருமமொன்றும் தருவது மில்லை வானத்(து) [ம.
இணரார்பூந் தொடையுமியாமைகெழுமயிர்க் கயிறுமபோலு

**பதி தரிசன இலக்கணம்**

தத்துவம் சத்(து) அசத்துச் சதசத்து மன்றென் றுலென்
உய்ததுணர்ந துணடோ இனரோ என றவாக குணடென்றோதில்
வைத்திடும சத்தே [1]யாகும மனத்தொடு வாக்கி றந்த
சித்துரு அதுஅ சித்தாம் மனத்தினுல் தேர்வ தெல்லாம்.

அறிபொருள் [2]அசித்தாய் வேருமஅறிவுருப் பொருள்சத் தென்
அறிபவன் அறியா ணுகில் அதுஇன்று பயனு மில்லை [னின்
அறிபவன் அருளி ணுலே [3]அநன்னிய மாகக் காண்பன்
அறிபொரு ளறிவாய் வேருய் அறிவரு ளுருவாய் நிற்கும.

பாவிப்ப தென்னிற் பாவம் பாவகங் கடக்கிற் பாவம்
பாவிக்கும் அதுநா னென்னில் பாவகம் பாவங் கெட்டுப்
பாவிப்ப தென்னிற் பாவம் பாவனை இறந்து நின்று
பாவிக்கப் படுவ தாகும் பரம்பரன் அருளி ணுலே. உசசு

அன்னிய மிலாமை யானும் அறிவினுள் நிற்ற லானும்
உன்னிய வெல்லாம் உள்நின் றுணர்த்துவன் ஆத லானும்
என்ன(து) யானென் ருேதும் இருஞ்செருக் [4]கறுத்த லானும்
தன்னறி வதனுற் காணும் தகைமையன் அல்லன் ஈசன்.

ஒன்றெனு மதனுல் ஒன்றென் றுரைப்பதுண் டாகை யாலே
நின்றனன் வேருய்த் தன்னின் நீங்கிடா நிலைமை யாலே
பின்றிய வுணர்வுக் கெட்டாப் பெருமையன் அறிவி னுள்ளே
என்றும்நின் றிடுத லாலே இவன்அவ னென்ன லாமே. உசஅ

---

[1]யாக. [2]அசத்தாய். [3]அன்னியமாக. [4](கு) இறத்தலானும்.

## சாதனவியல்

# ஏழாஞ் சூத்திரம்

### பசு தரிசன இலக்கணம்

அனைத்துஞ்சத் தென்னின் ஒன்றை
அறிந்திடா தசத்தா லென்னின்
முனைத்திடா தசத்துச் சத்தின்
முன்னிருள் இரவி முன்போல்
நினைப்பதிங் கசத்தே யென்னில்
சத்தின் முன்நிலாமை யானும்
தனைக்கொடொன் றுணர்த லானும்
[1]தானசத் துணரா தன்றே. உ௪௯

சத்தசத் தறிவ தான்மாத்
தான்சத்தும் அசத்து மன்று
நித்தனுய்ச் சதசத் தாகி
நின்றிடும் இரண்டின் பாலும்
ஒத்துட னுதித்து [2]நில்லா
துதியாது நின்றி டாது
வைத்திடுந் தோற்றம் நாற்றம்
மலரினின் வருதல் போலும். உ௫௦

சுத்தமெய்ஞ் ஞான மேனிச்
சோதிபால் அசத்தஞ் ஞானம்
ஒத்துரு குற்ற மெல்லாம்
உற்றிடு முயிரின் கண்ணே
சத்துள போதே வேரும்
சதசத்தும அசத்து மெல்லாம்
வைத்திடும அனுதி யாக
வாரிநீர் லவணம [3]போலும். உ௫௧

அறிவிக்க அறித லானும்
அழிவின்றி நிற்ற லானும்
குறிபெற்ற சித்தும சத்தும்
கூறுவ துயிருக் கீசன்

---

[1]தானசத் தாகு மன்றே. [2]நில்லான். [3]போல.

நெறிநித்த முத்த சுத்த
சித்தென நிற்பன் [1]அன்றே
பிறிவிப்பன் மலங்க ளெல்லாம்
பின்னுயிர்க் கருளி ஞலே. உருஉ

## எட்டாஞ் சூத்திரம்

### குரு தீக்ஷை

மன்னவன்தன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்(து)அவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ என்றவரிற் பிரித்துப்
பெருமையொடும் [2]தாணுக்கிப் பேணு மாபோல்
துன்னியஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறும்தொல் லுயிரை
மன்னுமஅருட் குருவாகி வந்(து)அவரின் நீக்கி
மலம்அகற்றித் தாணுக்கி மலரடிக்கீழ் வைப்பன். உருந

உரைதரும்இப் பசுவர்க்கம் உணரின் மூன்றும்
உயரும்விஞ் ஞானகலர் பிரளயா கலர்சகலர்
நிரையின்மலம் மலங்கன்மம் மலங்கன்ம மாயை
நிற்குமுத லிருவர்க்கு நிராதார மாகிக்
கரையில்அருட் பரன்துவிதா சத்திநிபா தத்தால்
கழிப்பன்மலம் சகலர்க்குக் கன்ம வொப்பில்
தரையில்ஆ சான்மூர்த்தி ஆதார மாகித்
தரித்தொழிப்பன் மலம்சதுர்த்தா சத்திநிபா தத்தால்.

பலவிதம்ஆ சான்பாச மோசனந்தான் பண்ணும்
படிநயனத் தருள்பரிசம் வாசகம்மா னதமும்
அலகில்சாத் திரம்யோகம் அவுத்தி ராதி
அனேகமுள அவற்றினவுத் திரி[3]இரண்டு திறனும்
இலகுஞா னங்கிரியை யெனஞான மனத்தால்
இயற்றுவது கிரியைஎழிற் குண்டமண்ட லாதி
நிலவுவித்துச் செய்தல்கிரி யாவதிதான் இன்னும்
நிர்ப்பீசம் சபீசமென இரண்டாகி நிகழும். உருரு

[1]என்றும். [2]தாணுகப். [3]இரண்டாம் அறியின்.

பாலரொடு வாலீசர் விருத்தர்[1]பனி மொழியார்
பலபோகத் தவர்வியாதிப் பட்டவர்க்குப் பண்ணும்
சீலமது நிர்ப்பீசம் சமயா சாரம்
திகழ்சுத்தி சமயிபுத் திரர்க்கு நித்தத்(து)
ஏலுமதி காரத்தை இயற்றித் தானும்
எழில்நிரதி காரையென நின்றிரண்டாய் விளங்கும்
சாலநிகழ் தேகபா தத்தி னோடு
சத்தியநிர் வாணமெனச் சாற்றுங் காலே. உருசு

ஓதியுணர்ந் தொழுக்கநெறி இழுக்கா நல்ல
உத்தமர்க்குச் செய்வதுயர் பீசமிவர் தம்மை
நீதியினல் நித்தியநை மித்திககா மியத்தின்
நிறுத்திநிரம் பதிகாரம் நிகழ்த்துவதும் செய்து
[2]சாதகரா சாரியரும் ஆக்கி வீடு
தருவிக்கும உலோகசிவ தருமிணியென் றிரண்டாம்
ஆதலினன் அதிகாரை யாமசமயம் விசேடம்
நிருவாணம் அபிடேகம் இவற்றடங்கு மன்றே. உருஎ

அழிவிலாக் கிரியையினன் ஆதல்சத்தி மத்தான்
ஆதல்அத்து வாசுத்தி பண்ணிமலம் அகற்றி
ஒழிவிலாச் சிவம்[3]பிரகா சித்தற்கு ஞானம்
உதிப்பித்துற் பவந்துடைப்பன் அரன்ஒருமூ வர்க்கும்
வழுவிலா வழிஆறும் மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்
கழிவிலா துரைத்தமுறை யொன்றினென்று வியாத்தி
கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன் கண்ணும். உருஅ

மந்திரங்கள் முதல்ஐந்தும் கலைஐந்தின் வியாத்தி
மருவுமந் திரமிரண்டு பதங்கள் நாலேழ்
அந்தநிலை எழுத்தொன்று புவனம் நூற்றெட்(டு)
அவனிதத் துவமொன்று நிவிர்த்திஅயன் தெய்வம்
வந்திடுமந் திரம்இரண்டு பதங்கள் மூவேழ்
வன்னங்கள் நாலாறு புரம்ஐம்பத் தாறு
தந்திடும்தத் துவங்கள்இரு பத்து மூன்று
தரும்பிரதிட் டாகலைமால் அதிதெய்வம் தானும்.

---

[1]பனிமொழியார். [2]சாதகா சாரியரும். [3]பிரகாசிக்கு ஞானம்.

வித்தையின்மந் திரமிரண்டு பதம்நா லைந்து
விரவும்எழுத் தேழுபுரம் இருபத் தேழு
தத்துவமு மோரேழு தங்குமதி தெய்வம்
தாவில்உருத் திரனாகும் சாந்தி தன்னில்
வைத்தனமந் திரமிரண்டு பதங்கள்பதி னொன்று
வன்னமொரு மூன்றுபுரம பதினெட் டாகும்
உத்தமமாம் தத்துவமும் ஒருமூன் றாகும்
உணரில்அதி தேவதையும் உயரீச னாமே. உ௬0

சாந்தியா தீதகலை தன்னின்மந் திரங்கள்
தாம்மூன்று பதமொன்(று)அக் கரங்கள்பதி னாறு
வாய்ந்தபுரம் மூவைந்து தத்துவங்க ளிரண்டு
மருவுமஅதி தேவதையும் மன்னுசதா [1]சிவராம்
ஏய்ந்தமுறை மந்திரங்கள் பதினொன்று பதங்கள்
எண்பத்தொன் றக்கரங்கள் ஐம்பத்தொன் றாகும்
ஆய்ந்தபுரம் இருநூற்றே டிருபத்து நாலாம்
அறிதருதத் துவம்முப்பத் தாறுகலை ஐந்தே. உ௬௧

மூன்றுதிறத் தணுக்கள்செயும் கன்மங் கட்கு
முன்னிலையாம மூவிரண்டாம் அத்து வாவின்
ஆன்றமுறை அவைஅருத்தி அறுத்துமல முதிர்வித்(து)
அரும்பருவம அடைதலுமே ஆசா னாகித்
தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத்
துகளறுத்தங் கத்துவாத் தொடக்கறவே சோதித்(து)
ஏன்றஉடற் கன்மம்அனு பவத்தினால் அறுத்திங்(கு)
இனிச்செய்கன் மம்மூல மலம்ஞானத் தாலஇடிப்பன்.

சைவ நெறி

புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும்
புகல்மிருதி வழிஉழன்றும் புகலும்ஆச் சிரம [ம்
அறத்துறைகள் அவையடைந்தும் அருந்தவங்கள் புரிந்து
அருங்கலைகள் பலதெரிந்தும ஆரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்தும் சென்றால் சைவத்
திறத்தடைவர் இதிற்சரியை கிரியா யோகம்
செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்.

---

[1]சிவமாம்.

இம்மையே ஈரெட்டாண் டெய்திளமை யாரும்
ஏந்திழையார் முத்தியென்றும் இருஞ்சுவர்க்க முத்தி
அம்மையே யென்றும்முத்தி ஐந்து கந்தம்
அறக்கெடுகை என்றும்அட்ட குணமுத்தி யென்றும்
மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி யென்றும்
விவேகமுத்தி யென்றும்தன் மெய்வடிவாம் சிவத்தைச்
செம்மையே பெறுகைமுத்தி யென்றும்செப் புவர்கள்
சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே. உகூ௬

ஓதுசம யங்கள் பொருளுணரு நூல்கள்
ஒன்றோடொன் றொவ்வாமல் உளபலவும் இவற்றுள்
யாதுசம யம்பொருள்நூல் யாதிங் கென்னில்
இதுவாகும் அதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண
[1]நின்றதுயா தொருசமயம் அதுசமயம் பொருள்நூல
ஆதலினால் இவையெல்லாம் அருமறைஆ கமத்தே
அடங்கியிடும் அவையிரண்டும்அரனடிக்கீழ்அடங்கும்.

அருமறையா கமமுதனூல் அனைத்தும்உரைக் கையினன்
அளப்பரிதாம் அப்பொருளை அரனருளால் அணுக்கள்
தருவர்கள்பின் தனித்தனியே தாமறிந்த அளவில்
தர்க்கமொடுத் தரங்களினாற் சமயம்சா தித்து
மிருதிபுரா ணம்கலைகள் மற்று மெல்லாம்
மெய்ந்நூலின் [2]வழிபுடையாம் அங்கம்வே தாங்கம்
சுருதிசிவா கமம்ஒழியச் சொல்லுவதொன் றில்லை
சொல்லுவார்த மக்கறையோ சொல்லொ ணாதே.

வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள்
வேறுரைக்கும் நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூல் அநாதிஅம லன்தருநூ லிரண்டும்
ஆரண நூல் பொதுசைவம் அருஞ்சிறப்பு நூலாம்
நீதியினால் உலகர்க்கும் சத்திநிபா தர்க்கும்
நிகழ்த்தியது நீள்மறையி னொழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கும் நூல்சைவம் பிறநூல்
திகழ்பூர்வம் சிவாகமங்கள் சித்தாந்த மாகும். உகூள

[1]நிற்பது யாது. [2]வழிபுடை யாரங்கம்.

சித்தாந்தத் தேசிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்திச்
 செனனமொன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
 மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை அறுத்து
முத்தாந்தப் [1]பாதமலர்க் கீழ்வைப்பன் என்று
 மொழிந்திடவும் உலகரெலாம் மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
 பெருங்குழியில் வீழ்ந்திடுவர் இதுவென்ன [2]பிராந்தி.

இறைவனு வான்ஞான மெல்லா மெல்லா [இயம்பு
 முதன்மைஅனுக் கிரகமெல்லா மியல்புடையான்
[3]மறைகளா கமங்களினுன் அறிவெல்லாந் தோற்றும்
 [4]மரபின்வழி வருவோர்க்கும் வாரா தோர்க்கும்
முறைமையினுல் இன்பத்துன் பங்கொடுத்த லாலே
 முதன்மையெலாம் அறிந்துமுயங் கிரண்டு போகத்
திறமதனுல் வினைஅறுக்குஞ் செய்தி யாலே
 சேருமஅனுக் கிரகமெலாம் காணுதும்நாம் [5]சிவற்கே.

### சைவ சாதனை

சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்ர மார்க்கம்
 தாதமார்க் கம்மென்றுஞ் சங்கரனை யடையும்
நன்மார்க்கம் நாலவைதாம ஞான யோகம்
 நற்கிரியா சரியையென நவிற்றுவதும் செய்வர்
சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்ய
 சாரூப்பிய சாயுச்சிய மென்றுசதுர் விதமாம்
முன்மார்க்க ஞானத்தால் எய்து முத்தி
 முடிவென்பர் மூன்றினுக்கும் முத்திபத மென்பர். உஎ௦

தாதமார்க் கம்சாற்றிற் சங்கரன்தன் கோயில்
 தலம்அலகிட் டிலகுதிரு மெழுக்கும் சாத்திப்
போதுகளுங் கொய்துபூந் தார்மாலை கண்ணி
 புனிதற்குப் பல[6]சமைத்துப் புகழ்ந்து பாடித்

[1]பதமலர்க்கீழ். [2]பிராந்தே. [3]மறையாகமங்களினுல்.
[4]வரைவின்வழி. [5]சிவன்பால். [6]சமைத்தே.

தீதில்திரு விளக்கிட்டுத் திருநந்த வனமும்
செய்துதிரு வேடங்கண் டாலஅடியேன் செய்வ(து)
யாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியும்
இயற்றுவதிச் சரியைசெய்வோர் ஈசனுல கிருப்பர்.

புத்திரமார்க் கம்புகலில் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனம்அமுது முதல்கொண் டைந்து
சுத்திசெய்தா சனம்மூர்த்தி மூர்த்தி மானும்
சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினால் அருச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினொடும் எரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலும்இக் கிரியையினை இயற்று வோர்கள்
நின்மலன்தன் அருகிருப்பர் நினையுங் காலே. உஎஉ

சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி இரண்டும்
சலிப்பற்று முச்சதுர முதலாதா ரங்கள்
அகமார்க்க மறிந்தவற்றின் அரும்பொருள்கள் உணர்ந்தங்
கணைந்துபோய் மேலேறி அலர்மதிமண் டலத்தின்
முகமார்க்க அமுதுடலம் முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைகள்
உகமார்க்க அட்டாங்க யோக முற்றும்
உழத்தல்உழந் தவர்சிவன்தன் உருவத்தைப் பெறுவர்.

சன்மார்க்கம் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவும் கீழாக மேலாம்
பதிபசுபா சம்தெரித்துப் பரசிவனைக் காட்டும்
நன்மார்க்க [1]ஞானத்தை நாடி ஞான
ஞேயமொடு ஞாதிருவும் நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்
பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் [2]காணே. உஎச

ஞானநூல் தனையோதல் ஓது வித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் [3]நன்று
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞான பூசை

---

[1] ஞானத்தால். [2] தானே. [3] நன்றும்.

ஊனமிலாக் கன்மங்கள் தபம்செபங்கள் தியானம்
ஒன்றுக்கொன் றுயருமிவை ஊட்டுவது போகம்
ஆனமையான் மேலான ஞானத்தால் அரனை
அருச்சிப்பர் வீடெய்த அறிந்தோ ரெல்லாம். உஎரு

## சிவஞானம்

கேட்டலுடன சிந்தித்தல தெளிதல் நிட்டை
கிளத்தலென ஈரிரண்டாம கிளக்கின் ஞானம்
வீட்டையடைந் திடுவர்நிட்டை மேவி னோர்கள்
மேவாது தப்பினவர் மேலாய பதங்கட்(கு)
ஈட்டியபுண் ணியநாத ராகி இன்பம்
இனிதுநுகர்ந் தரனருளால் இந்தப் பார்மேல்
நாட்டியநற் குலத்தினிலவந் தவதரித்துக் குருவால்
ஞானநிட்டை அடைந்தடைவர் நாதன் தாளே. உஎசு

தானம்யா கம்தீர்த்தம ஆச்சிரமம் தவங்கள்
சாநதிவிர தமகன்ம யோகங்கள் சரித்தோர்
ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின் மீள்வர்
ஈசனியோ கக்கிரியா [1]சரியையினில நின்றோர்
ஊனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லாம்
ஒடுங்கும்போ தரன்முன்நிலா தொழியின்உற்ப வித்து
ஞானநெறி அடைந்தடைவர் சிவனை அங்கு
நாதனே முன்னிற்கின் நணுகுவர்நற் றாளே. உஎஎ

சிவஞானச் செயலுடையோர் கையில் தானம்
திலமளவே செய்திடினும் நிலமலைபோல் திகழ்ந்து
பவமாயக் கடலின்அழுந் தாதவகை எடுத்துப்
பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தை அறுக்கத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
சரியைகிரி யாயோகந் தன்னினும்சா ராமே
நவமாகும் தத்துவஞா னத்தை நல்கி
நாதன்அடிக் கமலங்கள் நணுகுவிக்கும் தானே. உஎஅ

[1] சரியைதனில் முயன்றோர், இயன்றோர்.

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்லஆ கமஞ்சொல்ல அல்லவா மென்னும்
ஊனத்தார் என்கடவர் அஞ்ஞா னத்தால்
உறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞா னந்தான்
ஆனத்தா லதுபோவ தலர்கதிர்முன் இருள்போல்
அஞ்ஞானம் [1]விடப்பந்தம் அறும்முத்தி யாகும்
ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம்
இறைவனடி ஞானமே ஞான மென்பர். உஎகூ

சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்
ஆரியனும் ஆசான்வந் தருளால் தோன்ற
அடிஞானம் ஆன்மாவில் தோன்றும் தோன்றத்
தூரியனும் சிவன்தோன்றும் தானுந் தோன்றும்
தொல்லுலக மெல்லாமதன் னுள்ளே தோன்றும்
நேரியனுய்ப் பரியனுமாய் உயிர்க்குயிராய் எங்கும்
நின்றநிலை [2]யெல்லாம்முன் நிகழ்ந்து தோன்றும். உஅ0

ஞான நிட்டை

மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்தி நிபாதம்
மேவுதலும் ஞானம்விளைந் தோர்குருவின் அருளால்
புக்கனுட்டித் தேநிட்டை புரிந்துளோர்கள்
பூதலத்திற் புகழ்சீவன் முத்த ராகித்
தக்கபிரி யாப்பிரிய மின்றி ஓட்டில்
தபனியத்தில் சமபுத்தி பண்ணிச்சங் கரனே(டு)
ஒக்கவுறைந் திவர்அவனை அவன்இவரை விடாதே
உடந்தையாய்ச் சிவன்தோற்ற மொன்றுமே காண்பர்.

அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே
அறிவுதனை அருளினுன் அறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயில்
பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெலாந் தானுய்த் தோன்றி
நெறியாலே இவையெல்லாம் அல்ல வாகி
நின்றென்றுந் தோன்றிடுவன் நிராதார னுயே. உஅஉ

[1] அறப்பந்தம். [2] எல்லாமும்.

புண்ணியமேல் நோக்குவிக்கும் பாவங்கீழ் நூக்கும்
புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தி னாலே
நண்ணியஞா னத்தினால் இரண்டினையும் அறுத்து
ஞாலமொடு கீழ்மேலும் நண்ணா னாகி
எண்ணுமிக லோகத்தே முத்திபெறும் இவன்றான்
எங்கெழிலென் ஞாயிறெமக் கென்றுகுறை வின்றிக்
கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்து காயம்
கழிந்தக்கால் எங்குமாய்க் கருதரன்போல் நிற்பன்.

ஞாலமதின் ஞானநிட்டை யுடையோ ருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவதொன் றில்லைச்
சீலமிலைத் தவமில்லை விரதமொடாச் சிரமச்
செயலில்லைத் தியானமிலைச் சித்தமல மில்லைக்
கோலமிலைப் புலனில்லைக் கரண மில்லைக்
குணமில்லைக் குறியில்லைக் குலமு மில்லைப்
பாலருடன் உன்மத்தர் பசாசர்குண மருவிப்
பாடலினோ டாடலிவை பயின்றிடினும் பயில்வர். உஅச

தேசமிடம காலம்திக் காசனங்க ளின்றிச்
செய்வதொன்று போற்செய்யாச் செயலதனைச் செய்
ஊசல்படு மனமின்றி உலாவல் நிற்றல் [தங்(கு)
உறக்கமுணர் வுண்டிபட் டினியிருத்தல் கிடத்தல்
மாசதனில் தூய்மையினில் வறுமை வாழ்வில்
வருத்தத்தில் திருத்தத்தில் மைதுனத்தில் சினத்தில்
ஆசையினில் வெறுப்பில்இவை யல்லாது மெல்லாம்
அடைந்தாலும் ஞானிகள்தாம அரனடியை அகலார்.

இந்நிலைதான் இல்லையேல் எல்லா மீசன்
இடத்தினினும் ஈசனெல்லா விடத்தினினும் [1]நின்ற
அந்நிலையை அறிந்தந்தக் கரணங்கள் அடக்கி
அறிவதொரு குறிகுருவின் அருளினால் அறிந்து
மன்னுசிவன் தனையடைந்து நின்றவன்ற னாலே
மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்
துன்னியசாக் கிரமதனில் துரியா தீதம்
தோன்றமுயல் சிவானுபவம் சுவானுபூ திகமாம். உஅசு

[1]நிறைந்த.

சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகிற்
சருவசங்க நிவிர்த்திவந்த தபோதனர்கள் இவர்கள்
பாக்கியத்தைப் பகர்வதுவென் இம்மையிலே உயிரின்
பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவ ரன்றே
ஆக்குமுடி கவித்தரசாண் டவர்கள் அரி வையரோ(டு)
அனுபவித்தங் கிருந்திடினும் அகப்பற்றற் றிருப்பர்
நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற் றாலும்
நுழைவர்பிறப் பினின்வினைகள் நுங்கி டாவே. உஅஎ

கருவிகழிந் தாற்காணு ரொன்றுமெனிற் காணர்
காணுதார் கன்னிகைதான் காமரசங் காணுள்
மருவிஇரு வரும்புணர வந்த இன்பம
வாயினற் பேசரிது மணந்தவர்தாம் உணர்வர்
உருவினுயிர் வடிவதுவும் உணர்ந்திலைகாண் சிவனை
உணராதார் உணர்வினல் உணர்வதுகற் பனைகாண்
அருள்பெறின்அவ் விருவரையும் அறிவிறந்தங் கறிவர்
அறியாரேற் பிறப்பும்விடா தாணவமும அறுதே. உஅஅ

பன்னிறங்கள் அவைகாட்டும படிகம்போல் உள்ளம்
பலபுலன்கள் நிறங்காட்டும் பரிசுபார்த் திட்(டு)
இந்நிறங்கள் என்னிறம்அன் றென்று தன்றன்
எழில்நிறங்கண் டருளினல் இந்நிறத்தின் வேறாய்ப்
பொய்ந்நிறஐம் புலன்நிறங்கள் பொய்யெனமெய் கண்டான்
பொருந்திடுவன் சிவத்தினெடும போதான் [1]பின்னை
முன்னிறைநீர் சிறைமுறிய முடுகி யோடி
முந்நீர்சேர்ந் தந்நீராய்ப் பின்நீங்கா முறைபோல். உஅகூ

## அத்துவிதமுத்தி

எங்குந்தான் என்னில்நாம் எய்த வேண்டா
எங்குமிலன் என்னின்வே றிறையு மல்லன்
அங்கஞ்சேர் உயிர்போல்வன் [2]என்னின் அங்கத்(து)
அவயவங்கள் கண்போலக் காணு ஆன்மா
இங்குநாம் இயம்புநதத் துவங்களின்வைத் தறிவ(து)
இறைஞானந் தந்துதா னீதல்சுட ரிழந்த
துங்கவிழிச் சோதியும்உட் சோதியும்பெற் றாற்போல்
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே. உகூ0

---

[1] பின்னர். [2] எங்கும்.

பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப்
படும்பொழுது நீங்கிஅது விடும்பொழுதிற் பரக்கும்
மாசுபடு மலமாயை அருங்கன்மம் அனைத்தும்
அரனடியை உணருமபோ தகலும்பின் [1]அணுகும்
நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும்
நினைவுடையோர் நின்றிடுவர் நிலை[2]யதுவே [3]யாகி
ஆசையொடும் அங்குமிங்கு மாகிஅல மருவோர்
அரும்பாச மறுக்கும்வகை அருளின்வழி யுரைப்பாம்.

## ஒன்பதாஞ் சூத்திரம்

### உபாயநிட்டை, ஆன்மசுத்தி

பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத
நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதின்
ஆசைதரும் உலகமெலாம் அலகைத்தே ரா்மென்(று)
அறிந்தகல அந்நிலையே யாகும் பின்னும்
ஓசைதரும அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க
உள்ளத்தே புகுந்தளிப்பன் ஊனமெலா மோட. உகூஉ

### பாசஞானம், பசுஞானம்

வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்
விரும்பசபை வைகரியா தித்திறங்கள் மேலாம்
நாதமுடி வானவெல்லாம் பாச ஞானம்
நணுகிஆன் மாஇவைகீழ் நாட லாலே
காதலினலை நான்பிரம மென்னு ஞானம்
கருதுபசு ஞானம்இவ னுடலிற் கட்டுண்(டு)
ஓதியுணர்ந் தொன்றொன்று உணர்ந்திடலாற் பசுவாம்
ஒன்றாகச் சிவன்இயல்பின் உணர்ந்திடுவன் காணே. உகூங

கரணங்கள் கெடவிருக்கை முத்தியா மென்னில்
கதியாகும் சினைமுட்டை கருமரத்தின் உயிர்கள்
மரணங்கொண் டிடஉறங்கி மயங்கிமூர்ச் சிக்க
வாயுத்தம் பனைபண்ண வல்விடத்தை அடையச்

---

[1] அணையும். [2] இதுவே. [3] ஆகும்.

சரணங்கள் புகுநிழல்போல் தனை அடையுஞ் சமாதி
தவிராது மலமிதுவும் பசுஞான மாகும்
அரணங்க ளெரித்தவன்தன் அடியைஅறி விறந்தங்(கு)
அறிந்திடீர் செறிந்ததுகள் அகற்றி டீரே. உ௯௪

## பதிஞானம்

சிவனை அவன் திருவடிஞா னத்தாற் சேரச்
செப்புவது செயல்வாக்குச் சிந்தை யெல்லாம்
அவனையணு காவென்றும் ஆத லானும்
அவனடிஅவ் வொளிஞான மாத லானும்
இவனும்யான் துவக்குதிரம் இறைச்சி மேதை
என்புமச்சை சுக்கிலமோ இந்திரியக் கொத்தோ
[1]அவமகல எனையறியேன் எனும்ஐய மகல
அடிகாட்டி ஆன்மாவைக் காட்ட லானும். உ௯௫

கண்டிடுங்கண் தனைக்காணு கரணங் காணு
கரணங்கள் தமைக்காணு உயிருங் காணு
உண்டியமர் உயிர்தானுந் தன்னைக் காணு(து)
உயிர்க்குயிராம் ஒருவனையுங் காணு தாகும்
கண்டசிவன் தனைக்காட்டி உயிருங் காட்டிக்
கண்ணுகிக் கரணங்கள் [2]காணுமல் நிற்பன்
கொண்டரனை உளத்திற்கண் டடிகூடிற் பாசம்
கூடாது கூடிடினும [3]குறித்தடியின் நிறுத்தே. உ௯௬

## சிவோகம்பாவனை

[3]குறித்தடியின் நின்(று) அட்ட குணமெட்டுச் சித்தி
கோகனதன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம்
வெறுத்துநெறி அறுவகையும் மேலொடுகீ ழடங்க
வெறும்பொயென நினைந்திருக்க மேலொடுகீ ழில்லான்
நிறுத்துவதோர் குணமில்லான் [4]தன்னையொரு வர்க்கு
நினைப்பரியான் ஒன்றுமிலான் நேர்படவந் துள்ளே
பொறுப்பரிய பேரன்பை அருளியதன் வழியே
புகுந்திடுவன் எங்குமிலாப் போகத்தைப் புரிந்தே. உ௯௭

---

[1]பவமகல. [2]காணு. [3]குறிப்படியின். [4]தன்மை.

கண்ட இவை யல்லேன்நான் என்றகன்று காணுக்
கழிபரமும் நானல்லேன் எனக்கருதிக் கசிந்த
தொண்டினொடும் உளத்தவன்றான் நின்றகலப் பாலே
சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்[1]வே றின்றி
விண்டகலும் மலங்களெலாம் கருட[2]தியா னத்தால்
விடமொழியும அதுபோல விமலதையும் அடையும்
பண்டைமறை களும்அதுநா னானேன் என்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே. உகூஅ

திருவைந்தெழுத்து

அஞ்செழுத்தால் ஆன்மாவை அரனுடைய பரிசும் (டு)
அரனுருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்
அஞ்செழுத்தால் அங்ககர நியாசம் பண்ணி
ஆன்மாவின் அஞ்செழுத்தால் இதயத் தர்ச்சித்(து)
அஞ்செழுத்தாற் குண்டலியின் அனலை யோம்பி
அணைவரிய கோதண்டம் [3]அணைந்தருளின் வழிநின்(று)
அஞ்செழுத்தை விதிப்படிஉச் சரிக்கமதி யருக்கன்
அணையரவம் போற்றான்றும் ஆன்மாவில் அரனே.

அந்தரியாக பூசை

நாட்டுமித யந்தானும நாபியினில் அடியாய்
ஞாலமுதல் தத்துவத்தால் எண்விரல்நா ளத்தாய்
மூட்டுமோ கினிசுத்த வித்தைமல ரெட்டாய்
முழுவிதழ்எட் டக்கரங்கள் முறைமையினின் உடைத்
காட்டுகம லாசனமேல் ஈசர்சதா [4]சிவமும் [தாய்க்
கலாமூர்த்த மாம்இவற்றின் கண்ணுகுஞ் சத்தி
வீட்டைஅருள் சிவன்மூர்த்தி மானுகிச் சத்தி
மேலாகி நிற்பன்இந்த விளைவறிந்து போற்றே. ௩௦௦

அந்தரியா கந்தன்னை முத்திசா தனமாய்
அறைந்திடுவர் அதுதானும் ஆன்மசுத்தி யாகும்
கந்தமலர் புகையொளிமஞ் சனம்அமுது முதலாக்
கண்டனஎ லாம்மனத்தாற் கருதிக் கொண்டு

---

[1]வேறன்றி. [2]தியானத்தின். [3]அடைந்தருளின். [4]சிவங்கள்.

சிந்தையினிற் பூசித்துச் சிவனைஞா னத்தால்
சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடும்அவ் வொளிபோல மருவிஅர னுளத்தே
வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே. ௩௦௧

*பகிரியாக பூசை*

புறம்பேயும் அரன்கழல்கள் பூசிக்க வேண்டில்
பூமரத்தின் கீழுதிர்ந்த போதுகளுங் கொண்டு
சிறந்தாருஞ் சீர்ச்சிவனை ஞானத்தா லங்குச்
சிந்திக்கும் படிஇங்குச் சிந்தித்துப் போற்றி
அறம்பாவங் கட்குநாம் என்கடவேம் [1]என்றும்
ஆண்டவனைக் கண்டக்கால் அகம்புறமென் றுதே
திறமபாதே பணிசெய்து நிற்கை யன்றோ
சீரடியார் தம்முடைய செய்தி தானே. ௩௦௨

இந்தனத்தின் எரிபாலின் நெய்பழத்தின் இரதம்
எள்ளின்கண் எண்ணெயும்போல் எங்குமுளன் இறைவன்
வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே அருளும்
மலமறுப்போர் ஆன்மாவின் மலரடிஞா னத்தாற்
சிந்தனை[2]செய் தர்ச்சிக்கச் சிவன்உளத்தே தோன்றித்
தீஇரும்பைச் செய்வதுபோற் சீவன் தன்னைப்
பந்தனையை அறுத்துத்தா னுக்கித்தன் னுருவப்
[3]பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்பனிவன்பாலே. ௩௦௩

---

## பயனியல்

## பத்தாஞ் சூத்திரம்

### சிவஞானியர் இலக்கணம்

இவனுலகில் இதமகிதம் செய்த வெல்லாம்
இதமகிதம் இவனுக்குச் செய்தார்பால் இயையும்
அவனிவனாய் நின்றமுறை ஏக னாகி
அரன்பணியின் நின்றிடவும் அகலுங் குற்றம்

---

[1]எங்கும். [2]செய்தர்ச்சிக்கில். [3]பரப்பையெலாங் கொடுபுகுந்து.

சிவனுமஇவன் செய்தியெலாம் என்செய்தி யென்றும்
செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்
பவமகல உடனாகி நின்றுகொள்வன் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே. ௩௦௪

யான்செய்தேன் பிறர்செய்தார் என்னதுயான் என்னும்
இக்கோணை ஞானஎரி யால்வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிடஅத் தத்துவன்தான் நேரே
தனையளித்து முன்நிற்கும் வினையொளித்திட் டோடும
நான்செய்தேன் எனுமவர்க்குத் தானங் கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்மம்
ஊன்செய்யா ஞானந்தான் உதிப்பினல்லால்
ஒருவருக்கும யானெனதிங் கொழியா தன்றே. ௩௦௫

இந்திரியம் எனைப்பற்றி நின்றேஎன் வசத்தின்
இசையாதே தன்வசத்தே எனையீர்ப்ப திவற்றைத்
தந்தவன்ற னுணைவழி நின்றிடலால் என்றும்
தானறிந்திட் டிவற்றினொடுந் தனையுடையான் தாள்கள்
வந்தனைசெய் திவற்றின்வலி அருளினால் வாட்டி
வாட்டமின்றி இருந்திடவும வருஞ்செயல்க ளுண்டேல்
முந்தனுடைச் செயலென்று முடித்தொழுக வினைகள்
மூளாஅங் காளாகி மீளா [1]னன்றே. ௩௦௬

சலமிலனாய் ஞானத்தால் தனையடைந்தார் தம்மைத்
தானாக்கித் தலைவன்அவர் தாஞ்செய்வினை தன்னால்
நலமுடனே பிறர்செய்வினை யூட்டியொழிப் பானாய்
நணுகாமல் வினையவரை நாடிக் காப்பன்
உலகினில்என் செயலெல்லாம் உன்விதியே நீயே
உள்நின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றா யென்றும்
நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்றும்
[2]நினைவார்க்கு வினைகளெல்லாம் நீங்குந் தானே. ௩௦௭

நாடுகளிற் புக்குழன்றும் காடுகளிற் சரித்தும்
நாகமுழை புக்கிருந்தும் தாகமுதல் தவிர்ந்தும்
நீடுபல காலங்கள் நித்தரா யிருந்தும்
நின்மலஞா னத்தையிலார் நிகழ்ந்திடுவர் பிறப்பின்

---

[1] அன்றே. [2] நினைப்பார்க்கு.

ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே
  எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும்இறை ஞானங்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
  குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே இருப்பர். ௩௦௮

அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகும்
  ஔடதமந் திரமுடையார்க் கருவிடங்கள் ஏறா
எங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தாலும் ஞானிக(கு)
  இருவினைகள் சென்றணையா முற்செய்வினை இங்குத்
தங்கிப்போம் பாத்திரமும் குலாலன்வினை தவிர்ந்த
  சக்கரமும் கந்தித்துச் சுழலு மாபோல்
மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கும் எல்லா
  மலங்களும்பின் காயமொடு மாயு மன்றே. ௩௦௯

## பதினோராஞ் சூத்திரம்

### *சீவன்முத்தர் இலக்கணம்*

காயமொழிந் தாற்சுத்த னாகி ஆன்மாக்
  காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்(கு)
ஏயும்உயிர் காட்டிக்கண் டிடுமா போல
  ஈசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவன் இத்தை
ஆயுமறி வுடையனாய் அன்பு செய்ய
  அந்நிலைமை இந்நிலையின் அடைந்தமுறை யாலே
மாயமெலாம் நீங்கிஅரன் மலரடிக்கீ ழிருப்பன்
  மாறாத [1]சிவானுபவம் மருவிக் கொண்டே. ௩௧௦

பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே
  பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
வருஞானம் பலஞானம் அஞ்ஞான விகற்பம்
  வாச்சியவா சகஞானம் வைந்தவத்தின் கலக்கம்
தருஞானம் போகஞா திருஞான ஞேயம்
  தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகும்
திருஞானம் இவையெலாங் கடந்தசிவ ஞானம்
  ஆதலால் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர். ௩௧௧

[1] சுவானுபவம்.

### சிவானுபூதி

அணுதிஉடல் ஒன்றினைவிட் டொன்றுபற்றிக் கன்மால்
ஆயழிந்து வருதலால் அந்த மில்லை
பிணுதியருள் பெற்றவர்கள் நித்தவுரு வத்தைப்
பெற்றிருக்கை முத்தியெனிற் பெறுமபதமே இதுவும்
இறுதுநிலை இதுதானுங் காய முண்டேல்
இருங்கன்ம மாயைமல மெல்லா முண்டாம்
மறுதிதரு முடலாதி காரியத்தால் அணுதி
மலம்அறுக்கும் மருந்தற்ருல் உடன்மாயுங் காணே. ௩௧௨

தெரிவரிய மெய்ஞ்ஞானம் சேர்ந்த வாறே
சிவம்பிரகா சிக்குமிங்கே சீவன்முத்த ஞகும்
உரியமல மௌடதத்தால் தடுப்புண்ட விடமும்
ஒள்ளெரியின் ஒளிமுன்னர் இருளுந் தேற்றின்
வருபரல்சேர் நீர்மருவு கலங்கலுமபோ லாகி
மாயாதே தன்சத்தி மாய்ந்து காயம்
திரியுமள வும்உளதாய்ப் பின்பு காயஞ்
சேராத வகைதானுந் தேயு மன்றே. ௩௧௩

ஆணவந்தான் அணுதிஅந்த மடையா தாகும
அடையின்அந்த ஆன்மாவும் அழியுமெனிற் செம்பிற்
காண லுறுங் களிம்பிரத குளிகைபரி சிக்கக்
கழியுஞ்செம் புருநிற்கக் கண்டோ மன்றே
தாணுவின்தன் கழலணையத் தவிரும்மலந் தவிர்ந்தால்
தான்சுத்த னுயிருக்கை முத்திஅரன் தாளைப்
பூணவேண் டுவதொன்று மில்லையெனின் அருக்கன்
புகுதஇருள் போம்அடியிற் பொருந்தமலம் போமே. ௩௧௪

நெல்லினுக்குத் தவிடுமிகள் [1]அணுதி யாயே
நெல்லைவிட்டு [2]நீங்கும்வகை நின்றநிலை நிகழ்த்தீர்
சொல்லியிடில் துகளற்ற அரிசியின்பா லில்லை
தொக்கிருந்து மற்றொருநெல் தோன்றி டாவாம
மெல்லஇவை விடுமறவே இவைபோல அணுவை
மேவுமல முடல்கன்மம் அணுதிவிட்டே நீங்கும்
நல்லசிவ முத்தியின்கட் பெத்தான் மாவை
நணுகிநிற்கு மாதலினுல் நாசமுமின் ருமே. ௩௧௫

---

[1] அநாதியாயும். [2] நீங்கியவை.

**சுத்தாத்துவிதம்**

எவ்விடத்தும் இறையடியை இன்றியமைந் தொன்றை
அறிந்தியற்றி யிடாஉயிர்கள் [1]இறைவன் றானும்
செவ்விதினின் உளம்புகுந்து செய்தியெலாம் உணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்
இவ்வுயிர்கள் தோற்றும்போ தவனையின்றித் தோற்றா
இவற்றினுக்கம் முதலெழுத்துக் [2]கெல்லாமாய் நிற்கும
அவ்வுயிர்போல் நின்றிடுவன் ஆத லால்நாம
அரனடியை அகன்றுநிற்ப தெங்கே யாமே. ௩௧௬

எங்குந்தான் நிறைந்துசிவன் நின்றா னாகில்
எல்லாருங் காணவே வேண்டுந்தா னென்னில்
இங்குந்தான் அந்தகருக் கிரவிஇரு ளாகும்
ஈசனருட் கண்ணில்லார்க் கொளியாயே யிருளாம்
பங்கந்தா னெழும்பதுமம் பக்குவத்தை யடையப்
பரிதிஅலர்த் திடுவதுபோல் பருவஞ்சே ருயிர்க்குத்
துங்கஅரன் ஞானக்கண் கொடுத்தருளி னாலே
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே. ௩௧௭

சென்றணையும் நிழல்போலச் சிவன்நிற்ப னென்னில
சென்றணையும் அவன்முதலி சிவத்தைஅணை தொன்றாய்
நின்றதுயிர் [3]கெட்டடென்னில் கெட்டதணை வின்றாம்
நின்றதேற் கேடில்லை அணைந்துகெட்ட தென்னில
பொன்றினதேன் முத்தியினைப் பெற்றவரார் புகல்நீ
பொன்றுகையே முத்தியெனில் புருடன்நித்த னன்றாம
ஒன்றியிடு நீரொடுநீர் சேர்ந்தாற்போல் என்னின்
ஒருபொருளாம் அதிபதியோ டுயிர்பொருளொன் றன்றே.

செம்பிரத குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச்
செம்பொனுடன் சேரும்மலஞ் சிதைந்தாற் சீவன்
நம்பனுடன் கூடுமெனிற் பொன்போ லல்லன்
நற்குளிகை போலஅரன் [4]நணுகுமலம் போக்கி

[1]ஈசன். [2]கெல்லாம். [3]கெட்டதெனில். [4]நணுகி.

அம்பொனடிக் கீழ்வைப்பன் அருங்களங்க மறுக்கும்
அக்குளிகை [1]தானும்பொன் ஞகா தாகும்
உம்பர்பிரான் [2]உற்பத்தி யாதிகளுக் குரியன்
உயிர்தானுஞ் [3]சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே.

சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்ரு மென்னில்
சிவனருட்சித் திவன்அருளேச் சேருஞ்சித் தவன்ருன்
[4]பவங்கேடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்
படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்ருன்
அவன்ருனே அறியுஞ்சித் தாதலினு லிரண்டும்
அணேந்தாலு மொன்ருகா தநன்னியமா யிருக்கும்
இவன்ருனும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி
[5]இதுஅசித்தென் றிடில்அவனுக் கிவனும்அசித் தாமே.

இருமபைக்காந் தம்வலித்தாற் போல்இயைந்தங் குயிரை
எரியிரும்பைச் செய்வதுபோல் இவனேத்தா ஞக்கி
அரும்பித்திந் தனத்தைஅன லழிப்பதுபோல் மலத்தை
[6]அறுத்தமலன் அப்பணேந்த உப்பேபோ லணேந்து
விருமபிப்பொன் னிணேக்குளிகை ஒளிப்பதுபோல்அடக்கி
[7]மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா ஞகிக்
கரும்பைத்தே னைப்பாலேக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பன்அந்த முத்தியினிற் கலந்தே. ௩உக

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

### குருலிங்க சங்கம வழிபாடு

செங்கமலத் தாளிணேகள் சேர லொட்டாத்
திரிமலங்கள் அறுத்தீசன் நேசரொடுஞ் செறிந்திட்(டு)
அங்கவர்தந் திருவேடம் ஆலயங்க ளெல்லாம்
அரனெனவே தொழுதிறைஞ்சி ஆடிப் பாடி

[1]யதுவும்பொன். [2]உற்பத்தி யாதிசெயற் குரியன். [3]சுவானுபவம். [4]பவங்கெடு. [5]இதுவும் அசித்தெனில். [6]அழித்தமலன். [7]மேலளித்துத்.

எங்குமியாம் ஒருவர்க்கும் எளியோ மல்லோம்
யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித்
திங்கள்முடி யார்அடியார் அடியோ மென்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே. ௩௨௨

சங்கம வழிபாடு

ஈசனுக்கன் பில்லார் அடியவர்க்கன் பில்லார்
எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும்அன் பில்லார்
பேசுவதென் அறிவில்லாப் பிணங்களைநாம் இணங்கிற்
[1]பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ
ஆசையொடும் அரனடியார் அடியாரை அடைந்திட்(டு)
அவர்கருமம் உன்கரும மாகச் செய்து
கூசிமொழிந் தருள்ஞானக் குறியில் நின்று
கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே. ௩௨௩

அறிவரியான் தனையறிய ஆக்கை யாக்கி
அங்கங்கே உயிர்க்குயிராய் அறிவுகொடுத் தருளால்
செறிதலினால் திருவேடம் சிவனுருவே யாகும்
சிவோகம்பா விக்கும்அத்தாற் சிவனு மாவர்
குறியதனால் இதயத்தே அரனைக் கூடும்
கொள்கையினால் [2]அரனவர் குறியொடுதாம் அழியும்
நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவ ரென்றால்
நேசத்தால் [3]தொழுதிடுநீ பாசத்தார் விடவே. ௩௨௪

லிங்க வழிபாடு

திருக்கோயி லுள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கே
உருக்கோலி மந்திரத்தா லேநினையும் அவர்க்கும்
[4]உளனெங்கும் இலன்இங்கும் உளனென் பார்க்கும்
[5]இருப்பாய வடிவாகி இந்தனத்தின் எரிபோல்
மந்திரத்தின் [6]வந்துதிப்பன் இருஞ்சுரபிக் கெங்கும்
உருக்காண வொண்ணாத பால்முலைப்பால் விம்மி
ஒழுகுவது போல்வெளிப்பட் டருளுவன்அன் பர்க்கே.

---

[1]பிறப்பினொடும் இறப்பினொடும். [2]அவனவர். [3]தொழு தெழுமின் பாசத்தாள். [4]உளனங்கும் எங்குமிலன் இங்குளனென் பார்க்கு. [5]விருப்பாய. [6]வந்துதித்து மிகுஞ்சுரபிக்கு.

## குரு வழிபாடு

ஞானயோ கக்கிரியா சரியை நாலும்
நாதன்தன் பணிஞானி நாலினுக்கும் உரியன்
ஊனமிலா யோகமுதல் மூன்றினுக்கும் உரியன்
யோகிகிரி யாவான்தான் ஒண்கிரியை யாதி
ஆனஇரண் டினுக்குரியன் சரியையினில் நின்றோன்
அச்சரியைக் கேஉரியன் ஆதலினால் யார்க்கும
ஈனமிலா ஞானகுரு வேகுருவும் இவனே
ஈசனிவன் தான்என்றும் இறைஞ்சி ஏத்தே. ௩௨௬

மந்திரத்தால் மருந்துகளால் வாய்த்தவியோ கத்தால
மணிஇரத குளிகையினால் மற்றும் மற்றும்
தந்திரத்தே [1]சொன்னமுறை செய்ய வேத
சகலகலை ஞானங்கள் திரிகால ஞானம்
அந்தமிலா அணிமாதி ஞானங்க ளெல்லாம்
அடைந்திடும்ஆ சான்அருளால் அடிசேர் ஞானம்
வந்திடுமற் றொன்றாலும் வாரா தாகும்
மற்றவையும் அவனருளால் மருவு மன்றே. ௩௨௭

பரம்பிரமம இவனென்றும் பரசிவன்தா னென்றும்
பரஞானம இவனென்றும் பராபரன்தா னென்றும்
அரன்தருஞ்சீர் நிலையெல்லாம் இவனே யென்றும்
அருட்குருவை வழிபடவே அவனிவன்தா னாயே
இரங்கியவா ரணம்ஆமை மீன்அண்டம் சினையை
இயல்பினொடும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதா மாக்குமாபோல் சிவமே யாக்கும்
பரிசித்தும் சிந்தித்தும் பார்த்தும் தானே. ௩௨௮



---

[1]சொன்னபடி.

சிவமயம

திருச்சிற்றம்பலம்

# அருணந்தி சிவாசாரியார்

அருளிச்செய்த

# 5. இருபாவிருபது

கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி [லூர்
மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும் - வெண்ணெய்நல்
மெய்கண்டான் என்றொருகால் மேவுவரால் வேறின்மை
கைகண்டார் உள்ளத்துக் கண். க

கண்ணகன் ஞாலத்துக் கதிரவன் தானென
வெண்ணெய்த் தோன்றிய மெய்கண்ட தேவ
[1]காரார் கிரகக் கலியாழ் வேலைநின்
பேரா இன்பத் திருத்திய பெரும
5 வினவ லானு துடையேன் எனதுளம்
நீஙகா நிலைமை ஊங்கும் உளையால்
அறிவின் மைமலம் பிறிவின் மையெனின்
ஓராலினை யுணர்த்தும் விராய்நின் றனையேல்
திப்பியம் அந்தோ பொய்ப்பகை யாகாய்
10 சுத்தன் அமலன் சோதி நாயகன்
முத்தன் [2]பரம்பரன் எனும்பெயர் முடியா
வேறுநின் றுணர்த்தின் வியாபக மின்றாய்ப்
பேறும் [3]இன்றாம் எமக்கெம் பெரும
இருநிலந் தீநீர் இயமானன் காலெனும்
15 பெருநிலைத் தாண்டவம பெருமாற் கிலாதலின்
வேறோ உடனோ விளம்பல வேண்டும்
சிறி யருளல் சிறுமை யுடைத்தால்
அறியாது கூறினை அபக்குவ பக்குவக்

[1]காராகிருகக். [2]பராபரன். [3]இன்றாகும்.

குறிபார்த தருளினம் குருமுத லாயெனின்
20 அபக்குவ மருளினும் அறியேன் மிகத்தகும்
பக்குவம் [1]வேண்டிற் பயனிலை நின்னால்
பக்குவ மதனாற் பயன்நீ வரினே
நின்னைப் பருவம் நிகழ்த்தா தன்றோ
தன்னைப் பாரிலி யென்பதுந் தகுமே
25 மும்மலஞ் சடமனு மூப்பிள மையின்நீ
நின்மலன் பருவம் நிகழ்த்திய தார்க்கோ
உணர்வெழு நீக்கத்தை ஓதிய தெனினே
இணையிலி யாயினை என்பதை அறியேன்
யானே நீக்கினுந் தானே நீங்கினும்
30 கோனே வேண்டா கூறல் வேண்டும்
காண்பார் யார்கொல் காட்டாக் காலெனும
மாண்புரை உணர்ந்திலை மன்ற பாண்டியன்
கேட்பக் கிளக்குமெய்ஞ் ஞானத்தின்
ஆட்பா லவர்க்கருள் என்பதை யறியே.

அறிவறி யாமை யிரண்டும் அடியேன்
செறிதலான் மெய்கண்ட தேவே - அறிவோ
அறியேனோ யாதென்று கூறுகேன் ஆய்ந்து
குறிமாறு கொள்ளாமற் கூறு.

கூறிய மூன்று மலத்தின் குணக்குறி
வேறு கிளக்கின் விகற்பங் கற்பங்
குரோதம மோகங் கொலையஞர் மதநகை
[2]விராயெண் குணனுமா ணவமென விளமபினை
5 அஞ்ஞா னமபொய் அயர்வே மோகம்
[3]பைசால சூனியம் மாச்சரி யமபய
[4]மாவேழ் குணனும் மாயைக் கருளினை
இருத்தலுங கிடத்தலும் இருவினை யியற்றலும்
விடுத்தலும் பரநிந்தை மேவலென் றெடுத்த
10 அறுவகைக் குணனுங் கருமத் தருளினை
ஆங்கவை தானும நீங்காது நின்று
தன்வழிச் செலுத்தித் தானே தானாய்

[1]வேண்டிப. [2]விராவெண குணமா ணவமென. [3]பைசா சூனியம். [4]மாயவேழ்.

என்வழி யென்பதொன் றின்று மன்ன
ஊரும் பேரும் உருவுங் கொண்டென்
15 ஊரும் பேரும் உருவுங் கெடுத்த
பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதியிற்
சைவ சிகாமணி மெய்யர் மெய்ய
மும்மலஞ் சடமென மொழிந்தனை அம்ம
மாறுகோள் கூறல் போலும் தேறுஞ்
20 சடஞ்செய லதனைச் சார்ந்திடு மெனினே
கடம்பட [1]மதனுட் கண்டிலம் விடம்படும
ஊன்திரள் போன்று தாயில் தோன்றி
யணைந்தாங் ககறல் வேண்டும் குணங்களும்
பன்மையின் றுகும் எம்மை[2]வந் தணைதரத்
25 தானோ மாட்டா தியானோ செய்கிலன்
நீயோ செய்யாய் நின்மல னுயிட்டு
இயல்பெனிற் போகா தென்றும் மயல்கெடப்
பந்தம் வந்த வாறிங்கு
அந்த மாதி யில்லாய் அருளே. ௪

அருள்முன்பு நில்லா தடியேற்குக் கண்ணின்(று)
இருள்கண்ட வாறென்கொல் எந்தாய் - [3]மருள்கொண்ட
மாலையா வெண்ணெய்வாழ் மன்னவா என்னுடைய
மாலையா [4]மாற்ற மதி. ரு

மதிநுதல் பாக னுகிக் கதிதர
வெண்ணெய்த் தோன்றி நண்ணியுள் புகுந்தென்
உளம்வெளி செய்துன் அளவில் காட்சி
காட்டிஎற் காட்டினை [5]எனினும் நாட்டிஎன்
5 உண்மையும் பெருமையும் நுவலின் அண்ணல்
பாதாள சத்தி பரியந்த [6]மாக
ஓதி [7]யுணர்ந்த [8]நானே ஏக
[9]முழுத்தும்நின் றனனே முதல்வ [9]முழுத்தும்
[10]புலன்கடைப் பூழை நுழைந்தனன் கலங்கி
10 ஆங்கைந் தவத்தையும் அடைந்தனன் நீங்கிப்

---

[1]மதனிற் கண்டில. [2]வந்தணையத். [3]சுருள்கொண்ட.
[4]மாற்று. [5]யேனும், எனினே. [6]மாகவே. [7]உணர்ந்து. [8]நாதனே.
[9]முழுதும். [10]புவனப்புலன்கடை.

போக்கு வரவு புரிந்தனன் தூக்கி
எவ்விடத் துண்மையும் இவ்விடத் [1]தார்தலுஞ்
செல்லிடத் தெய்தலுந் தெரித்த [2]மூன்றினுள்
ஒன்றெனக் கருளல் வேண்டும் என்றும்
15 இல்ல திலதாய் உள்ள துளதெனுஞ்
சொல்லே சொல்லாய்ச் சொல்லுங் காலைச்
சிறுத்தலும் பெருத்தலு மிலவே நிறுத்தி
யானை யெறும்பி னனது போலெனின்
[3]ஞான மன்றவை காய வாழ்க்கை
20 மற்றவை யடைந்தன வுளவெனின் அற்றன்று
விட்ட குறையின் அறிந்து தொன்று
தொட்டுவந் தனவென வேண்டும் நட்ட
பெரியதிற் பெருமையுஞ் [4]சிறியதிற் சிறுமையும்
உரியது நினக்கே உண்மை பெரியோய்
25 எனக்கின் றருகும என்றும்
மனக்கினி யாயினி மற்றது மொழியே. சா

மொழிந்த அவத்தை முதலடியேன் நின்றுங்(கு)
ஒழிந்தன நான்கும் உணர - இழிந்தறிந்(து)
ஏறிற்றிங் கில்லை எழிலவெண்ணெய் மெய்த்தேவே
தேறிற்றென் கொண்டு தெரித்து. எ

தெரித்ததென் கொண்டெனை உருத்திர பசுபதி
செடிய னேனையும் அடிமை செய்யப்
படிவங் கொண்டு [5]வடிவுகாட் டில்லாப்
பெண்ணை யாளும் வெண்ணெய் மெய்ய
5 அவத்தையிற் றெரித்தன னயின் அவத்தை
[6]தெரிந்தாங் கிரித்தலு மிலனே திருத்துங்
காலம் முதலிய கருவி யாயின்
மாலும் பிரமனும வந்தெனை யடையார்
ஓதுங் காலை ஒன்றையொன் றுணரா
10 சேதன மன்றவை பேதைச் [7]செயலுமிச்
[8]சேதன வாறுற் செயலகொள வேண்டும்நற்

[1](து) ஆதலும். [2]மூன்றினும். [3]ஞானமின்றிவை. [4]சிறுமையிற். [5]முடிவு காட்டிலாப். [6]தெரித்தாங் கிருத்தலும். [7]செயலிச், செயலாற். [8]சேதநமாறுற்.

போத மவற்றைப் [1]புணர்வதை யறியேன்
கருவித் திரளினுங் காண்பதோ ரொன்றும்
[2]ஒருவுத லறியேன் உணர்வில ளுதலின்
15 நிற்கொடு கண்டன னுயின் எற்குக்
கருவி யாயினை பெருமையு மிலவே
யானே பிரமம் கோனே வேண்டா
இன்னுங் கேண்மோ மன்ன நின்னின்
முன்ன மென்றன் உணர்வில ளுதலின
20 என்னைக் காண்பினுங் காண்பல [3]காணுது
உன்னைக் காண்பினுங் காண்பல உன்னேடு
ஒருங்கு காண்பினுங் காண்பல அருந்துணை
கண்ட வாறே தெனது கண்ணே
அண்ட வாண அருட்பெருங் கடலே. அ

கடலமுதே வெண்ணெய்க் கரும்பேயென் கண்ணே
உடலகத்து மூலத் தொடுங்கச் - சடலக்
கருவியா தாங்குணர்த்தக் காண்பதுதான் என்னை
மருவியா தென்றுரைக்க மன். கூ

மன்னிய கன்மச் சமத்திடை மலங்களை
அன்னிய மாக்கி அருள்வழி யதனுல்
என்னுள் புகுந்தனை யெனினே [4]முன்னைத்
திரிமலந் தீர்த்த தேசிக நின்னேடு
5 ஒருவுத லின்றி யுடந்தையே யாகும்
பெருநிலை யாகல் வேண்டும் மருவிடு
மும்மல மதனுல் [5]எம்முள்நின் றிலையெனின்
அம்மலத் திரிவுஞ் செம்மலர்த் தாள்நிழற்
சேர்தலு மிலவாய்ச் சார்பவை பற்றிப்
10 [6]பெயர்வில ளுகும பெரும தீர்வின்று
அமைந்த கருமத் தியைந்தவை யல்லது
சமைந்தன விலவெனச் சாற்றின் அமைந்த
மாயேயங் கன்ம மாமல மூன்றும்
மாயா தாகவே யார்ச்சந மாயையின்
15 உற்பவந் தீரா வொழுகுமொன் [7]றுென்று

[1]புணர்வகை. [2]ஒருவுவதறியேன். [3]காணு. [4]முன்னே. [5]எம்முன். [6]யொழிவில ளுகும். [7]றுென்றின்.

நிற்சம மாயி னல்லது நிற்பெறல்
இல்லென மொழிந்த தொல்லறந் தனக்கும்
ஏயா தாகும் நாயே னுளத்து
நின்றனை யென்பனோ நின்றிலை யென்பனோ
20 பொன்றிய பொன்றிற் றிலமல மென்பனோ
ஒன்றினை உரைத்தருள் மன்ற குன்றாப்
பெண்ணைப் புனல்வயல் வெண்ணெய்க் கதிபதி
கைகண் தலைவாய் கால்செவி மூக்குயர்
மெய்கொண் டென்வினை வேரறப் பறித்த
25 மெய்கண்ட [1]தேவ வினையிலி
மைகொண்ட கண்ட வழுவிலென் மதியே. க௦

மதிநின்பா லிந்த மலத்தின்பால் நிற்க
விதியென்கொல் வெண்ணெய்வாழ் மெய்ய - பதிநின்பால்
வந்தா லிதின்வரத்தில் வந்திரண்டும் பற்றுகிலேன்
எந்தாய் இரண்டாமா [2]றென். கக

எண்டிசை விளங்க இருட்படாம் போக்கி
முண்டக மலர்த்தி மூதறி வருளும்
மேதினி யுதய மெய்கண்ட தேவ
கோதில் அமுத குணப்பெருங் குன்ற
5 என்னி னூர்தலும் அகறலும் என்னைகொல்
[3]உன்னிற் றுன்னி யுறைவிடிற் பெயர்குவை
யென்னு மதுவே நின்னியல் பெனினே
வியங்கோ ளாளனு மாகி இயங்கலு
முண்டெனப் படுவை எண்தோள் முக்கண்
10 யாங்கணும் பிரியா தோங்குநின் நிலையின்
யான்வந் தணைந்து மீள்குவ னாயின்
ஆற்றுத்துய ருற்றோர் அணிநிழல் நசைஇ
வீற்று[4]வீற் றெழுதர வேண்டலும் வெறுத்தலும்
இன்றச் சாயைக்கு நன்றுமன் னியல்பே
15 [5]அனையை யாகுவை நினைவருங் காலை
இந்நிலை யதனின் ஏழையேற் கிரங்கி
நின்னை வெளிப்படுத் தொளிப்பை [6]நீயேல்

[1]தேவே. [2](று)எண். [3]உன்னிலுன்னி. [4]வீற்றிழிதர.
[5]எனையை. [6]நீயெனில்.

[1]அருள்மா றுருகும் பெருமஃஅஃ தன்றியும்
நிற்பெற் றவர்க்கும் உற்பவ முண்டெனுஞ்
20 சொற்பெறும் அஃதித் தொல்லுல கில்லை
[2]அவ்வவை யமைவுஞ் [3]சால்பும் மயர்வறச்
சொல்லிற் சொல்லெதிர் சொல்லாச்
சொல்லே சொல்லுக சொல்லிறந் தோயே. கஉ

இறந்தோய் கரணங்க ளெல்லாம் எனக்குச்
சிறந்தோ யெனினுமெய்த் தேவே - பிறந்துடனுங்
காயங் கொளவுங் கொளாமலும் கண்டதுநீ
ஆயன்கொல் பாதவத் தற்று. கங

அற்றதென் பாசம் உற்றதுன் கழலே
அருட்டுறை யுறையும் பொருட்சுவை நாத
வேறென் றிருந்த என்னை யான்பெற
வேறின்மை கண்ட மெய்கண்ட [4]தேவ
5 இருவினை யென்ப தென்னைகொல் அருளிய
மனமே காயம் வாக்கெனும் மூன்றின்
இதமே அகிதம் எனுமிவை யாயில்
கணத்திடை யழியுந் [5]தினைத்துணை யாகா
காரணஞ் சடமதன் காரியம் அஃதால்
10 ஆரணங் காம்வழி யடியேற் கென்னைகொல்
செயலென தாயினுஞ் செயலே [6]வாராது
இயமன் செய்தி யிதற்கெனின் [7]அமைவும்
பின்னையின் றுருகும் அன்னது மிங்குச்
செய்திக் குள்ள செயலவை அருத்தின்
15 மையல்தீர் இயமற்கு வழக்கிலை மன்ன
ஒருவரே யமையும் ஒருவா ஒருவற்கு
இருவரும் வேண்டா இறைவனும் நின்றனை
நின்னது கருணை சொல்லள வின்றே
அமைத்தது துய்ப்பின் எமக்கணை வின்றும்
20 உள்ளது போகா தில்லது வாராது
உள்ளதே யுள்ள தெனுமுரை யதனாற்
கொள்ளும் வகையாற் கொளுத்திடு மாயின்

---

[1]நின்னருண் மாறும். [2]அவ்வவ்வமைவும். [3]சார்வும், சார்பும். [4]தேவே. [5]தினைத்தனை. [6]வாரா. [7]அமையும்.

வள்ளன் மையெலாம் [1]உள்ளிட வமையும்
ஈய வேண்டு மெனும்விதி யின்றும்
25 ஆயினும் என்னை அருந்துயர்ப் [2]படுத்த
நாயி னேற்கு நன்றுமன் மாயக்
கருமமுங் கரும பந்தமும்
தெருள [3]அருளுஞ் சிவபெரு மானே. கச

மானமருஞ் செங்கை மதில்வெண்ணெய் வாழ்மன்ன
போனவினை தானே பொருந்துமோ - யானதனில்
ஆவனே ஆக்காய் அமலனும் நின்னருள்தான்
தேவனே யாதுக்கோ தேர். கரு

தேரா துரைப்பன் தெருமர லுளத்தொடு
பேரா தருளுதல் பெரியோர் கடனே
நின்னைக் கலப்ப தென்[4]னுண் மையெனின்
நின்னது நேர்மை சொல்மனத் தின்றே
5 எழுவகைத் தாதுவின் [5]ஏழ்துளை யிரண்டும்
பெருமுழைக் குரம்பையிற் பெய்தகத் தடக்கி
நீக்கி என்றனைப் போக்கற நிறுத்தி
இச்சை முதலிய எழுப்பி நடத்திடும்
விச்சை சாலவும் வியப்பது நிற்க
10 வாக்கும் மனமும் போக்குள தனுவும்
சொல்லும் நினைவும் செய்யுஞ் செயலும்
நல்லவுந் தீயவும் எல்லா மறிந்து
முறைபிற ழாமற் குறைவுநிறை வின்றாய்க்
காலமுந் தேசமும் மாலற [6]வகுத்து
15 [7]நடுவுநின் றருத்தலின் [8]நடுவனு குதியே
சான்றோர் செய்தி மான்றிருப் பின்றே
சாலார் செயலே மாலா குவதே
அத்துவா மெத்தி அடங்கா வினைகளுஞ்
சுத்திசெய் தனையே ஒத்தகன் மத்திடை
20 நீங்கின என்னை [9]ஊங்கூழ் வினைகளும்
ஆங்கவை அருத்துவ [10]தாரைகொல் அதனாற்
கரும மருத்துங் கடனது இன்றாம்

---

[1]உன்னிட. [2]படுத்தல், படுத்துதல். [3]அருளு. [4]உண்மையே. [5]எழுதுளை. [6]வகுத்துள். [7]நடுவுள் நின்று. [8]நடுவனுகுதியேல். [9]ஆங்கூழ். [10]தார்கொல், தாசொல்.

தருமம் புரத்தல் பெருமைய தன்றே
கண்ணினுள் மணிய கருத்தினுட் கருத்த
25 வெண்ணெய் வேந்த மெய்கண்ட தேவ
இடர்ப்படு குரமபையுள் இருத்தித்
துடைப்பதில் லாஅருள் தோன்றிடச் சொல்லே. கசு

சொற்றொழும்பு கொள்ளநீ சூழ்ந்ததுவும் [1]நிற்செயல்கள்
மற்றவர்கள் நின்நோக்கின் மாய்ந்த[2]வுயிர்க் - குற்றம்
ஒளித்தியாங் கைய உயர்வெண்ணெய் நல்லூர்க்
குளித்தமதுக் கொன்றையங் கோ. கஎ

கோலங் கொண்ட வாறுண ராதே
ஞாலங் காவலன் யானெனக் கொளீஇப்
பொய்யை மெய்யெனப் புகன்று வையத்து
ஓடாப் பூட்கை நாடி நாடா
5 என்னுட் கரந்தென் பின்வந் தருளி
என்னையுந் தன்னையும் அறிவின் [3]றியற்றி
என்னது யானெனும அகந்தையுங் கண்டு
யாவர் [4]யாவையும் யாங்கணுஞ் சென்று
புக்குழிப் புக்குப் பெயர்த்துழிப் பெயர்ந்து
10 மிக்க போகம் விதியால் [5]விளைத்திங்கு
எற்பணி யாளாய் எனைப்பிரி யாதே
ஓடி மீள்கென ஆடல் பார்த்திட்டு
என்வழி நின்றனன் எந்தை அன்றே
அருள்மிக வுடைமையின் அருட்டுறை வந்து
15 பொருள்மிக அருள்தலும் பொய்ப்பகை யாதலும்
கைகண்டு கொள்ளெனக் கடலுல கறிய
மெய்கண்ட தேவன் எனப்பெயர் விரீஇத்
தன்னுட் கரந்து தான்முன் னாகித்
தன்னதுந் [6]தானுமாய் என்னையின் றாக்கித்
20 தன்னையும் என்னையுந தந்து
தனதுசெய் யாமையும [7]எனதுசெய லின்மையும்
எம்மான் காட்டி யெய்தல்
அம்மா எனக்கே அதிசயந் தருமே. கஅ

---

[1]நற்செயல் காண். [2]உயிர்க் குற்றங்கு. [3](று) இயற்றும். [4]யாவையின். [5]விளைத்து, விளைத்திட்டு. [6]தானுமாகி. [7]என்செயல்.

தருமா தருமத் தலைநின்றும் வேனைக்
கருமா கடல்விடமுண் கண்டப் - பெருமான்
திருவெண்ணெய் நல்லூர்ச் சுவேத வனத்தான்
உருவென்ன வந்தெடுத்தான் உற்று. ௧௯

உற்றவர் பெற்றவர் அற்றவர் முற்றும்
அற்றவர்க் கற்றவன் அல்லவர்க் கல்லவன்
அந்தம் ஆதி இல்லவன் வந்து
குரக்கு மனத்துக் கொடியேன் பரக்கும்
5 பரப்பைக் குவித்து நிறுத்திப் பிடித்திட்டு
இருள்வெளி யாகும் மருளினை யறுத்து
வந்து புகுதலும் சென்று நீங்கலும்
இன்றி ஒன்றாய் நின்றஅந் நிலையில்
ஒன்று காமல இரண்டா காமல்
10 ஒன்று மிரண்டும இன்று காமல்
தன்னது பெருமை தாக்கா னாயினும்
என்னது பெருமை யெல்லா மெய்தித்
தன்னை எனக்குத் தருவதை யன்றியும்
என்னையும் [1]எனக்கே தந்து தன்னது
15 பேரா னந்தப் பெருங்கட லதனுள்
ஆரா இன்ப மளித்துத் தீரா
உள்ளும் புறம்பும ஒழிவின்றி நின்ற
வள்ளன்மை காட்டி மலரடி யருளிய
மன்னன் எங்கோன் வார்புனற் பெண்ணை
20 வெண்ணெய் காவலன் மெய்கண்ட தேவன்
அண்ணல் அருளா லயத்தன் [2]நண்ணி
மலமுத லாயின மாய்க்கும்
உலக உயிர்க்கெல லாமொரு கண்ணே. ௨0



[1]எனக்குத். [2]நண்ணிய.

சிவமயம

திருச்சிற்றம்பலம்

## திருவதிகை - மனவாசகங்கடந்தார்

அருளிச்செய்த

# 6. உண்மை விளக்கம்

காப்பு

வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள்வழுவா
உண்மை விளக்கம் உரைசெய்யத் - திண்மதம்சேர்
அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் [1]புந்தியுள்வைப் பாம்.

## நூல்

பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதானந் தப்பொருளாம்
மெய்காட்டும் மெய்கண்டாய் விண்ணப்பம் - பொய்காட்டா
மெய்யா திருவெண்ணெய் வித்தகா சுத்தவிறு
ஐயாநீ தான்கேட் டருள். க

ஆறாறு தத்துவமே தாணவமே தன்றேதான்
மாறா வினையேது [2]மற்றிவற்றின் - வேறாகா
நானேது நீயேது நாதன்நடம் [3]அஞ்செழுத்துத்
தானேது தேசிகனே சாற்று. உ

உள்ளபடி இத்தை உரைக்கக்கேள் உன்றனக்கு
வள்ளல்அரு ளால்அன்று வாய்[4]மலர்ந்து - தெள்ளியசீர்
ஆகமங்கள் சொன்ன அடைவிலே ஆனந்த
யோகம் நிகழ்புதலவா உற்று. ந

[1]புந்தியில். [2]மற்றிவற்றுள். [3]அஞ்செழுத்தும். [4]மலர்ந்த.

## ஆன்ம தத்துவம்

நாற்கோணம் பூமிபுனல் நண்ணுமதி யின்பாதி
ஏற்கும்அனல் முக்கோணம் எப்போதும் - ஆர்க்கும்
அறுகோணம் கால்வட்டம் ஆகாயம் ஆன்மா
உறுகாய மாம்இவற்றால் உற்று. ச

பொன்பார் புனல்வெண்மை பொங்கும் அனல்சிவப்பு
வன்கால் கருமைவளர் வான்தூமம் - என்பார்
எழுத்து லவரயஅப் [1]பாராதிக் கென்றும்
அழுத்தமதாய் நிற்கும் அது. ரு

குறிகுலிசம் கோகனதம் கொள்சுவத்தி குன்று
அறுபுள்ளி ஆரமுத விந்துப் - [2]பிறிவின்றி
மண்புனல்தீக் கால்வானம் மன்னும் அடைவேயென்(று)
ஒண்புதல்வா ஆகமம்ஓ தும். சு

பாராதி ஐந்துக்கும் பன்னும்அதி தெய்வங்கள்
ஆரார் அயனாதி ஐவராம் - ஓரோர்
தொழிலவர்க்குச் சொல்லுங்கால் தோற்றமுதல் ஐந்தும
பழுதறவே பண்ணுவர்காண் பார். எ

படைப்பன் அயன்அளிப்பன் பங்கயக்கண் மாயன்
துடைப்பன் உருத்திரனும சொல்லில் - [3]திடப்பெறவே
என்றுந் திரோபவிப்பர் ஈசர் சதாசிவரும்
அன்றே அனுக்கிரக ராம். அ

மண்கடின மாய்த்தரிக்கும் வாரிகுளிர்ந் தேபதமாம்
ஒண்கனல்சுட் டொன்றுவிக்கும் ஓவாமல் - வண்கால்
பரந்துசலித் துத்திரட்டும் பார்க்கிலஆ காயம்
[4]நிரந்தரமாய் நிற்கும் [5]நிறைந்து. கூ

உள்ளபடி மாபூதம் ஓதினோம் உன்றனக்குக்
கள்ளமிகும் ஐம்புலனும் கட்டுரைக்கில் - மெள்ளவே
ஓசை பரிசம் உருவம் சுவைநாற்றம்
ஆசைதரும் ஐம்புலனே யாம். ௧௦

---

[1]பாராதியாதிக் கழுத்தடியாய். [2]பிறிவிலா. [3]இடம்பெறவே.
[4]இரந்தரமாய். [5]இடம்.

ஞானேந் திரியங்கள் நன்று உரைக்கக்கேள்
[1]ஊன மிகுபூதம் உற்றிடமா - ஈனமாம்
சத்தாதி யைஅறியும் தானம் செவிதோல்கண்
அத்தாலு மூக்கென் றறி. கக

வானிடமா நின்றுசெவி மன்னும் ஒலியதனை
ஈனமிகுந் தோல்கால் இடமாக - ஊனப்
பரிசம் தனைஅறியும் பார்வையிற்கண் அங்கி
விரவிஉரு வங்காணு மே. கஉ

நன்றாக நீரிடமா நாஇரதந் தான்அறியும்
பொன்று மணம்மூக்குப் பூவிடமா - நின்றறியும்
என்றோதும் [2]அன்றே இறைஆ கமம்இதனை
வென்றார்சென் றார்இன்ப வீடு. கங

கண்ணுதல்நூல் ஓதியிடும் கன்மேந் திரியங்கள்
எண்ணும்வச னாதிக் கிடமாக - நண்ணியிடும்
வாக்குப்பா தம்பாணி மன்னு குதம்உபத்த
மாக்கருதும் நாளு மது. கச

வாக்காகா யம்இடமா வந்துவச னிக்கும்கால்
போக்காரும் காற்றிடமாப் புல்கிஅனல் - ஏற்கும்
இடுங்கை குதம்நீ ரிடமா மலாதி
விடுமபா ரிடம்உபத்தம் விந்து. கரு

அந்தக் கரணம அடைவே உரைக்கக்கேள்
அாந்தமனம் புத்தியுடன் ஆங்காரம் - சிந்தையிவை
பறறியது நிச்சயித்துப் [3]பல்கால் எழுந்திருந்தங்(கு)
உற்றதுசிந் திக்கும் உணர். கசா

ஓதியிடும் நாலாறும் உற்றான்ம தத்துவமென்(று)
ஆதி அருள்நூல் அறையுங்காண் - தீதறவே
வித்தியா தத்துவங்கள் தம்மை விளம்பக்கேள்
உத்தமனே நன்று உனக்கு. கஎ

---

[1]ஊனே. [2]அன்றோ. [3]பார்த்தங் கெழுந்திருந்திங்கு.

### வித்தியா தத்துவம்

காலம் நியதி கருதும் கலைவித்தை
ஏல[1]அரா கம்புருட னேமாயை - மால்அறவே
சொன்னோம் அடைவாகச்சொன்ன இவை தன்னுண்மை
உன்னி [2]உரைக்கும்நாம் உற்று. கஅ

எல்லை பலமபுதுமை எப்போதும் நிச்சயித்தல்
அல்லல் தருங்கிரியை ஆன்மாவுக்(கு) - ஒல்லை
அறிவாசை ஐம்புலனும் ஆரவருங் காலம்
குறியா மயக்கென்று கொள். கசு

### சுத்த தத்துவம்

வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினோம்
சுத்தமாம [3]தத்துவங்கள் சொல்லக்கேள் - நித்தமாம்
சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் [4]சதாசிவம்நற்
சத்திசிவங் காண் அவைகள் தாம. உ0

சுத்தவித்தை ஞானமிகும் தொன்மையாம் ஈசுரந்தான்
அத்தன் தொழில்அதிகம் ஆக்கியிடும் - ஒத்தல்இவை
சாதாக் கியம்என்றும சத்தி சிவம்கிரியை
ஆதார ஞானஉரு வாம. உக

### ஆணவம், கன்மம்

ஆறுறு தத்துவமும் சொன்னோம் அடைவாக
மாறு மலமிரண்டும் வாசொலலக் - [5]கூறில்
அறியாமை ஆணவம்நீ யானசுக துக்கம்
[6]குறியா வினையென்று கொள். உஉ

### ஆன்ம ரூபம்

ஆறுறு தத்துவமும் ஆணவமும் வலவினையும்
மாறு அருளால் வகுத்துரைத்தீர் - வேறாகா
என்னை எனக்கறியக் காட்டீர் இவைகண்டேன்
உன்னரிய தேசிகரே உறறு. உங

---

[1]இராகம். [2]உரைக்க நாம். [3]தத்துவம்நீ. [4]சாதாக்கியம்நற்.
[5]கூறும். [6]குறியாய் மயக்கென்று கொண்டு.

நன்று உரைக்கக்கேள் நல்லசித்தின் முன்அசித்திங்(கு)
ஒன்றாது சித்தசித்தை ஓராது - நின்றிவற்றை
அன்றே பகுத்தறிவ தான்மாவே என்றுமறை
குன்றாமல் ஓதுங் குறித்து. உச

தத்துவங்கள் ஆறாறும் தம்மைத்தாம் என்றறியா
எத்தன்மை என்னில் இயம்பக்கேள் - [1]சுத்தமாம்
ஆறு சுவையும் அறியாது தன்னைத்தான்
கூறில் அவைஇவைபோற் கொள். உரு

ஆறு சுவையும் அருந்தி அவைதம்மை
வேறொருவன் கூறியிடும் மேன்மைபோல் - ஆறாறும்
ஒன்றொன்றா நாடிஉணர்ந் [2]தோதில்அதில் உற்றறிவாய்
நின்றபொருள் தானேகாண் நீ. உசு

சிவரூபம்

குன்றா அருளாலே கூறினீர் என்[3]வடிவு
[4]பொன்றாத நும்முருவம போதியீர் - நின்றருக்கன்
கண்ணுக்குக் காட்டுமாப் போலே உனதறிவின்
நண்ணிஅறி வித்திடுவோம் நாம். உஎ

அன்றியுங்கேள் ஆன்மாவால் ஆய்ந்தறியும் ஐம்பொறிகள்
இன்றி அறியா இவையென்ன - நின்றதுபோல்
ஓவாமல் உன்னை உணர்த்துவோம் உன்னறிவில்
மேவாமல் மேவிநா மே. உஅ

அக்கரங்கட் கெல்லாம் அகரஉயிர் நின்றாற்போல்
மிக்க உயிர்க்குயிராய் மேவினேம் - எக்கண்ணும்
நில்லா இடத்துயிர்க்கு நில்லா தறிவென்று
நல்லா கமம்ஓதும் நாடு. உசு

பஞ்சாக்கர நடனம்

நற்றவத்தோர் தாம்காண நாதாந்தத் தஞ்செழுத்தால்
உற்றுருவாய் நின்றாடல் உள்ளபடி - பெற்றிடநான்
விண்ணோர் பொழில்வெண்ணெய் மெய்கண்ட நாதனே
தண்ணார் அருளாலே சாற்று. ௩0

[1]நித்தமாம். [2]தோதி. [3]வடிவைப். [4]பொன்றாது.

எட்டும் இரண்டும் உருவான [1]லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள் - சிட்டன்
சிவாயநம வென்னுந் திருவெழுத்தஞ் சாலே
அவாயமற நின்றாடு வான். ௩௧

ஆடும படிகேள்நல் அம்பலத்தான் ஐயனே
நாடுந் திருவடியி லேநகரம - கூடும
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார். ௩௨

சேர்க்கும் துடிசிகரஞ் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம அபயகரம் - பார்க்கிலிறைக்(கு)
அங்கி நகரம் அடிக்கீழ் [2]முயலகனார்
தங்கும மகரமது தான். ௩௩

ஓங்கார மேநல திருவாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம் - ஆங்காரம
அற்றார் அறிவர்அணி அம்பலத்தான் ஆடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின். ௩௪

தோற்றம துடியதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும அங்கியிலே சங்காரம் - ஊற்றமா
ஊன்று மலர்ப்[3]பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு. ௩௫

மாயை தனை உதறி வலவினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கிஅருள் தானெடுத்து - நேயத்தால்
ஆனந்த வாரிதியில ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பரதம தான். ௩௬

மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தானந்த [4]மானிடத்தே தங்கியிடும் - ஆனந்தம்
[5]மொண்டருந்தி நின்றாடல காணும்அருள் மூர்த்தியாக்
கொண்டதிரு அம்பலத்தான் கூத்து. ௩௭

---

[1]லிங்கம் மேல். [2]முயலகனைய்த். [3]பதத்தே. [4]மாநடத்தே. [5]மொண்டருத்த.

[1]பரையிடமா நின்றுமிகு பஞ்சாக் கரத்தால்
உரைஉணர்வுக் கெட்டா ஒருவன் - வரைமகள்தான்
காணும் படியே கருணைஉருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு. ௩அ

அஞ்செழுத்து

நாதாந்த நாடகத்தை நன்றாய் அருள்செய்தீர்
ஓதீர் எழுத்தஞ்சும் உள்ளபடி - தீதறவே
அஞ்செழுத்தி [2]தாகில் அழியுமெழுத் தாய்விடுமோ
தஞ்ச அருட்குருவே சாற்று. ௩௯

உற்ற குறிஅழியும் ஓதுங்கால் பாடைகளில்
சற்றும் பொருள்தான் சலியாது - மற்றதுகேள்
ஈசனருள் ஆவி எழிலார் திரோதமலம்
ஆசில்எழுத் தஞ்சின்[3]அடை வாம். ௪0

சிவனருள் ஆவி திரோதமலம் ஐந்தும்
அவனெழுத் தஞ்சின் அடைவாம் - [4]இவனின்று
நமமுதலா ஓதிலருள் நாடாது நாடும்அருள்
சிம்முதலா ஓதுநீ சென்று. ௪௧

அண்ணல் முதலா அழகார் எழுத்தைந்தும்
எண்ணில் இராப்பகலற் றின்பத்தே - [5]நண்ணி
அருளா னதுசிவத்தே யாக்கும் அணுவை
இருளா னதுதீர இன்று. ௪௨

ஆதி மலம்இரண்டும் ஆதியாய் [6]ஓதினல்
சேதியா மும்மலமுந் தீர்வாகா - போதம்
[7]மதிப்பரிதாம் இன்பத்தே வாழலாம் மாறி
விதிப்படிஓ தஞ்செழுத்து மே. ௪௩

அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுரா ணம்மனைத்தும் - அஞ்செழுத்தே

---

[1]உரையுணர்வுக் கெட்டா ஒருவன்மிகு பஞ்சாக் கரத்தால் வரைமகள்தான் பாதி - பரையிடமாக். [2]தானல். [3]அடைவு. [4]இவை நின்று. [5]நண்ணில். [6]ஓதினீர். [7]மதிப்பரிய.

ஆனந்தத் தாண்டவமும் [1]ஆறாறுக் கப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும். சச

அத்துவித முத்தி

முத்தி தனை அடைந்தோர் முந்துபழம் போதங்கி
வித்தகமாம் வீணை இவையிற்றின் - ஒத்த
இரதமணம் வெம்மை [2]எழில்நாதம் போல
விரவுவரென் றோதும் விதி. சரு

தத்துவங்க ளெல்லாம் சகசமா ஆன்மாவிற்
பெத்தத்தில் நிற்கின்ற பெற்றிபோல் - முத்திதனிற்
சித்தமல மற்றார் செறிந்திடுவர் என்றுமறை
சத்தியமா ஓதியிடுந் தான். சசா

ஆதவன்தன் சன்னிதியில் அம்புலியின் ஆர்சோதி
பேதமற நிற்கின்ற பெற்றிபோல் - நாதாந்தத்(து)
அண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்தின்பக்
கண்ணில் அழுந்தியிடும் காண். சஎ

சென்றிவன்றான் ஒன்றில் சிவபூ ரணமசிதையும்
அன்றவன்றான் ஒன்றும்எனில் அன்னியம்மாம் - இன்றிரண்டு
அற்றநிலை ஏதென்னில் ஆதித்தன் அந்தன்விழிக் [ம்
குற்றமற நின்றதுபோற் கொள். சஅ

வாக்கு மனமிறந்த வான்கருணை [3]யாளன்உருத்
தாக்கறவே நிற்கும் தனிமுதல்வா - நீக்காப்
பதியினைப்போல் நித்தம் பசுபாசம் [4]என்றாய்
[5]கதியிடத்து மூன்றினையுங காட்டு. சகூ

முத்திதனின் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅனு போகத்தைத் துய்த்தல்அணு - மெத்தவே
இன்பங்கொ டுத்தல்இறை இத்தைவிளை வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொள்அப் பா. ருo

---

[1]யாவைக்கு மப்பாலாம். [2]எழுநாதம். [3]யாளனெடு. [4]ஒன்றால்.
[5]கதியினிடத் திம்மூன்றும்.

### குருலிங்க சங்கம வழிபாடு

அப்பாஇம் முத்திக் கழியாத காரணந்தான்
செப்பாய் அருளாலே செப்பக்கேள் - ஒப்பில்
குருலிங்க வேடமெனக் [1]கூறில்இவை கொண்டார்
கருவொன்றி நில்லார்கள் காண். ருக

கற்று மனம்போல் கசிந்துகசிந் தேஉருகி
உற்றுசான் லிங்கம் உயர்வேடம - பற்றுக
முத்தித் தலைவர் [2]முழுமலத்தை மோசிக்கும்
[3]பத்திதனில் [4]நின்றிடுவர் பார். ருஉ

வாழ்ந்தேன் அருட்கடலே வற்றுப் பவக்கடலில்
வீழ்ந்தே அலையாமல மேதினியில் - சூழ்ந்துவிடா
வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே
உண்மைத் தவப்பயனே உற்று. ருங

### ஆசிரியர் பெயர்

மன் அதிகை வாழும மனவா சகங்கடந்தான்
மின்னனையார் வாழ்விலுரு மெய்கணடான்—[5]பன்னுமறை
வணமைதரும் ஆகமநூல வைத்த பொருள்வழுவா
உணமைவிளக் கஞ்செய்தான் உறறு.



[1]கூற. [2]மும்மலத்தை மோசிதது. [3]பத்திக்கண். [4]நின்றிடு வாய். [5]பன்மறைகள்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## கொற்றவன்குடி - உமாபதி சிவாசாரியார்

அருளிச்செய்த

# 7. சிவப்பிரகாசம்

### காப்பு

ஒளியான திருமேனி உமிழ்தானம் மிகமேவு
களியார வரும்ஆனை கழல்நாளும் மறவாமல்
அளியாளும் மலர்தூவும் அடியார்கள் உளமான
வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே.

[1]ஒளியிது காப்பருட் கணபதி கழலிணை
தெளிபவா உளம்வினை சேரா என்றது.

## பாயிரம்

### சிவம்

ஓங்கொளியாய் அருள்ஞான மூர்த்தி யாகி
உலகமெலாம் அளித்தருளும் உமையம்மை காணத்
தேங்கமழும் மலரிதழி திங்கள் கங்கை
திகழரவம் வளர்சடைமேற் சேர வைத்து

---

[1]செய்யுள் ஒவ்வொன்றுக்கும் கருத்தாக அமைந்த இந்தக் 'கொளு'க்களைச் செய்தவர், பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த காவை - அம்பலவாணத் தம்பிரான் என்பவர்.

நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்க மன்றுள்
நின்றிமையோர் துதிசெய்ய நிருத்தம் செய்யும்
பூங்கமல மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும்
புந்தியினும் உறவணங்கிப் போற்றல் செய்வாம்.

மன்னிய கடவுள் பொன்னடி வாழ்த்தி
முன்னவ னுண்மை முறைமை மொழிந்தது. க

## சத்தி

பரந்தபரா பரையாதி பரன திச்சை
பரஞானம கிரியைபர போக ரூபம்
தருங்கருணை உருவாகி விசுத்தா சுத்தத்
தனுகரண புவனபோ கங்கள் தாங்க
விரிந்தஉபா தானங்கள் மேவி ஒன்றாய்
விமலமாய் ஐந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்(து)
அரந்தைகெட மணிமன்றுள் ஆடல் காணும்
அன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.

புத்தியும் முத்தியும் பொருந்திநின் றளிக்குஞ்
சத்திதன் பேதத் தகைமை சாற்றியது. உ

## விநாயகர்

நலந்தரநூல் இருந்தமிழின் செய்யுட் குற்றம்
நண்ணுமை இடையூறு நலியாமை கருதி
இலங்குமிரு குழையருகு பொருதுவரி சிதறி [வன்
இணைவேல்கள் இகழ்ந்தகயற் கண்ணியொடும் இறை
கலந்தருள வரும்ஆனை முகத்தான் மும்மைக்
கடமருவி யெனநிலவு கணபதியின் அருளால்
[1]அலந்துமது கரமுனிவர் பரவவளர் கமலம்
அனையதிரு வடியிணைகள் நினைதல் செய்வாம்.

சொற்றரு நூலிற் குற்றமணு காவகை
பொற்புறு கரிமுகன் நற்பதம் பணிந்தது. ங

---

[1] அலர்ந்து.

### சுப்பிரமணியர்

வளநிலவு குலஅமரர் [1]பதியாய் நீல
மயிலேறி வரும்ஈசன் அருள்ஞான மதலை
அளவில்பல கலைஅங்கம் ஆரணங்கள் உணர்ந்த
அகத்தியனுக கோத்துரைக்கும் அண்ணல்விறலெண்ணு
உளமருவு சூரனுரம் [2]எமதிடும்பை ஓங்கல்
ஒன்றிரண்டு கூறுபட ஒளிதிகழுவேல் உகந்த
களபமலி குறமகள்தன் மணிமுலைகள் கலந்த
கந்தன்மல ரடியிணைகள் சிந்தை செய்வாம்.

அருமறைச் சிரப்பொருள் அகத்தியற் குரைத்த
முருகனை திருபதம் பரிவுடன் மொழிந்தது. ச

### சந்தானகுரவர்

தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
திருநந்தி அவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிகள் அடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் [3]பதியாம் வெண்ணெய்
மேவியசீர் மெய்கண்ட திறலார் மாறு
விரவுபுகழ் அருணந்தி விறலார் செல்வத்
தாவில்அருள் மறைஞான சம்பந்தர் இவர்இச்
சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே.

ஆதிமா முனிவர்க் கம்பிகா பதிஅருள்
கோதிலா ஞானக் குருமர புரைத்தது. ரு

### மறைஞானசம்பந்தர்

பார்திகழ வளர்சாம வேதம் மல்கப்
பராசரமா முனிமரபு பயில ஞானச்
சார்புதர வந்தருளி எம்மை யாண்ட
சைவசிகா மணிமருதத் தலைவன் அந்தண்

---

[1] அதிபதியாய். [2] எனதிடும்பை. [3] பதியாய்.

கார்மருவு பொழில்புடைசூழ் மதில்மீதே மதியம்
கடவாமல் நெடுங்கொடியின் கரந்தகையும் கடந்தைச்
சீர்நிலவு மறைஞான சம்பந்தன் எந்தை
திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம்.

மன்னிய பேரருள் வடிவுகொண டிருபதஞ்
சென்னியில வைத்த தேசிகா வணககம். ௬

## நுதலிய பொருள்

புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்ப்
[1]புகல்அளவைக் களவாகிப் பொற்பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய் இருள்வெளிபோற் பேதமும்சொற் பொருள்
பேதாபே தமும்இன்றிப் பெருநூல் சொன்ன[போல்
அறத்திறனல் விளைவதாய் உடலுயிர்கண் அருக்கன்
அறிவொளிபோல் பிறிவரும்அத் துவித மாகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம சைவ
சித்தாந்தத் திறன்இங்குத் தெரிக்க லுற்றும்.

வளம்பயில் நூலின் மதிப்புடன் வகுத்து
விளம்புறு பொருளின் மேன்மையை விரித்தது. ௭

## தீக்கை முறைமை

மூவகைஆ ருயிர்வர்க்கம் மலத்தார் கன்ம
மூலமலத் தார்மூன்று முடையா ரன்றே
தீவகமாம் எனஉருவாய் வந்து நாதன்
திருநோக்கால பரிசத்தால் திகழும் வாக்கால்
பாவனையால் மிகுநூலால் யோகப் பண்பால்
[2]பரவிவரும் அவுத்திரியாற் பாச நாசம
மேவஅரு ளுதவும்அவுத் திரியிரண்டு திறனும்
வியன்கிரியை ஞானமென விளம்பு மாறே.

மூவகை உயிரின் முறைமையும அவர்கருக்
காவலன் அருள்புரி கடனும் நவினறது. ௮

---

[1]புகழளவை. [2]பரவ வரும்.

விரும்பியமந் திராதிகாரம் அர்ச்சனுதி காரம்
மேவும்யோ காதிகாரம் எனச்சமய விசேடம்
வரும்பொருவில் நிருவாண மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்
இரங்கடைவில் தொகைபதினென் றெண்பத்தொன் றைம்
திருநூற்றே டிருபத்து நாலாறு றைந்திற் [பத்தொன்
பரந்தநெறி அறுவகையும் ஒருவிநினை வரிதாம்
பரபதத்துள் உயிர்விரவப் பயிற்று மன்றே.

தக்கசரியை கிரியை யோகத் தனமையும
மிக்க ஞான விதியையும் விரித்தது. ௯

கிரியையென மருவுமவை யாவும் ஞானம்
கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கும் உண்மைச்
சரியைகிரி யாயோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீப சாரூ பங்கள்
மருவியிடும் உயர்ஞான மிரண்டாம் மாறு
மலமகல அகலாத மன்னு போதத்
திருவருளொன் றென்றதனைத் தெளிய வோதும்
சிவாகமமென் றுலகறியச் செப்பும் நூலே.

மூவித மான முததிப் பதமும்
மேவிய வருளுமெய் யாகமம் என்றது. ௧0

## நூன்மரபும் பெயரும்

தெரித்தகுரு முதல்வர்உயர் சிவஞான போதம்
செப்பினர்பின் பவர்புதல்வர் சிவஞான சித்தி
விரித்தனர்மற் றவர்கள்திரு வடிகள் போற்றி
விளம்பியநூல அவையிரண்டும் விரும்பி நோக்கிக்
கருத்திலுறை திருவருளும் இறைவன் நூலும்
கலந்துபொது உண்மையெனக் கருதி யானும்
அருத்திமிக உரைப்பன்வளர் விருத்தம் நூறும்
ஆசில்சிவப் பிரகாசம் ஆகு மன்றே.

உனனரும பொருளை உரையால் உணர்த்திய
முன்னவர் அருளால் நூற்பெயர் மொழிந்தது. ௧௧

### அவையடக்கம்

தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா இன்று
தோன்றியநூல் எனும்எவையும் தீதாகா துணிந்த
நன்மையினார் நலங்கொள்மணி பொதியுமதன் களங்கம்
நவையாகா தெனஉண்மை நயந்திடுவர் நடுவாந்
தன்மையினார் பழமைஅழ காராய்ந்து தரிப்பர்
தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந் தறிதல்
இன்மையினார் பலர்புகழில் ஏத்துவர்ஏ திலருற் [லரே.
றிகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர் தமக்கெனவொன் றி

சான்றோர் செய்தியுஞ் சால்பிலார் தன்மையுந்
தோன்று மாறு சொல்அவை யடக்கம். க௨

---

# பொது அதிகாரம்

## முதற் சூத்திரம்

### பதியிலக்கணம்

பலகலைஆ கமவேதம் யாவையினுங் கருத்துப்
பதிபசுபா சநதெரித்தல் பதிபரமே அதுதான்
நிலவும்அரு உருவின்றிக் குணங்குறிக ளின்றி
நின்மலமாய் ஏகமாய் நித்த மாகி
அலகி லுயிர்க் குணர்வாகி அசல மாகி
அகண்டிதமாய் ஆனந்த உருவாய் அன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்து ளோரே.

விதிப்படி முதனூல விளமபுமுப் பொருளிற்
பதித்திறந் தெரிந்து பாரித் துரைத்தது. க௩

நீடுபரா சத்திநிகழ் இச்சா ஞானம்
நிறைகிரியை தரஅதனை நிமலன் மேவி
நாடரிய கருணைதிரு உருவ மாகி
நவின்றுபல கலைநாத விந்து வாதி

கூடுமொளி வளர்குடிலை மாயை மேவிக்
கொடுவினைகொள் தனுகரண புவன போகம்
பீடுபெற நிறுவிஅவை ஒடுக்கு மேனி
பிறங்கியநிட் களசகளப் பெற்றி யாமே.

முன்னருட் சத்தி மூவித மான
தன்மையில நிட்கள சகள முரைத்தது. கச

ஈங்கிதுஎன் றதுகடந்த இயல்பி னானும்
ஈறுமுதல் நடுவொன்று மிலாமை யானும்
ஓங்கிவளர் ஞானமயன் ஆத லானும்
உண்மைபிறர்க் கறிவரிய ஒருமை யானும்
தாங்கரிய வெறுப்பினொடு விருப்பு மெல்லாம்
சார்வரிய தனிமுதல்வன் ஆத லானும்
நீங்கலரும் உயிர்க்குயிராய் நிற்ற லானும்
நிறுத்திடுவன் நினைந்தஉரு நிமலன் தானே.

துடைப்பவன உருவாய்த் தோன்றுவ தன்றிப்
படைக்க அரிதாம பரிசினை யுரைதததது. கரு

உலகமெலாம் ஒருவனே டொருத்தி ஒன்றென்(று)
உளதாகி நின்றளவில் ஒடுங்கும் பின்னும்
மலமதனுல் உளதாகும் உருவ மாறி
வருவது[1]போ வதுசெல்வ தாத லானும்
அலைவில்அசே தனமாயை ஆத லானும
அணுக்களுரு அடையும்அறி விலாமை யானும்
நிலவுதொழில் மருவிஉரு நிற்ற லானும்
நின்றெவையும் அளித்திடுவன் நிமலன் தானே.

ஒருவன் ஒருத்தி ஒன்றென் றுணர்வரும்
உருவம் அவனுல் வந்த தென்றது. கசு

கந்தமலர் அயன்படைக்கும் உலக மெல்லாம்
கண்ணன்அளித் திடும்அவைஎம் கடவுள் தானே
அந்தமுற அழித்திடுவன் ஆத லாலே
அயன்அரியும் அவனதுயர் அதிகா ரத்து

[1]செல்வது போவது.

வந்தமுறை தன்தொழிலே மன்னுவிப்பன் எல்லாம்
வருவிப்பன் விகாரங்கள் மருவான் வானின்
முந்திரவி எதிர்முளரி அலர்வுறும்ஒன் றலர்வான்
முகையாம்ஒன் றொன்றுலரும் முறையி னுமே.

படைப்பு நிலையவன் படைப்பா தலினால்
துடைப்பவன் முதலெனத் தோன்ற உரைத்தது. கஎ

ஏற்றஇவை அரனருளின் திருவிளையாட் டாக
இயம்புவர்கள் அணுக்கள்இடர்க் கடல்நின்றும் எடுத்
ஊற்றமிக அருள்புரிதல் ஏது வாக [தே
உரைசெய்வர் ஒடுக்கம்இளைப் பொழித்தல் மற்றைத்
தோற்றமல பாகம்வரக் காத்தல் போகம்
துய்ப்பித்தல் [1]திரோதாயி நிறுத்த லாகும்
[2]போற்றலரும் அருள்அருளே யன்றி மற்றுப்
புகன்றவையும் அருளொழியப் புகலொ ணாதே.

மனனுயிர்க் கிரங்கி வருதலைந் தொழிலும்
முன்னவன் அருளெனும் முறைமை மொழிந்தது. கஅ

# இரண்டாஞ் சூத்திரம்

## பசு இலக்கணம்

எண்ணரிதாய் நித்தமாய் இருள்மலத்தின் அழுந்தி
இருவினையின் தன்மைகளுக் கீடான ஆக்கை
அண்ணலரு ளால்நண்ணி அவைஅவரா யதனால்
அலகில்நிகழ் போகங்கள் அருந்தும் ஆறருல்
புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாய்ப்
புணரும்இருள் மலபாகம் பொருந்தியக்கால் அருளால்
உள்நிலவும் ஒளியதனால் இருளகற்றிப் பாதம்
உற்றிடுமற்ற பசுவருக்கம் எனஉரைப்பா [3]உணர்ந்தோர்.

எண்ணிலா உயிர்கள் இறந்துபிறந் தொருகால்
நண்ணிடும் அரனடி அருளால் என்றது. கக

[1] திரோதைதக. [2] போற்றவரும். [3] உணர்ந்தே.

### பாச இலக்கணம் - ஆணவம், திரோதாயி

ஏகமாய்த் தம்கால எல்லைகளின் மீளும்
எண்ணரிய சத்தியதாய் இருளொளிர இருண்ட
மோகமாய்ச் செம்பினுறு களிமபேய்ந்து நித்த
மூலமல மாய்அறிவு முழுதினையும மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதாயி சத்தி
பண்ணுதலான் மலமெனவும பகர்வர்அது பரிந்து
நாகம்மா நதிமதியம் பொதிசடையான் [1]அடிகள்
நணுகும்வகை கருணைமிக நயக்கும் தானே.

மோகமா மூல மலத்தின் முறைமையும்
பாகமாந் திரோதப பகுதியும் பகர்நதது. உ0

### சுத்த மாயை

உன்னலரும் பரசிவன்தன் அருளாலே நாதம்
உதிக்குமமிகுங் குடிலைதனில் விந்துவரும் நாதந்
தன்னில்அதி ஞௌிவளரும் சதாசிவராம் அவரில்
தயங்கவரும ஈசர்வித்தை தனை அளிப்பர் அதனுல்
மன்னுவர்இவ் வகைஐவர் வாய்மையினுல் முன்னே
வந்திடுமென் றுரைசெய்த விந்துவழா வகையே
முன்னுதவும் சூக்குமாதி ஒருநான்கும் என்று
மொழிந்திடுவர் அருங்கலைகள் முதிர்ந்து ளோரே.

வைத்தமா மாயையின் வாக்கு நான்கும்
சுத்தநத் துவமைந்துந் தோன்றும் எனறது. உக

### அசுத்த மாயை

உருவாதி சதுவிதமாய் ஒன்ருென் ருெவ்வா
உண்மையதாய் நித்தமாய் ஒன்ருய் என்றும்
அருவாகிக் [2]கன்மார்ந்த அணுக்கள் யார்க்கும
ஆவார மாய்அசித்தாய் அசல மாகி

[1] அடிக்கண். [2] கன்மமார், கன்மமார்ந்த.

விரிவாய தன்செயலின் வியாபியாய் எல்லாம்
விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை ஒடுங்க
வருகாலம் உயிர்களெல்லாம் மருவிடமாய் மலமாய்
மன்னியிடும் அரனருளால் மாயை தானே.

உன்னிய சகலர்க் குடம்பு முதலாய்
மன்னிய அசுத்த மாயையை வகுத்தது. உஉ

என்னையிது எனில்உலகுக் குபாதான மில்லை
இறைவனல தெனின்அசித்துச் சித்தினிடத் துதியா
மன்னியுள தேல்முதல்வன் என்கொல் என்னின்
மாயைதான் அசித்துருவாய் மருவ மாட்டா(து)
அன்னவனும் இதுவொழிய ஆக்க மாட்டான்
அசத்தனும எனின்அதுவும அவன்போல் நித்தம்
முன்னவன்அவ் வசித்தைவிரித் தெவையும் ஆக்கும்
முதன்மைஅது கொடுத்ததென மொழிந்தி டாரே.

உலகு பிரமத் துதித்தொடுங் கிடுமெனுங்
கலதிதன் மொழியைக் காட்டி மறுத்தது. உங

படைத்ததொரு படியின்றிப் பறவைபசு நரராய்ப்
பண்ணியதென் முன்னைவினைப் பான்மை யென்பர்
அடுத்தவினை உளதாயின் இறைஏன் என்னில்
அசேதனம்மற் றவைஆவிக் கமைத்த தாகும்
எடுத்தவினை உருவுறுவ துயிரேல் தானே
இருவினைக்குத் தக்கஉடல் எய்து மென்னில்
சடத்திரளும் அகர்த்தாவாய் அறிவொன் றில்லாத்
தன்மையனுங் கூடவொரு சங்கை யின்றே.

பலவுரு வாகப் படைப்பதற் கேதுத்
தொல்லை வினையின் தொடர்ச்சியைச் சொன்னது. உச

அல்லல்மிக உயிர்க்கிவைதான் அணைத்த தீசன்
அருவினைகள் அருந்துதற்கோ வினையோ அன்றிச்
சொல்லிவரு மாயையோ அணுவை முந்தச்
சூழ்ந்ததெனும் உரைமுதலோர் தொடக்கி லார்பால்

ஒல்லைவரு மெனின்உளதாம் உயிருண் டாவே
 உளதுமலம் மலமுளதாய் ஒழிந்த வெல்லாம்
[1]நெல்லின்முளை தவிடுமிபோல் அநாதி யாக
 நிறுத்திடுவர் இது[2]சைவம் நிகழ்த்து மாறே.

சாலியின் முளையுந் தவிடும் உமியும்
போலமும் மலமும புராதனம என்றது. உரு

**தத்துவங்களின் தோற்றம் ஒடுக்கம்**

அருத்திமிகும் கலைகாலம் நியதியுடன் வித்தை
 அராகம்இவை அனந்தரால் மாயைதனி லாகும்
உருத்திரராற் கலையதனில் பிரகிருதி குணங்கள்
 உளவாகும் ஆங்காரம் புந்திதனில் உதிக்கும்
தெரித்தவிது திரிவிதமாம் தைசதவை காரி
 திகழ்தருபூ தாதியெனத் திருந்தியசாத் துவிதம்
விரித்தகுணம் மனம்புத்தி இந்திரிய மென்று
 விளம்பியசோத் திராதிமுதல் விளங்கியிடும் விரிந்தே.

கன்றிய மாயையிற் கலைமுத லாக
ஒன்றுதத் துவம்பதினைந் துற்பவம் என்றது. உசு

மன்னியகன் மேந்திரிய மானஇரா சதஞ்சேர்
 வாக்காதி வைகாரி மருவிவரும் சத்தம்
தன்னைமுத லாகியதா மதமிகுமாத் திரைபின்
 தரும்இதனில வான்அநிலம் அனல்புனல்மண் சத்தம்
முன்னதனில் வெளியாதி [3]ஒன்றொன் றுரும்
 முறையிலுறும் இருமைஅயன் முடிவா முன்னே
உன்னுசதா சிவராதி அதிபதிகள் ஒடுக்கம்
 உதித்தஅடை வெனஉரைப்பர் உணர்ந்து ளோரே.

பின்னுமூ வைந்து பிறககும் நெறியுஞ்
சொன்னவா றொடுககமுந் தோற்றமுஞ் சொன்னது.

---

[1]நெல்லின்வரு. [2]சைவர். [3]ஒன்றொன்றுக.

**கன்மம்**

நண்ணியிடும் [1]உருவதனுக் கேது வாகி
நானுபோ கங்களாய் நாசோற் பத்தி
பண்ணிவரும ஆதலால் அநாதி யாகிப்
பலவாகி அணுக்கள்தொறும் படர்வ தாகி
எண்ணிவரு மனவாச கன்மத்தா லியற்றும்
இயல்பினதாய் மதிகதமாய் இருபயனும் பாவ
புண்ணியமாய்ப் புலர்காலை மாயை மேவிப்
பொருந்துமிது கனமமலம புகலு மாறே.

தீங்கும் நலனுஞ் செயதவா றடையும்
பாஙகுறு வினையைப் பாரித் துரைததது. உஅ

கன்மநெறி திரிவிதம்நற் சாதிஆயுப் போகக்
கடனதென வருமூன்றும் உயிரொன்றிற் கலத்தல்
தொன்மையதா மூல்லதுண வாகா தானும
தொடங்கடைவின அடையாதே தோன்றும் மாறித்
தன்மைதரு தெய்விகமுற் பௌதிகம்ஆன் மிகமாம்
தகையிலுறும் அசேதனசே தனத்தாலும் சாரும்
நன்மையொடு தீமைதரு சேதனனுக் கிவண்ஊண்
நாடில்அதன் ஊழ்வினையாய் நணுகுந் தானே.

ஆயுவும போகமுஞ் சாதியு மாய்வினை
மாய உருவின மருவும என றது. உகூ

மேலைக்கு வருவினைஏ தென்னில் அங்கண்
விருப்புவெறுப் பெனஅறிஅவ் [2]வினையும் எல்லாம்
மூலத்த வினைப்பயில்வாம் என்னின் நாம்ஏன்
முற்றிஅதன் பயன்உனக்கு மூளைக்கு மென்பர்
ஞாலத்து வினைகள்இரு திறனுகும் புந்தி
நண்ணுத வினைநணுகும் வினையெனஒன் றிரண்டாம்
ஏலத்தான் இதம்அகித மாம்இதனுல் வழுவா(து)
எய்தியிடும் புண்ணியபா வங்க ளென்றே.

மன்னிய விருப்பு வெறுப்பால வல்வினை
பின்னும வினையும் பெற்றியை யுரைத்தது. ௩0

---

[1] உருவத்துக்கு. [2] வினைவும்

உற்றதொழில் நினைவுரையின் இருவினையும் உளவாம்
ஒன்றொன்றால் அழியாதூண் ஒழியா தின்னில்
மற்றவற்றின் ஒருவினைக்கோர் வினையால் வீடு
வைதிகசை வம்பகரும் மரபில் ஆற்றப்
பற்றியது கழியும்இது விலையால் ஏற்கும்
பான்மையுமாம் பண்ணுது பலிக்கும் [1]முன்னம்
சொற்றருநூல வழியின்வரின் மிகுதி சோரும்
சோராதங் கதுமேலைத் தொடர்ச்சி யாமே.

ஒழியா இருவினை ஒன்றின லொன்றிங்கு
அழியா தனுபவ மாகும் என்றது. ௩௧

### பஞ்ச மலங்கள்

மோகமிக உயிர்கள்தொறும் உடனாய் நிற்கும்
மூலஆ ணவம்ஒன்று முயங்கி நின்று
பாகமிக உதவுதிரோ தாயி ஒன்று
பகர்மாயை ஒன்றுபடர் கன்மம் ஒன்று
தேகமுறு கரணமொடு புவன போகச்
செயலாரும் மாமாயைத் திரட்சி ஒன்றென்(று)
ஆகமலம் ஐந்தென்பர் ஐந்தும் மாறு(து)
அருளென்ப தரிதென்பர் அறிந்து ளோரே.

அலக்கண் படுமுயிர்க் கைந்து வகையா
மலதகின பகுதியை வனப்புற வகுத்தது. ௩௨

### அவத்தை இலக்கணம் - கேவலாவத்தை

ஓங்கிவரும் பலஉயிர்கள் மூன்றவத்தை பற்றி
உற்றிடுங்கே வலசகல சுத்தமென உணர்க
ஈங்குவரும் கலாதியொடு குறிஉருவம் ஒன்றும்
இன்றிமல மன்றியொன்று மில்லையெனும் இயல்பாய்
ஆங்கறிவை அறிவரியன் அறிகருவி அணையா
ஆதலினல் இருள்மருவும் அலர்விழிபோல் அதுவாய்
நீங்கும்வகை யின்றிநித்த வியாபகமாய் அங்கண்
நிற்பதுகே வலமென்று நிகழ்த்தும் நூலே.

ஆருயிர் மூவகை யவத்தை யுறுமதிற்
கூறிரு ளவத்தைக் குறியிது என்றது. ௩௩

[1]இன்னம்.

இன்மைமலம் மாயைகன்மம் என்றிரண்டே இறைதான்
இலங்குபல உயிர்களும்முன் புரிந்தஇரு வினையின்
தன்மைகளால் எவர்களுக்குந் தனுகரண புவனம்
தந்திடும்இங் கதனாலே இருபயனும் சார்ந்து
கன்மமெலாம் நேராக நேராதல் மருவக்
கடவுள்அரு ளால்எவையுங் கழித்திடுவன் அதனாற்
பின்மலமா னவைஅணுகா பெருகொளிமுன் புளதே
பெற்றிடுமென் றித்திறமென் பேசு மாறே.

மலமென வேறிலை மாயையுங் கன்மமும
நிலவிடும உயிர்க்கெனு மவர்நெறி யுரைத்தது. ௩௪

மாயைமுத லெனவினையின் பான்மைமுத லெனவே
மன்னுபனை விதைமரபின் மயங்கும்மலம் சுத்தற்(கு)
ஏயுநெறி யென்கொல்அதன் இயலபாயின் முத்தி
என்பதென்மற் றிவைநிற்க இருங்கலாதி உணர்வாய்
மேயபின்நற் றன்னுருவம் விளங்காமை விளக்கும் [வுள்
மிகும்உலகந் தனில்என்னில் இவைவிடுங்கால் உணர்
தோயுநெறி இலதாதல் அறியாமை யெனநீ
சொல்லியது மலமென்பர் துணிந்து ளோரே.

அறிவுறுங கலாதியால் அறியா நிலையைச்
செறிவுறு மதுமலச் செய்தியா மென்றது. ௩௫

அன்னியமா னவைஉணர்த்தி அநன்னியமாய் நிறைந்த
அறிவறியா மையினும் அருள்நிலவும் காலம்
தன்னில்அவ னேயாவு மாய்நின்ற தொன்மை
தாமுணர்த லானும்உயிர் தானெனவொன் றிலதாய்
மன்னியிடும் மலமாயை கன்மங்கள் மாறி
வந்திடும்இங் கிதுவமூவா தாதலினுன் மனத்தால்
உன்னரிய திருவருளை ஒழியமலம் உளதென்(று)
[1]உணர்வரிதாம் அதனுண்மை தெரிவரிதாம் உனக்கே.

பறறுதல் விடுதல்மற் றவற்றுள தொனரும்
உற்றிடு மலமுனல் உணர்வரி தென்றது. ௩௬

---

[1]உணர்வரிதால்.

### சகலாவத்தை

புகலுமலம் ஒழித்தற்குக் கலாதிமுதல் மாயை
பொருந்தியிடும் அரனருளாற் போதம் தீபம்
சகலமெலாம் உடனுய வாறு [1]போலத்
தரும்அருளை மலம்உயிர்கள் சாராமல் மறைக்கும்
இகலிவரும் இவையுணரின் இருள்வெளியாந் தன்மை
எய்தும்[2]இவை தம்செய்தி இலங்கும் விந்துப்
பகர்வரிய உணர்வாகி ஒளியாய் உள்ளப்
பான்மையினுல் ஒருநாதம படரும் தானே.

மலநிலை ஒதுங்க மாயா காரியங்
குலவிடு மிருளொளி குறியிதற் கென்றது. ௩௭

### வாக்குக்கள்

வந்தடைந்து பின்னமாய் வன்னங்கள் தோற்றம்
வரும்அடைவு படஒடுக்கி மயிலண்ட சலம்நேர்
சிந்தைதனில் உணர்வாகும பைசந்தி உயிரிற்
சேர்ந்துவரும் அவைமருவும உருஎவையும் தெரித்து
முந்தியிடும செவியில்உரு துள்ளுணர்வாய் ஓசை
முழங்கியிடும் மத்திமைதான வைகரியில் உதானன்
[3]பந்தமுறும் உயிரணைந்து வந்தமொழி செவியின்
பால்அணைய நினைந்தபொருள் பகரும் தானே.

சூக்குமை முதலாச் சொறபத மீரு
ஆக்கிடும வாக்கின் அடைவினை வகுத்தது. ௩௮

### தத்துவங்கள் காரியப்படும் முறைமை

இத்தகைமை இறைஅருளால் உயிர்அறியும் அறிவுக்(கு)
ஈடாக வாடாதே ஈரிரண்டில் உரைத்த
வித்தைமுதல் ஐவரான் விளங்கு ஞானம்
மேவியிடும் எனஉரைப்பர் அசுத்த மாயை

---

[1]போலும். [2]வகை. [3]பந்தமுற.

வைத்தகலை தான்மூல மலம்சிறிதே நீக்கி
மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனைப்
புத்திதர வித்தையிடை நின்றறிவை உயிர்க்குப்
பொருந்தியிடும் வகைபுணரும் புனிதசத்தி [1]புணர்ந்தே.

சுத்தசத துவத்தால தொல்லுயிர் உணர
வைததிடுங கலைவிதததை மருவும் என்றது. ௩௯

பேசரிய அராகம்தம் கன்மத்துக் கீடாய்ப்
பெற்றதனில் ஆசைதனைப் பெருகுவிக்கும் நியதி
தேசமிகும அரசர்தரும் ஆணை செய்தி
செய்தவரைத் துய்ப்பிக்கும் செய்கை போல
நேசமுறுந் தமகன்மம் நிச்சயித்து நிறுத்தும்
நிகழ்காலம் கழிகாலம் எதிர்கால மெனவே
ஓசைதர வருங்காலம் எல்லைபலம் புதுமை
உறுவிக்கும இறைசத்தி உடனாய் நின்றே.

மாலுறும அராகமும் மன்னிய நியதியுங்
காலமு மூனறின கருததையு முரைத்தது. ௪0

ஐவகையால் உறுபயன்கள் நுகரவருங் காலம்
அதுபுருட தத்துவமென் றறைந்திடுவர் அறிந்தோர்
மெய்வகைய கலாசுத்தி தனின்இதற்கும சுத்தி
மேவியிடும் வகைதானும விரும்பியநூல் விளம்பும்
செய்வகையின் தொடர்ச்சியிங்குத் தோற்றுவிக்கும் குணத் [தின்
சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமாம் அவைதாம்
[2]இவ்வகையிற் சாத்துவித ராசததா மதமாய்
இயம்புவர்கள் ஒன்றிரண்டு குணம்[3]ஏற்க உடைத்தே.

புகன்றவற் றுலவரு புருடதத் துவமும்
அகன்ற மானு மதனகுணம் விரிததது. ௪௧

அலகில்குணம் பிரகாசம் லகுதைவியா பிருதி
அடர்ச்சிமிகுங் கவுரவம்[4]அ நியமம்இவை அடைவே
நிலவியிடும் மும்மூன்றும் உயிரொன்றில் கலந்தே
நிற்கும்இவை நிறைபுலனின் பயன்எவையும் கவரும்

---

[1]புணர்ந்தே. [2]இவ்வகையால். [3]இயற்கை. [4]அன்னியமிவை தாம்.

குலவிவரு [1]போகங்கொள் இடமாய் மாறுக்
குறைவில்[2]ஒளி யாம்அலகில் புலனிடத்தின் ஒருமை
பலவகையும் உடையதாய்ப் பரனருளாற் புந்தி
பஞ்சாசற் பாவகமும் [3]பண்ணுவிக்குந் தானே.

விளம்பிய குணம்நவ மாக விரிந்ததும்
வளந்திகழ் புத்தியைம் பதுவகைத் தென்றதும். சஉ

ஆனதனு வதனிலுறும் அநிலனையும் இயக்கி
ஆங்காரம் நீங்காத அகந்தைக்கு வித்தாய்
யானலது பிறரொருவர் எனையொப்பார் புவியின்
இல்லையெனும் இயல்பினதாய் இந்திரியம் புலன்கள்
தாம்நுகரும் அளவில்அதின் முந்தியுறும் இச்சை
தானுருவாய்ச் சங்கற்ப சதாகதியும் தந்து
மானதமா னதுநிற்கும் சிந்தைநினை வையம்
வந்துதரு மனமொழிய வகுப்பொ ணுதே.

அகந்தைக் கிடமாம் ஆங்கா ரத்துடன்
நிகழ்ந்தெழு மனஞ்சித்த மிவ்வகைத் தென்றது. சங

சொன்னமுறை செவிதுவக்கு நோக்கு நாக்குத்
துண்டம்இவை ஐந்திற்கும தொகுவிடய மாக
மன்னியசத் தபரிச ரூபரச கந்தம
மருவியிடும இவைஅடைவே வாக்குப் பாதம்
பின்னர்வரு பாணிமிகு பாயுவினே டுபத்தம்
பேசலுறும் ஐந்திற்கும் பிறங்கொலிகொள் வசனம்
உன்னரிய கமனதா னவிசர்க்கா னந்தம்
உற்றதொழில் பெற்றிடுவ துண்மை யாமே.

ஞானமுங் கன்மமும நணுமிந் திரியமும
ஊனமில் விடயமுந் தொழிலு முரைத்தது. சச

முந்தியஐம் பூதங்கள் வானுதி யாக
முயங்கியநற் செவிநாசி கண்நாமெய்ம் முறையால்
இந்தவயி னின்றுவரும் ஐம்புலனும் உயிர்தாம்
எய்தும்வகை தம்முருவின் இலங்கியிடும் புறத்தும்

---

[1]போகங்கள். [2]ஒளியாய். [3]பரிணமிக்கும், பண்ணும்.

குலவிவரு [1]போகங்கொள் இடமாய் மாறுக்
குறைவில்[2]ஒளி யாம்அலகில் புலனிடத்தின் ஒருமை
பலவகையும் உடையதாய்ப் பரனருளாற் புந்தி
பஞ்சாசற் பாவகமும் [3]பண்ணுவிக்குந் தானே.

விளம்பிய குணம்நவ மாக விரிந்ததும்
வளர்ந்திகழ் புத்தியைம் பதுவகைத் தென்றதும். ௪௨

ஆனதனு வதனிலுறும் அநிலனையும் இயக்கி
ஆங்காரம் நீங்காத அகந்தைக்கு வித்தாய்
யானலது பிறரொருவர் எனையொப்பார் புவியின்
இல்லையெனும் இயல்பினதாய் இந்திரியம் புலன்கள்
தாம்நுகரும் அளவில்அதின் முந்தியுறும் இச்சை
தானுருவாய்ச் சங்கற்ப சதாகதியும் தந்து
மானதமா னதுநிற்கும் சிந்தைநினை வையம்
வந்துதரு மனமொழிய வகுப்பொ ணுதே.

அகந்தைக் கிடமாம் ஆங்கா ரத்துடன்
நிகழ்ந்தெழு மனஞ்சித்த மிவ்வகைத் தென்றது. ௪௩

சொன்னமுறை செவிதுவக்கு நோக்கு நாக்குத்
துண்டம்இவை ஐந்திற்கும தொகுவிடய மாக
மன்னியசத் தபரிச ரூபரச கந்தம
மருவியிடும இவைஅடைவே வாக்குப் பாதம்
பின்னர்வரு பாணிமிகு பாயுவினே டுபத்தம்
பேசலுறும் ஐந்திற்கும் பிறங்கொலிகொள் வசனம்
உன்னரிய கமனதா னவிசர்க்கா னந்தம்
உற்றதொழில் பெற்றிடுவ துண்மை யாமே.

ஞானமுங் கன்மமும நணுமிந் திரியமும
ஊனமில் விடயமுந் தொழிலு முரைத்தது. ௪௪

முந்தியஐம் பூதங்கள் வானுதி யாக
முயங்கியநற் செவிநாசி கண்நாமெய்ம் முறையால்
இந்தவயி னின்றுவரும் ஐம்புலனும் உயிர்தாம்
எய்தும்வகை தம்முருவின் இலங்கியிடும் புறத்தும்

---

[1]போகங்கள். [2]ஒளியாய். [3]பரிணமிக்கும், பண்ணும்.

வினையும்எதிர் வினையும்முடி வினைஉதவு பயனால்
நேராக நேராதல் மேவுங் கால்முற்
சினமருவு திரோதாயி கருணை யாகித்
திருந்தியசத் திநிபாதந் திகழு மன்றே.

உருவுடன் போகத் துற்றிடுஞ் சகலமும்
மருவிய சத்தி நிபாதமும் வகுத்தது. ௪அ

சத்திநிபாதம்

நாடியசத் திநிபாதம் நாலு பாதம்
நண்ணும்வகை எண்ணரிய ஞான பாதம்
கூடுமவர் தமக்குணர்வாய் நின்ற ஞானக்
கூத்தன்ஒரு மூர்த்திகொடு குறுகி மோகம்
நீடியகே வலசகலம நிகழா வாறு
நிறுத்திமலம் அறுக்கும்இது நிலையார் சுத்தம்
கேடில்புகழ் தரும்சரியை கிரியா யோகக்
கேண்மையரேல் இவைஉணர்த்தக் கிளக்கும் நூலே.

கேவல சகல மேவலுற் றொருநிலை
யாவது சுததா வததை எனறது. ௪௯

முத்தி பேதங்கள்

அரிவையரின் புறுமுத்தி கந்த மைந்தும்
அறுமுத்தி திரிகுணமும் அடங்கு முத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போம முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்திஇவை பழிசேர் முத்தி
திரிமலமும் அகலவுயிர் அருள்சேர் முத்தி
திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்த தாமே.

தவமென் றவநெறி சரிப்பார் முத்தியும்
சிவகதி தனையும முறையுற வகுத்தது. ௫௦

## உண்மை அதிகாரம்

இங்கிவை பொது இயம்பும் என்பர்கள் இதன்மேல ஆன்மாத்
தங்கிய அஞ்ச வத்தை தன்னுண்மை உணர்த்துந் தன்மை
பொங்கொளி ஞான வாய்மை அதன்பயன் புனிதன் நாமம்
அங்கதின் அணைந்தோர் தன்மை அறைகுவன் அருளி னாலே.

உண்மை நிலையில் ஒன்பது திறனும்
வண்மை யுடனே மயக்கற வகுத்தது. ருக

## மூன்றாஞ் சூத்திரம்

### ஆன்ம இலக்கணம்

செறிந்திடும் உடலுள் மன்னிச் சேர்புலன் வாயில் பற்றி
அறிந்ததில் அழுந்தும ஒன்றும் அறிந்திடா அறியுந் தன்மை
பிறிந்தடை அஞ்ச வத்தை பெருகிய மலத்தாற் பேணி
உறுந்தனி அதீதம் உணமை உயிாக்கென உணாத்து மனறே.

தொலலை வினையாற் றுவக்குண் டுழலும்
பலவுயிாத் தன்மை பாரித் துரைத்தது. ருஉ

உருஉணர் விலாமை யானும் ஒரொரு புலன்க ளாக
மருவினின் றறித லானும மனுதிகள் தம்மின் மன்னித்
தருபயன் நுகர்த லானும் உயிர்சட மாத லானும்
அருவினை உடலுள் ஆவி அறிவினால் அறியு மன்றே.

புகலுயிர் இல்லெனும் புறச்சம யத்தவர்
தகவி லுரையைச் சாற்றி மறுத்தது. ருங

அறிவெனில் வாயில வேண்டா அன்றெனில் அவைதாம் என்னை
அறிவதை உதவு மௌனில அசேதனம் அவைதா மெல்லாம்
அறிபவன் அறியுந் தன்மை அருளுவன் என்னி லான்மா
அறிவில தாகும் ஈசன் அசேதனத் தளித்தி டானே.

உயிருள தென்னும் உட்சம யத்தவர்
செயிருறு மொழியைத் தெரிந்து செப்பியது. ருச

அறிவினல் அறிந்த யாவும் அசத்தாதல் [1]அறிதி என்றும்
அறிவினல் அறியொ ணுதேல் ஆவதொன் றின்மைதொன்மை
அறிவு[2]தான் ஒன்றை முந்தி அதுவது வாகக் காணும்
அறிவுகாண் அசத்து மற்ற தறிவினுக் கறியொ ணுதே.

பொறியால் உயிரறி பொருள்அசத் தந்த
அறிவால அமலனை அறிவரி தென்றது. ருரு

எவ்வறி வசத்த றிந்த தெனில்உயிர் அறியா தீசன்
அவ்வறி வறியான் அல்ல தசேதனம் அறியா தாவி
செவ்விய கருவி [3]கூடித் தெரிவுரு தருளிற் சேரா
[4]ஒவ்விரு வகைய தென்னில் ஒளியிரு ளொருங்கு ருவே.

அந்த அசத்தை அசத்தென் றறிந்தது
எந்த அறிவென் றியம்புக'என றது. ருசு

சத்திது என்ற சத்துத் தானறி யாத சத்தைச்
சத்தறிந் தகல வேண்டா அசத்திது சத்தி தென்ருேர்
சத்திருள் ஒளிய லாக்கண் தன்மைய தாம்அ சத்தைச்
சத்துடன் னின்று [5]னீக்குந் தன்மையாற் சதசத் தாமே.

சத்தசத் தறியா தமமிலவ் விரண்டையும்
உயததறி வதுசத சததென் றுரைததது. ருஎ

கண்ணெளி விளக்க ளித்துக் காட்டிடு மென்னின் முன்னம்
கண்ணெளி ஒன்று மின்ரும் விளக்கொளி கலந்த வற்றைக்
கண்ணெளி அகல நின்றே கண்டிடும் வேறு காணுக்
கண்ணெளி விளக்கின்சோதி கலந்திடுங்கருத்தொன் றன்றே.

அற்றமி லுயிர்க்கறி விலையென லடாது
சிறறறி வென்றுமுண் டென்று செபபியது. ருஅ

ஓரிடத் திருத்தல் மாயா உருநிறைந் திடுதல் ஒன்ரும்
பேரிடத் துறைதல் தானே பிறங்கறி வாகி நிற்றல் [லோர்
சோர்வுடைச் சடம்நி கழ்த்தல எனுமிவை சொல்லார் நல்
[6]ஓர்விடத் துணரும் உண்மை ஒளிதரும் உபலம் போலும்.

தொடுததஐ வகையின தொல்லுயிர்த் தன்மை
அடுததத னியலபியல பாகும் என்றது. ருகூ

---

[1]அறுதி. [2]காண். [3]கூடில். [4]உவ்விரு. [5]னீங்கும். [6]ஓரிடத்து.

## நான்காஞ் சூத்திரம்

### அவத்தைத் தன்மை

*எண்ணஒன் றிலாத தீதம் எய்திய துரியத் தொன்று*
*நண்ணிடும் சுழுத்தி தன்னின் நயந்துள தொன்று பின்னும்*
*அண்ணிடும் கனவு தன்னில் ஆறேழாம் சாக்கி ரத்தின்*
*கண்ணுறும் அஞ்சா று்ய கருவிகள் காணுந் தானே.*

*உடலிடை உயிருறு மோரைந் தவத்தையின்*
*அடைவுறு கருவியின் அடைவினை வகுததது.* சூ0

இவ்வகை அவத்தை தன்னில் எய்திடும் கரண மெல்லாம்
மெய்வகை இடத்தி லுற்று மேவுமா கண்டு மிக்க
பொய்வகைப் பவம் அகற்றப் புரிந்திடில் அருளா லாங்கே
ஐவகை அவத்தை உய்க்கும் அறிவினல் அறிந்து கொள்ளே.

*தத்துவ சமூகந் தன்னிலஐந் தவத்தையுஞ்*
*சுததம தாமைந் தவத்தையுஞ் சொன்னது.* சூக

*நீக்கமில் அதீத மாசு நிறைந்தகே வலமா நீர்மை*
*சாக்கிரங் கலாதி சேர்ந்த சகலமாந் தன்மை யாகும்*
*[1]ஊக்கமில் இரண்டும் கூடா தொழியவோர் நிலையில் நீடும்*
*சாக்கிரா தீதம் சுத்தத் [2]தகைமைய தாகுந் தானே.*

*கேவல சகல சுத்தமென் றுரைத்த*
*மூவகை தெளியு முறைமை மொழிந்தது.* சூஉ

## ஐந்தாஞ் சூத்திரம்

### உணர்த்து முறைமை

மருவிய பொறியில் ஒன்றும் மாபூதம் ஐந்தில் ஒன்றும்
கருவிகள் நான்கும நீங்காக் கலாதிகள் ஐந்தும் கூடி
ஒருபுலன் நுகரும் இந்த ஒழுங்கொழிந் துயிரும் ஒன்றைத்
தெரிவுறு தவனெ ழிந்தத் திரள்களும் செயலி லாவே.

*உணர்த்து முறைமையில ஒருபுலன் நுகர*
*இணக்குறு கருவிகள் இவையா மென்றது.* சூங

---

[1] நீக்கமில். [2] தன்மையது.

தனக்கென அறிவி லாதான் தானிவை அறிந்து சாரான்
[1]தனக்கறி விலாத வாயில் தான்[2]அறி யாது சாரத்
தனக்கென அறிவி லாதான் தத்துவ வன்ன ரூபன்
தனக்கென அறிவா னல்இச் சகலமும் நுகருந் தானே.

தத்துவஞ் சடமுயிர் தானு வறியாது
ஒத்துணர் வதுபதி யுணர்வால் என்றது. ௬௪

கண்டறி புலன்கள் காணும் கருத்தினல் ஒருத்தன் ஞானம்
கொண்டுளம் அறியு மென்னில் கொள்பவன் முதலி யாகும்
மண்டிய உணர்வு யிர்க்கா மன்னிநின் றறியு மென்னில்
உண்டிட வேண்டு வோனுக் கொருவன்வே றுண்ட லாமே.

இப்பரி சன்றி இகலுறு சமயிகள
செப்பிய மொழியைத் தப்பென மறுத்தது. ௬௫

இருள்நனி இரவி தான்வந் திரித்தலும் இரவில் எண்ணும்
பொருள்நிலை கண்டு மாந்தர் பொருந்திடு மாறு போல
மருள்நிலை யெங்கும் நீங்க மகிழ்ந்துயிர் தன்னுள் மன்னும்
அருளையும் ஒழிய ஞாலத் தறிந்தவா றறியு மன்றே.

பரிதி உதவியைப் பாரறி யாபோல்
அருளுத வியையுயிர் அறியா தென்றது. ௬௬

அறிந்திடும் மனுதி வாயி லானவை அவன்ற னலே
அறிந்திடும் என்றும்ஒன் றும் அறிந்திடா அவைபோல்யாவும்
அறிந்திடும் அறியுந் தன்மை அறிந்திடா கன்மத் தொன்மை
அறிந்தவை நுகரு மாறும் அருளுவன் அமலன் தானே.

பொறியுங் கரணமும் போலுயிர் அருளால்
அறியுந் தன்மை அறியா தென்றது. ௬௭

---

[1]தனக்கென அறிவிலாத. [2]அறியா சாரா.

## ஆறுஞ் சூத்திரம்

### ஞானவாய்மை

காட்டிடும் கரண மொன்றும் இல்லையேற் காணுெ ணுதாம்
நாட்டிய இவற்ருன் ஞானம் நணுகவும் ஒண்ணு முன்னம்
ஈட்டிய தவத்தி னுலே இறைஅரு ளுருவாய் வந்து
கூட்டிடும் இவற்றை நீக்கிக் குரைகழல் குறுகு மாறே.

முற்பவத் துயிர்கள் முயனறநற் றவத்தால்
அற்புதன் திருவுரு வாவன் என்றது. சூஅ

## ஏழாஞ் சூத்திரம்

பன்னிறங் கவரும் தொன்மைப் படிகநீ டொளியும் பன்மை
மன்னிலங் கியல்பும் தந்த வளரொளி போல வையம்
தன்னகம் பயிலும் நற்சிற் [1]சடங்களின் தன்மை தாவா
நன்னலம் பெறநி றைந்த ஞானமே ஞான மென்பர்.

பன்னிறம் பளிங்கிற் பறறிடப் பற்ருப்
பொன்ஞெளி போலும மன்னருள் என்றது. சூகூ

மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயஆ ருயிரின் மேவும் [2]மருளெனில் இருளாய் நிற்கும்
மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயஆ ருயிரின் மேவும் [3]அருளெனில் ஒளியாய் நிற்கும்.

இருள்மல மொழிய ஏனைய ஒளியாய்
அருளுடன் மருவு மவர்திற முரைத்தது. எ0

---

[1] சடங்கள்தம். [2] மருளினில். [3] அருளினில்.

# எட்டாஞ் சூத்திரம்

## ஞானவாய்மையின் பயன்

தேசுற மருவும் ஆன்ம தெரிசனம் ஆன்ம சுத்தி
ஆசிலா ஆன்ம லாபம் ஆகமூன் ருகும் மூன்றும்
பாசம தகல ஞானம பற்றல்தான் பணியை நீத்தல்
ஏசில்நே யத்த ழுந்தல் எனும்இவற் றடங்கு மன்றே.

உயர்தவஞ் செய்தவர்க் குற்றமூ வகையாம்
பயனுறும வழியைப் பாரித துரைத்தது. எக

## ஆன்ம தரிசனம்

தன்னறி வதனுல் ஏதும் தனக்கறி வில்லை யேனும்
தன்னறி வாக எல்லாம தனித்தனி பயன ருந்தும்
தன்னறி வறியுந தன்மை தன்னுலே தனைய றிந்தால்
தன்னையும் தானே காணும் தானது வாகி நின்றே.

பவமா ருவிதன் பரிசினை யுணாநதுபின
சிவமாய நிறகவுயிா தெரியும எனறது. எஉ

தத்துவ மான வற்றின் தன்மைகள் உணருங் காலை
[1]உய்த்துணர்ந் திடஉ திப்ப தொளிவளர் ஞான மாகும்
அத்தன்மை அறியு மாறும அகன்றிட அதுவாய் ஆன்மாச்
சுத்தமாம் சுத்த ஞானத் [2]தொருமுதல் தோன்று மன்றே.

அதனை நிரூபித் தந்தமூ வகைபபயன்
விதமுட னிதுவென விளஙக வுரைத்தது. எந

உறைதரும் உணர்வுமன்றி அதன்முதல் உள்ளதென் றிங்(கு)
அறைவதென் என்னில அண்ணல அருளெனு மதுவேயன்றி
நிறையொளி முதல தன்றி நின்றிடா நிமல னுகும்
இறையவன் முதல வன்றன் இலங்கருள் சத்தி யாமே.

அன்ன பேரொளிக் காதவன் முதலாந்
தன்மைபோல அருட்கரன் தானமுதல் என்றது. எச

சுத்தமாம் சத்தி ஞானச் சுடராகும் சிவமொ ழிந்தச்
சத்திதான் இன்ருும் முன்னைத் தகவிலா மலங்கள் வாட்டி

---

[1]உய்த்தறிந்திட. [2]தொகுமுதல்.

அத்தனை அருளும் எங்கும் அடைந்திடும் இருள் அகற்றி
வைத்திடும் இரவி காட்டும் வளரொளி போல்ம கிழ்ந்தே.

ஒத்துறு பரிதியை ஒளிதரு வதுபோற்
சத்தியும பிராணைத் தருமென் றுரைத்தது. எரு

## ஒன்பதாஞ் சூத்திரம்

### ஆன்ம சுத்தி

புகலரும் அசத்தர் தம்பால் பொருந்திய அலகை யேபோல்
அகிலமும் உணரு மீசன் அருளுயிர் மேவ லாலே
சகலமும் நிகழ வேண்டும் தலைவன்ஐந் தொழிலுந் தானே
இகலற இயற்றல் வேண்டும் என்றது நன்றி யின்றே.

அருளுயிர் தன்னில அலகைசேர் குறிபோல்
மருவிடு முதன்மை வாய்மையன் றென்றது. எசா

இன்றுநோக் குரைநடக்கும் இயல்பிலோற் கினைய வாய்ந்து
நின்றதோர் அலகை நேர்ந்தால நிகழ்வதென் அதுபோ லுள்
ஒன்றியஉணர்வு தம்பால்உள்ளது நிகழ்த்தும்ஈசன் [ளத்(து)
தன்தொழில் நடத்தும் மேனி தனக்கெனக் கொண்டு தானே.

பறறிய அலகையின பரிசுயிர்க் குளதெனுஞ்
சொறபழு துறும்வகை தோனற உரைததது. எஎ

இந்நிலை தன்னில் மன்னி எய்திடும் கலாதி போதம்
தன்னளா வறிந்து நிற்கும தகவிலா மலங்கள் நீத்த
அந்நிலை கரணம் ஆகா வகையதில் அறிவ டங்கி
மன்னிட வியாபி யாய வான்பயன் [1]தோன்று மன்றே.

உளததறி வடஙக ஒடுங்கு மெலலையில்
துளக்கறு பரனுந் தோன்றும என்றது. எஅ

அடைபவர் சிவமே யாகும் அதுவன்றித் தோன்று மென்ற
கடனதே னென்னில்முன்னம் கண்டிடார் தம்மைப் பின்னும்
தொடர்வரும் [2]அருளி னாலே தோன்றுமா காணு ராயின்
உடையவன் அடிசேர் ஞானம் உணர்தலின் றணைத லின்றே.

ஒன்றா வுறுபய னுணரா துயிரெனின்
நன்றாம் முத்தியை நாடரி தென்றது. எகூ

[1] ஒன்று மன்றே. [2] அருளினாலும்.

## பத்தாஞ் சூத்திரம்

### ஆன்ம லாபம்

பொற்புறு கருவி யாவும் புணராமே [1]அறிவி லாமற்
சொற்பெறும் அதீதம் வந்து தோன்றுமே தோன்றி நின்ற
சிற்பர மதனால் உள்ளச் செயலறுத் திட உதிக்கும்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே.

நீககமில் சிவத்துடன் நிலைபெற நிற்குஞ்
சாக்கிரா தீதத் தன்மை சாற்றியது. அ0

ஒடுங்கிடா கரணம் தாமே ஒடுங்குமா றுணர்ந் தொடுக்க
ஒடுங்கிடும் என்னில் நின்ற தொடுங்கிடா கரண மெல்லாம்
ஒடுங்கிட [2]ஒடுங்க உள்ள உணர்வுதா னொழியும் வேறாய்
ஒடுங்கிடின் அன்றி மற்ற உண்மையை உணரொ ணாதே.

இந்நிலை கரண மிறந்த விடமெனும்
அந்நிலை பழுதாம் அதுவே றென்றது. அக

பற்றிடும் கருவி யாவும் படர்ந்துணர் வளிக்குங் காலை
உற்றறிந் திடுவ தொன்றின் உணர்வினின் உண்மை யாகும்
மற்றது பகல்வி ளக்கின் மாய்ந்திட வருவ துண்டேல்
பெற்றிடும் அதனை மாயப் பிறப்பினை அறுக்க லாமே.

பற்றிடுங் கருவிகள் பகலவிளக் கெனவே
பொற்பழி வுறவருள் பொருந்து மென்றது. அஉ

முந்திய ஒருமை யாலே மொழிந்தவை கேட்டல் கேட்டல்
சிந்தனை செய்தல் உண்மை தெளிந்திடல் அதுதா னாக
வந்தவா றெய்தல் நிட்டை மருவுதல் என்று நான்காம்
இந்தவா றடைந்தோர் முத்தி எய்திய இயல்பி னோரே.

கேட்டல் முதலாக் கிளந்த நாலவகையும்
வாட்டறு முத்தியை மருவு மென்றது. அங

### ஞான நிட்டை

பாசமா ஞானத் தாலும் படர்பசு ஞானத் தாலும்
ஈசனை [3]உணர வொண்ணா திறைஅருள் ஞானம் நண்ணித்

---

[1]அறிவிலாமைச். [2]ஒடுமகின், ஒடுங்கும். [3]அறியவொண்ணா இறை.

தேசுறும் அதனுல் முன்னைச் சிற்றறி வொழிந்து சேர்ந்து
நேசமோ டுயர்ப ரத்து நிற்பது ஞான நிட்டை.

பலகலை ஞானமும் பலவுயிர் ஞானமுந்
தலைவனை யணுகாத் தன்மை சாற்றியது. அசு

## உபாய நிட்டை

விளம்பிய வகையில் நிட்டை மேவிடல் அரிதேல் முன்னம்
அளந்தறி வளித்த வற்றின் அளவுமற் றவற்றி னூலே
உளங்கொளுந் தனையுமுள்ள படியுமுற் றுணர்ந்து செவ்வே
தளர்ந்திடா துவப்ப மற்றத் தன்மைய தாகுந் தானே.

போற்றரு நிட்டை பொருந்தா தவருக்கு
ஊறற முளதாம் உபாய முரைத்தது. அரு

பாவிக்கின் மனதி வேண்டும பயனிலை கரணம் நீத்துப்
பாவிப்பன் என்னில் [1]என்னை பழுதுள பாவ கத்தால்
பாவிக்க ஒண்ணு னென்று பாவிப்பன் என்னின் நீயென்
பாவிக்க வேண்டா ஆண்ட பரனருள் பற்றி னோர்க்கே.

நீக்கமில் பாவக நிலையெப் பொருளும்
தாக்கரு ஞானஞ் சாரா தென்றது. அசா

ஒன்றிரண் டாகி ஒன்றின் ஒருமையாய் இருமை யாகி
ஒன்றிலொன் றழியும் ஒன்று தென்னின்ஒன் றுகா தீயின்[ம்
ஒன்றிரும் புறழின் அன்றும உயிரின் ஐந் தொழிலும் வேண்டு
ஒன்றினின் றுணரு முணமைக குவமைஆணவததோடொன்றே.

குறற மருவுங் கோட்பா டகற்றி
முறறிய கதியின் முறைமையீ தென்றது. அஎ

அழிந்திடும்பாசம் என்னில் நித்தமென் றுரைத்தல்வேண்டா
அழிந்திடா தென்னின் ஞானம அடைவது கருத வேண்டா
அழிந்திடும் சத்தி நித்தம் அழிந்திடா ஒளியின் முன்னர்
அழிந்திடும் இருளும் நாசம் அடைந்திடா மிடைந்தி டாவே.

மொழிந்திடு மூல மலத்தின் சத்தி
அழிந்திடும தன்னியல பழியா தென்றது. அஅ

---

[1]என்ன.

எல்லையில் பிறவி நல்கும் இருவினை எரிசேர் வித்தின்
ஒல்லையின் அகலும் என்ற உடற்பழ [1]வினைய தூட்டும்
தொலலையில் வருதல போலத தோனறிரு வினைய துணடேல்
அல்லொளி [2]புரையும் ஞானத் தழலுற அழிந்து போமே.

முமமையாம் வினையும் முயங்கிய மாயையுஞ்
செம்மையா லகலுந் திறந்தெரிந் துரைத்தது. அகூ

அஞ்செழுத் தருள்நிலை

பந்தமா னவைஅ றுத்துப் பவுதிகம் உழலும் எல்லைச்
சந்தியா தொழியா திங்குத் தன்மைபோல் வினையுஞ் சாரும்
அந்தமஆ திகள்இ லாத அஞ்செழுத் தருளி னாலே
வந்தவா றுரைசெய் வாரை வாதியா பேதி யாவே.

உடலுறு நுகர்வும் உற்றிடும் வினையும்
இடர்பட அஞ்செழுத் தியம்புக என்றது. கூ0

திருவெழுத் தஞ்சில் ஆன்மாத் திரோதமா சருள்சி வஞ்சூழ்
தரநடு நின்ற தொன்றுந் [3]தன்மையுந் தொன்மை யாகி
வரு மந மிகுதி யாலே வா சி யில் ஆசை யின்றிக்
கருவழிச் சுழலு மாறுங் காதலார்க் கோத லாமே.

தீதிலா உண்மைத திருவைந் தெழுத்தையுங்
காதலா மவருக் கோதலாம என றது. கூக

ஆசுறு திரோத மேவா தகலுமா சிவமுன் னாக
ஓசைகொள் அதனில் நம்மேல் ஒழித்தரு ளோங்கும் மீள
வாசியை அருளும் மா ய மற்றது பற்று உற்றங்(கு)
ஈசனில் ஏக மாகும் இதுதிரு எழுத்தின் ஈடே.

ஓஙகிய திருவெழுத் தினையுணர்ந் துரைப்பவர்
நீங்கருஞ் சிவத்தினை நீங்கார் என்றது. கூஉ

---

[1]வினைகள். [2]புரைய. [3]தன்மையின்.

## பதினோராஞ் சூத்திரம்

### அணைந்தோர் தன்மை

தீங்குறு மாயை சேரா வகைவினை திரிவி தத்தால்
நீங்கிட நீங்கா மூல நிறைஇருள் இரிய நேயத்(து)
ஓங்குணர் [1]வகத்த டக்கி உளத்துளின் பொடுங்க நேரே
தூங்குவர் தாங்கி ஏகத் தொன்மையில் துகளி லோரே.

தீங்குடல் வினையுஞ் செறிவுறு மலமும்
நீங்கிட அருளொடு நீங்கார் என்றது. ௯௩

குறிப்பிடம் காலம் திக்கா சனம்கொள்கை குலம்கு ணம்சீர்
சிறப்புறு விரதம் சீலம் தபம்செபம் தியானம் எல்லாம்
மறுத்தற வொழிதல் செய்தல் மருவிடா மன்னு செய்தி
உறக்குறு பவர்போல் வாய்மை ஒழிந்தவை ஒழிந்து போமே.

மெய்ப்பொரு ளுணர்ந்தவர் விரதம் துயில்பவர்
கைப்பொரு ளனவே கழலும் எனறது. ௯௪

அகம்புற மென்றி ரண்டால் அர்ச்சனை புரியும் இந்தச்
சகந்தனில் இரண்டு மின்றித் தமோமய மாகி எல்லாம்
நிகழ்ந்திட மகிழ்ந்து வாழும் நீர்மையார் போல ஞானம்
திகழ்ந்தகம் புறம்ன றுத செம்மையார் நன்மை யாரே.

உத்தம ஞானம உணர்ந்த ஞான
வித்தகர் தன்மை விளஙக உரைத்தது. ௯௫

### ஞான யோகம்

*அண்டமமே விடஅனைத்தும் அனைத்தையும் அண்டம் மேவிக்
கொண்டல்போல எவையும்ஞானங் குறைவிலாநிறைதலாலே
கண்டதோர் பொருளை அந்தக் கருத்தினுல் காணில் தானே
அண்டநா யகனுர் மேனி யானதேல் ஐய மின்றே.

அவ்வியல புருதவர்க ககனற ஞானத்தின்
செவ்விய யோகத் திகழ்வினை யுரைத்தது. ௯௬

---

[1] (வு) அகத்தடங்கி உளத்தில்.

* இச்செய்யுள் முதல் பன்னிரண்டாஞ் சூத்திரமாகக் கொள்வதுமுண்டு.

### ஞானக் கிரியை

மண்முதற் கரண மெல்லாம் மறுஅசத் தாக்கி ஞானக்
கண்ணினில் ஊன்றி அந்தக் கருத்தினுல் எவையும் நோக்கி
எண்ணிஅஞ் செழுத்து மாறி இறைநிறை வுணர்ந்து போற்றல்
புண்ணியன் தனக்கு ஞானபூசையாய்ப் புகலு மன்றே.

மாசணு காது மனமிறந் தியற்றும்
பூசனை ஞான பூசை என்றது. ௯எ

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

### ஞானச் சரியை

தொண்டர்க ளிடத்தும் வானோர் தொழுந்திரு மேனிதானும்
அண்டரும் கண்டி லாத அண்ணலே எனவ ணங்கி
வெண்தர ளங்கள் சிந்த விழிமொழி [1]குழறி மெய்யே
கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னேரே.

சிவமாம் வேடஞ் சிவாலய மெனத்தொழுந்
தவமா ஞானச சரியை சாறறியது. ௯அ

### நூற் கருத்து

நிலவுல காய தாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துக்
குலவினர் அளவ ளாவாக் கொள்கைய தாகி வேதத்
தலைதரு பொருளாய் இன்பாய்த் தாவில்சற் காரி யத்தாய்
மலைவறும் உணர்வாற் பெத்த முத்திகள் மதித்தா மன்றே.

அந்தமில் சமயத் தளவா தருமறை
அநத முறுபொருள அறைந்தே னென்றது. ௯௯

### உபதேச முறைமை

திருவருள் கொடுத்து மற்றிச் சிவப்பிர காச நன்னூல்
விரிவது தெளியு மாற்ருல் விளம்பிய ஏது நோக்கிப்

[1] குழற.

பெருகிய உவமை நான்கின் பெற்றியில் நிறுவிப் பின்முன்
தருமலை வொழியக் கொள்வோன் [1]தன்வயிற் சாற்ற லாமே.

பெருநூற் பொருளைப் பின்முன் மலைவற
அருளுடன் கொள்பவர்க கறைக என்றது. ௬00

## உமாபதி சிவாசாரியார் துதி

1. இப்பிறப்பே சீவன்முத்தி [2]யெய்துவித்து மேற்பிறக்கும
அப்பிறப்பும் இங்கே அறுத்தருளி - ஒப்பறவே
உண்மையருள் **கொற்றங் குடிவாழ் உமாபதி**தன்
வண்மையருட் குண்டோகைம மாறு.

## நூற் கருத்து

2. பாயிரமீ ராறு பதியாறு பல்லுயிரோன்
றேயுந் திரோதமல மொன்றெனபர் - தூயபத
முத்திதரு மாமாயை யொன்ருகும மூவுலகிற்
புத்திதரு மாயைப் புணாப்பாறு - பெத்தம்விட
நன்றுதீ தாகும்வினை நாலாகும நாடோறுந்
துன்று மலத்தின் தொகையொன்று - பொன்றவருங்
கேவல மைந்து கிளக்கி லுயிருக்குப்
பாவுணர்ததும வைகரியின் பாலிரண்டு - தேவர்களுங்
5 கூடுஞ் சகலநா லைந்தாகுங கூடுமலம
வீடுகின்ற சுத்த வியப்பொன்று - நீடுமின்ப
முத்தியொன் ருக மதித்தருளால் முன்னோர்கள்
பத்தியாற் சொன்ன பரிசினல் - இத்தலமேல்
உண்மை யுரைக்கில் உயிருண்மை ஒன்பதாம்
நணணவத்தை மூன்று நலமாக - எண்ணரிய
தன்னை யுணாத்துந் தகைஐந்து தன்னுணர்த்து
மனனுணர்வின ஞான வகைமூன்று - பின்னுயிரை
மாசறவே காணும் வகைஐந்து மற்றதனில்
ஆசொழிக்குந் தன்மை யதுநான்கு தேசனுருப்

---

[1] தன்மையிற். [2] எய்துவிக்கும்.

10 பார்வையுறப் பார்க்கும்வகை பத்தாம்பஞ்சாக்கரத்தைத்
தேரும்வகை மூன்று தெரியுங்கால - சீர்மருவும்
அன்பாற் சிவனை அனுபவிக்கு மெய்யடியார்
இன்பப் பகுதி யிருமூனறு - துன்பமறச்
சொற்றரு நூலின் கருத்தொன்று சொற்றருநூல்
நற்றவருக் கீயும் நலமொனறு - முறறவரும்
பந்த மறுத்த சகநாதன் பார்வையென
வந்தளித்த **சம்பந்த மாமுனிவன்** - எந்தைபதஞ்
சென்னியின்மேல வைத்துச் சிவப்பிரகா சக்கருத்தை
அன்ன வயற்**காவை அம்பலவன்** - நன்னயத்தாற்
15 சொன்னான் எழுபிறப்புந் தொல்லைவினை யுந்திர
மன்னு கமத்தை மதித்து.

### அடிவரவும் அதிகார அடைவும்

3. ஓஙகு பரநத நலம்வளந் தேவாபார்
ஈங்கிவை யாறும் இறைவன வணககம.
புறசசம யததவா நூறகருத் தாகும.
மூவகை விருமபிய கிரியையென மூன்று
5 மாவது தீககா முறைமைய தாகும.
தெரித்த தொன்மை யென இவ் விரண்டும
விரித்த நூன்மர பவையடக் கமமே.
பலகலை நீடீங் குலகங் கந்தம
ஏறற இவவாறும் இறைவ னிலக்கணம்.
10 எண்ணரி தொன்றும பசுவி னிலககணம்.
ஏகமா யொனறு மலமுந் திரோதமும.
உனன லொன்றுங் குடிலையி னியலபாம்.
உருவாதி என்னை படைத்த அலலல
அருத்தி மன்னிய ஆறும் அசுத்தத்
15 திருததகு மாயையின் செய்திய தாகும.
நணணிய கன்ம மேலை யுற்றவென்று
எண்ணிய நான்குங் கன்மத் தியல்பே.
மோக மிகவென் றெண்ணிய வொன்றும்

வேக மிகுமல மைந்தின் விதியே.
20 ஓங்கின்மை மாயை அன்னியம் புகலும்
ஈங்கிவை ஐந்துங் கேவலத் தியல்பே.
வந்தடைந் தித்தகை பேசரி ஐவகை
அந்தமில் அலகில்குண மான தனுவுடன்
சொன்ன முந்தி இந்நிரை தோற்றி
25 அன்ன பத்துஞ் சகல அவத்தையே.
இனைய நாடி யெனஇவ் விரண்டும்
முனைவன் சுத்த முறைமைய தாகும்.
அரிவைய ரொன்றும் பரசம யத்தவர்
மருவிய முத்தியின் வாய்மைய தாகும.
30 என்னும் பொதுவியல் விருத்த மைமபதின்
மன்னிய கருத்தை வகுத்தனன். இப்பால் :
இங்கிவை யொன்றும் உண்மையின் பாயிரம்.
செறிந்திடும் உருவுணா அறிவெனில் வாயில
அறிவினுல் எவ்வறி வசத்தறிந் ததுவும்
35 சத்திது கண்ணெளி ஓரிடத் தெட்டும்
இத்திறம் ஆன்ம இலக்கண மாகும்.
எண்ண இவ்வகை நீக்கமில் மூன்றும்
அண்ண லளித்த அவத்தைய தாகும்.
மருவிய தனக்கெனக் கண்டறி புலன்கள்
40 இருள்நனி யறிந்திடும் இவையோ ரைந்தும்
பொருவி லான்மாவை யுணர்த்தல புகலும்.
காட்டிடும் பன்னிற மாயையிம் மூன்றும்
ஊட்டு ஞான வாய்மையை யுரைக்கும்.
தேசுற மும்மையின் பாரிப்ப தாகும்.
45 தன்னறி தத்துவம் உறைதரு சுத்தம்
இன்னவை நான்கும் மன்னுயிர்த் தரிசனம்.
புகலரும் இன்றுநோக் கிந்நிலை யடைபவர்
இகலறு நான்கும் இலங்குயிர்ச் சுத்தி.
பொற்புறும் ஒடுங்கிடா பற்றிடும் முந்திய
50 சொற்பெறு பாசம் விளம்பிய பாவிக்கின்
ஒன்றிரண் டாகி யழிந்திடு மெல்லை

என் றிவை பத்தும் இலங்குயி ரிலாபம்.
பந்தந் திருவெழுத் தஞ்சி லாசுறும்
அந்தமில் மூன்றும் ஐந்தெழுத் தருள்நிலை.
55 தீங்குறு குறிப்பகம் அண்டம்மண் தொண்டரென்
றுங்கிவை யாறு மணைந்தோர் தன்மை.
நிலவுல கொன்று நூற்கருத் தாகும்.
திருவரு ளொன்றும் அருளுறை நூலைக்
கொடுக்கு முறைமைப் பகுதிய தாகும். என்று
60 இப்படி உமாபதி தேவ னுரைத்த
மெய்ப்படு சிவப்பிர காச விருத்தக்
கருத்தின துண்மை விரித்துரைத் தருளினன் :
சண்பையில் வாழுந் தவகுரு நாதன்
பண்பமர் சிற்றம் பலவன் தானே.

## நூற் பெருமை

4. ஏருறுகொற் றங்குடியு மாபதிசி
வாசரிய ரியமபு மிந்தச்
சீருறுநற் சிவப்பிரகா சத்தினைமுற்
றுணர்ந்தவர்தீ மலங்கண் மூன்றுங்
காருறுமா ணவக்கிழங்கு மிருவினையுங்
கழன்றருளைக் கலந்தின் போங்கச்
சாருறுவ ரிப்புவியிற் றனையிழந்த
சாக்கிரா தீத வாழ்வே.



சிவமயம்

திருச்சிற்றமபலம்

**உமாபதி சிவாசாரியார்**

அருளிச்செய்த

# 8. திருவருட் பயன்



காப்பு

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானம்
கற்கும் சரக்கன்று காண்.

## க. பதிமுது நிலை

அகர உயிர்போல் அறிவாகி எங்குமம
நிகரில்இறை நிற்கும் நிறைந்து. க

தன்நிலைமை மன்உயிர்கள் சாரத் தரும்சத்தி
பின்னமிலான் எங்கள் பிரான். உ

பெருமைக்கும் நுண்மைக்கும் பேர்அருட்கும் பேற்றின்
அருமைக்கும் ஒப்பின்மை யான். ந

ஆக்கி எவையும் அளித்தா சுடன்அடங்கப்
போக்கும்அவன் போகாப் புகல். ச

அருவும் உருவும் அறிஞர்க் கறிவாம்
உருவம் உடையான் உளன். ரு

பல்லா ருயிர்உணரும் பான்மையென மேல்ஒருவன்
இலலாதான் எங்கள் இறை. சு

ஆனு அறிவாய் அகலான் அடியவர்க்கு
வானுடர் காணுத மன். எ

எங்கும் எவையும் எரியுறுநீர் போல்ஏகம்
தங்கும்அவன் தானே தனி. அ

நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன். கூ

உன்னுமுள தையம் இலதுணர்வாய் ஓவாது
மன்னுபவம் தீர்க்கும் மருந்து. க0

## உ. உயிரவை நிலை

பிறந்தநாள் மேலும் பிறக்கும்நாள் போலும்
துறந்தோர் துறப்போர் தொகை. கக

திரிமலத்தார் ஒன்றதனிற் சென்றூர்கள் அன்றி
ஒருமலத்தா ராயும் உளர். கஉ

மூன்றுதிறத் துள்ளாரும் மூலமலத் துள்ளார்கள்
தோன்றலர்தொத் துள்ளார் துணை. கஙு

கண்டவற்றை நாளும கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக் கென்னே செயல். கச

பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்(கு)
அறிவென்ற பேர்நன் றற. கரு

ஒளியும இருளும் உலகும் அலர்கண்
தெளிவி லெனில்என் [1]செய. கசு

சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கண் இவை
உய்த்தல்சத சத்தாம் உயிர். கஎ

இருளில் இருளாகி எல்லிடத்தில் எல்லாம்
பொருள்கள் இலதோ புவி. கஅ

ஊமன்கண் போல ஒளியும் மிகஇருளே
யாம்மன்கண் காணு தவை. ககூ

அன்றளவும் ஆற்றும்உயிர் அந்தோ அருள்தெரிவ(து)
என்றளவொன் றில்லா இடர். உ0

---

[1] செயல்.

## ௩. இருள்மல நிலை

துன்றும் பவத்துயரும் இன்பும் துணைப்பொருளும்
இன்றென்ப தெவ்வாறும் இல். ௨௧

இருளான தன்றி இலதெவையும் ஏகப்
பொருளாகி நிற்கும் பொருள். ௨௨

ஒருபொருளுங் காட்டா திருள்உருவங் காட்டும்
இருபொருளுங் காட்டா திது. ௨௩

[1]அன்றளவி உள்ளொளியோ டாவி யிடை[2]யடங்கி
இன்றளவும் நின்ற திருள். ௨௪

பலரைப் புணர்ந்தும்இருட் பாவைக்குண் டென்றும்
[3]கணவற்குத் தோன்றாத கற்பு. ௨௫

பன்மொழிகள் என்உணரும் பான்மை தெரியாத
தன்மையிரு ளார்தந் தது. ௨௬

இருள்இன்றேல் துன்பென் உயிரியல்பேல் போக்கும்
பொருள்உண்டேல் ஒன்றாகப் போம். ௨௭

ஆசாதி யேல்அணைவ காரணம்என் முத்திநிலை
பேசா தகவும் பிணி. ௨௮

ஒன்று மிகினும் ஒளிகவரா தேல்உள்ளம்
என்றும் அகலா திருள். ௨௯

விடிவா மளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து. ௩௦

---

[1] அன்றளவின். [2] ஒடுங்கி. [3] கணவற்கும்.

## ௪. அருளது நிலை

அருளிற் பெரிய தகிலத்தில் வேண்டும்
பொருளிற் றலையிலது போல். ௩௧

பெருக்க [1]நுகர்வினை பேரொளியாய் எங்கும்
அருக்கன்என நிற்கும் அருள். ௩௨

ஊன்அறியா தென்றும் உயிர்அறியா தொன்றும்இவை
தான்அறியா தார்அறிவார் தான். ௩௩

பால்ஆழி மீன்ஆளும் பான்மைத் தருள்உயிர்கள்
மால்ஆழி ஆளும் மறித்து. ௩௪

அணுகு துணையறியா ஆற்றேனில் ஐந்தும்
உணர்வை உணரா துயிர். ௩௫

தரையை அறியாது தாமே திரிவோர்
[2]புரையை உணரார் புவி. ௩௬

மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர் வான்கெடுத்தோர்
தலைகெடுத்தோர் தற்கேடர் தாம். [ஞானம்

வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்திருளாம்
கள்ளத் தலைவர் கடன். ௩௮

பரப்பமைந்து கேண்மின்இது பாற்கலன்மேல் பூசை
கரப்பருந்த நாடும் கடன். ௩௯

இற்றைவரை இயைந்தும் ஏதும் பழக்கம்இலா
வெற்றுயிர்க்கு வீடு மிகை. ௪௰

---

[1] நுகர் வினைகள். [2] புரைய உணரா புவி.

## ரு. அருளுரு நிலை

அறியாமை உள்நின் றளித்ததே காணும்
குறியாக நீங்காத கோ. சக

அகத்துறுநோய்க் [1]குள்ளினரை அன்றி அதனைச்
சகத்தவரும் காண்பரோ தான். சஉ

அருளா வகையால் அருள்புரிய வந்த
[2]பொருள்ஆர் அறிவார் புவி. சந

பொய்இருண்ட சிந்தைப் பொறியிலார் போதமாம்
மெய்இரண்டும் காணார் மிக. சச

பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் [3]காணார் புவி. சரு

எமக்கென் எவனுக் கெவைதெரியும் அவ்வத்
தமக்கவனை வேண்டத் தவிர். சசா

விடநகிலம் மேவினுமமெய்ப் பாவகனின் மீளும்
கடனிலிருள் [4]போவதிவன் கண். சஎ

அகலத் தரும்அருளை ஆக்கும்வினை நீக்கும்
சகலர்க்கு வந்தருளும் தான். சஅ

ஆர்அறிவார் எல்லாம் அகன்ற நெறிஅருளும்
பேரறிவான் வாராத பின். சகூ

ஞானம் இவன்ஒழிய நண்ணியிடும் நற்கல்அனல்
பானு ஒழியப் படின். ருO

---

[1](கு)உள்ளினர். [2]பொருளா அறியா புவி. [3]காணு. [4]போவ
தெவன்.

## சா. அறியும் நெறி

நீடும் இருவினைகள் நேராக நேராதல்
கூடும்இறை சத்தி கொளல். ருக

ஏகன் அனேகன் இருள்கருமம் மாயைஇரண்
டாகஇவை ஆறுாதி யில். ருஉ

செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்
[1]உய்வான் உளனென் றுணர். ருங

ஊன்[2]உயிரால் வாழும் ஒருமைத்தே ஊனொடுயிர்
தான்உணர்வோ டொன்றும் தரம. ருச

தன்நிறமும் பல்நிறமும் தானும்கற் றன்மைதரும்
பொன்நிறம்போல் மன்நிறம்இப் பூ. ருரு

கண்தொல்லை காணும்நெறி கண்உயிர் [3]நாப்பண்நிலை
உண்டில்லை அல்ல தொளி. ருசா

புன்செயலி னோடு புலன்செயல்போல் நின்செயலை
மன்செயல தாக மதி. ருஎ

ஓராதே ஒன்றையும்உற் றுன்னாதே நீமுந்திப்
பாராதே பார்த்ததனைப் பார். ருஅ

களியே மிகு[4]புலனு மாய்க்கருதி ஞான
ஒளியே ஒளியாய் ஒளி. ருகூ

கண்டபடி யேகண்டு காணாமை காணாமல்
கொண்டபடி யேகொண் டிரு. சாO

---

[1]உய்வானும். [2]உயிரில். [3]நாப்பண்ணில்லை. [4]புலமாய்.

## எ. உயிர் விளக்கம்

தூநிழலார் தற்காருஞ் சொல்லார் தொகுமிதுபோல்
தான்அதுவாய் நிற்குந் தரம். சுக

தித்திக்கும் பால்தானும் [1]கைக்கும் திருந்திடும்நாப்
பித்தத்தில் தான்தவிர்ந்த பின். சுஉ

காண்பான் ஒளிஇருளிற் காட்டிடவும் தான்கண்ட
வீணபாவம் [2]எந்நாள் விடும். சுஙு

ஒளியும் இருளும் ஒருமைத்துப் பன்மை
தெளிவு தெளியார் செயல். சுச

கிடைக்கத் [3]தருமேநற் கேண்மையார்க் [4]கல்லால்
[5]எடுத்துச் சுமப்பானை இன்று. சுரு

வஞ்ச முடன்ஒருவன் வைத்த நிதிகவரத்
துஞ்சினனோ போயினனோ சொல். சுசு

தனக்கு நிழல்இன்றும் ஒளிகவரும் தம்ப
மெனக்கவர நில்லா திருள். சுஎ

உற்கைதரும் பொற்கை யுடையவர்போல் உண்மைப்பின்
நிற்க [6]அருளார் நிலை. சுஅ

ஐமபுலனுற் றும்கண்ட தென்றால் அதுவொழிய
ஐமபுலன்ஆர் தாம்ஆர் அதற்கு. சுகூ

தாமே தருபவரைத் தம்வலியி னுற்கருத
லாமே இவன்ஆர் அதற்கு. எ0

---

[1]காணும். [2]என்னுய்விடும். [3]தருமோ. [4](கு) எல்லாம்.
[5]எடுக்கச். [6]அருளா.

## அ. இன்புறு நிலை

இன்புறுவார் [1]துன்பார் இருளின் எழுஞ்சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின். எக

இருவர் மடந்தையருக் கென்பயன்இன் புண்டாம்
ஒருவன் ஒருத்தி உறின். எஉ

இன்பதனை [2]எய்துவார்க் கீயும் அவர்க்குருவம்
[3]இன்பகன மாதலினால் இல். எந

தாடலைபோற் கூடிஅவை தான்நிகழா வேற்றின்பக்
கூடலைநீ ஏகமெனக் கொள். எச

ஒன்றாலும் ஒன்றா திரண்டாலும் ஓசையெழா(து)
[4]என்றால்ஒன் றன்றிரண்டும் இல். எரு

உற்றாரும் பெற்றாரும் [5]ஓவா துரைஒழியப்
பற்றாரும் அற்றார் பவம். எசு

பேய்ஒன்றுந் தன்மை பிறக்கு மளவும்இனி
நீஒன்றுஞ் செய்யாது நில். எஎ

ஒண்பொருட்கண் உற்றார்க் குறுபயனே [6]யல்லாது
கண்படுப்போர் கைப்பொருள்போற் காண். எஅ

மூன்றாய தன்மைஅவர் தம்மின் மிகமுயங்கித்
தோன்றாத இன்பமதென் சொல். எகூ

[7]இன்பில் இனிதென்றல் இன்றுண்டேல் இன்றுண்டாம்
அன்பு நிலையே அது. அ௦

---

[1] துன்புறுவார். [2] எய்துமவர்க்கு. [3] இன்ப தனம். [4] என்றாலு மொன்றிரண்டு மில். [5] ஓவார் உரை. [6] அல்லாத. [7] அன்பின்.

## கூ. அஞ்செழுத்தருள் நிலை

அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்
பொருள்நூல் தெரியப் புகின். அக

இறைசத்தி பாசம் எழில்மாயை ஆவி
உறநிற்கும் ஓங்காரத் துள். அஉ

ஊன நடனம் ஒருபால் ஒருபாலாம்
ஞானநடம் தான்நடுவே நாடு. அ௩

விரியமந மேவியவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை [1]தீரிற் பெறும். அச

மாலார் திரோத மலமுதலாய் மாறுமோ
[2]மேலாசி மீளா விடின். அரு

ஆராதி ஆதாரம் அந்தோ அதுமீண்டு
பாராது மேல்ஓதும் பற்று. அசா

சிவம்முதலே ஆமாறு சேருமேல் தீரும்
பவம்இதுநீ ஓதும் படி. அஎ

வாசி யருளியவை வாழ்விக்கும் மற்றதுவே
ஆசில் உருவமுமாம் அங்கு. அஅ

ஆசில்நவா நாப்பண் அடையா தருளினல்
வாசியிடை நிற்கை வழக்கு. அகூ

எல்லா வகையும் இயம்பும் இவன்அகன்று
நில்லா வகையை நினைந்து. கூ0

---

[1] தீரப். [2] மேலாகி.

## கo. அணைந்தோர் தன்மை

ஓங்குணர்வின் உள்ளடங்கி [1]உள்ளத்துள் இன்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல். கூக

ஐந்தொழிலும் காரணர்களாம்தொழிலும் போகநுகர்
வெந்தொழிலும் மேவார் மிக. கூஉ

எல்லாம் அறியும் அறிவுறினும் ஈங்கிவர்ஒன்
றல்லா தறியார் அற. கூங

புலன்அடக்கித் தம்முதற்கட் புக்குறுவார் போதார்
தலம்நடக்கும் ஆமை தக. கூச

அவனை அகன் றெங்கின்றும் [2]ஆங்கவனும் எங்கும்
இவனையொழிந் துண்டாதல் இல். கூரு

உள்ளும் புறம்பும் ஒருதன்மைக் காட்சியருக்(கு)
எள்ளுந் திறம்ஏதும் இல். கூசா

உறுந்தொழிற்குத் தக்க பயன்உலகந் தத்தம்
வறுந்தொழிற்கு வாய்மை பயன். கூஎ

ஏன்ற வினைஉடலோ டேகும்இடை யேறும்வினை
தோன்றில் அருளே சுடும். கூஅ

மும்மை தரும்வினைகள் மூளாவாம் மூதறிவோர்க்(கு)
அம்மையும் இம்மையே யாம். கூகூ

கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக. கoo

---

[1] உள்ளத்தில். [2] ஆங்கவனும், ஆங்கவனுய்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## உமாபதி சிவாசாரியார்

அருளிச்செய்த

# 9. வினா வெண்பா

---

நீடும் ஒளியும் நிறையிருளும் ஓரிடத்துக்
கூடல் அரிது கொடுவினையேன் - பாடிதன்முன்
ஒன்றவார் சோலை உயர்மருதச் சம்பந்தா
நின்றவா றெவ்வாறு நீ. க

இருளில் ஒளிபுரையும் எய்தும் கலாதி
மருளின் [1]நிலையருளும் மானும் - [2]கருவியிவை
நீங்கின் இருளாம் நிறைமருதச் சம்பந்தா
ஈங்குன் அருளால்என் பெற. உ

புல்லறிவு நல்லுணர்வ தாகா பொதுஞானம் [ள்
[3]அல்லதில துள்ளதெனில் அன்னியமாம் - தொல்லையிரு
ஊனமலை யாவா றுயர்மருதச் சம்பந்தா
ஞானமலை யாவாய் நவில. ங

கனவு கனவென்று காண்பரிதாம் [4]காணில்
நனவில் அவைசிறிதும நண்ணு - முனைவன்அருள்
தான்அவற்றில் [5]ஒன்ரு தடமருதச் சம்பந்தா
யான்[6]அவத்தை காணுமா றென். ச

---

[1]நிலையருளின். [2]கருவியவை. [3]அல்லதுளதில்லதெனில்.
[4]காண. [5]ஒன்ருது தணமருத. [6]அவற்றைக்.

அறிவறிந்த தெல்லாம் [1]அசத்தாகு மாயின்
[2]குறியிறந்த நின்உணர்விற் கூடா - பொறிபுலன்கள்
தாமா அறியா தடமருதச் சம்பந்தா
[3]யாம்ஆர் அறிவார் இனி. ரு

சிற்றறிவு முற்சிதையிற் சேர்வார்இன் றும்சிறிது
மற்றதனில் நிற்கில்அருள் மன்னுவாம் - துற்றமுகில்
மின்கொண்ட சோலை வியன்மருதச் சம்பந்தா
என்கொண்டு காண்பே னியான். சு

உன்னரிய நின்உணர்வ தோங்கியக்கால் ஒண்கருவி
[4]தன்அளவும் நண்ணரிது தானாகும் - [5]என்அறிவு
தான்அறிய [6]வாரா தடமருதச் சம்பந்தா
யான்அறிவ தெவ்வா றினி. எ

அருவேல் உருவன் றுருவேல் அருவன்(று)
இருவேறும் ஒன்றிற் கிசையா - உருவூரிற்
காணில் உயர்கடந்தைச் சமபந்தா கண்டஉடற்
பூணும்இறைக் கென்னும் புகல். அ

இருமலத்தார்க் கில்லை உடல்வினைஎன் செய்யும்
[7]ஒருமலத்தார்க் காராய் உரைப்பேன் - திரிமலத்தார்
ஒன்றாக உள்ளார் உயர்மருதச் சம்பந்தா
அன்றாகில் ஆமா றருள். கூ

[8]ஒன்றிரண்டாய் நின்றொன்றில் ஓர்மையதாம் [9]ஒன்றாக
நின்றிரண்டா மென்னில்[10]உயிர் நேராகும்-துன்றிருந்
[11]தாங்கியவாழ் தண்கடந்தைச் சம்பந்தா யானாகி [தார்
ஓங்கியவா றெவ்வா றுரை. க0

---

[1]அசததாயின் றாகும். [2]குறியிறந்து, குறியறிந்து. [3]ஆமாறறிவார். [4]தன்னளவில். [5]என்னுணாவு. [6]வாராது தண்மருத. [7]ஒருமலததாா ஆரா, (க்கு) ஆரை. [8]இது அடுத்த பாட்டின்பின். [9]ஒன்றாகி, ஒன்றாகும். [10]உயிராகும் - துன்றிருந்தாா. [11]தாங்கியவர்.

காண்பானுங் காட்டுவதும் காண்பதுவும் நீத்துண்மை
காண்பார்கள் நன்முத்தி காணுர்கள் - காண்பானுங்
காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்
வாட்டுமநெறி வாரா தவர். கக

[1]ஒன்றி நுகர்வதிவன் ஊணும் உறுதொழிலும்
[2]என்றும் இடையில் இடமில்லை - ஒன்றித்
தெரியா அருள்மருதச் சம்பந்தா சேர்ந்து
பிரியாவா றெவ்வாறு பேசு. கஉ

அருளால் உணர்வார்க் ககலாத செம்மைப்
பொருளாகி நிற்கும் பொருந்தித் - தெருளா
விணுவெண்பா உண்மை [3]விணுவாரேல் ஊமன்
கனவின்பால் எய்துவிக்கும் காண். கங



[1]ஒன்று. [2]ஒன்று மிடையிலிட முண்டல்ல - ஒன்றில். [3]விணு
வாரை.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

**உமாபதி சிவாசாரியார்**

அருளிச்செய்த

# 10. போற்றிப்பஃறொடை



பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிர் ஆங்கவர்கோன்
மாமன்னு சோதி மணிமார்பன் - நாமன்னும்

வேதம்வே தாந்தம் விளக்கஞ்செய் விந்துவுடன்
நாதம்நா தாந்தம் நடுவேதம - போதத்தால்

ஆமளவும் தேட அளவிறந்த அப்பாலைச்
சேம ஒளிஎவருந் தேறும்வகை - மாமணிசூழ்

மன்றுள் நிறைந்து பிறவி வழக்கறுக்க
நின்ற நிருத்த நிலைபோற்றி - குன்றாத

5 பல்லுயிர்வெவ் வேறு படைத்தும் அவைகாத்தும்
எல்லை இளைப்பொழிய விட்டுவைத்தும் - தொலலையுறும்

அந்தம் அடிநடுவென் றெண்ண அளவிறந்து
வந்த பெரிய வழிபோற்றி - முந்துற்ற

நெல்லுக் குமிதவிடு நீடுசெம்பிற் காளிதமுந்
தொல்லைக் கடல்தோன்றத் தோன்றவரும் - எல்லாம்

ஒருபுடை யொப்பாய்த்தான் உள்ளவா றுண்டாய்
அருவமாய் எவ்வுயிரும் ஆர்த்தே - உருவுடைய

மாமணியை உள்ளடக்கும் மாநாகம் வன்னிதனைத்
தான்அடக்குங் காட்டத் தகுதியும்போல் - ஞானத்தின்

10 கண்ணை மறைத்த கடியதொழில் ஆணவத்தால்
எண்ணுஞ் செயல்மாண்ட எவ்வுயிர்க்கும் - உள்நாடிக்

கட்புலனுற் காணார்தம் கைக்கொடுத்த கோலேபோற்
பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண் - முற்பால்

தனுகரண மும்புவன முந்தந் தவற்றுல்
[1]மனமுதலால் வந்தவிகா ரத்தால் - [2]வினையிரண்டுங்

காட்டி அதனுற் பிறப்பாக்கிக் கைக்கொண்டும்
மீட்டறிவு காட்டும வினைபோற்றி - நாட்டுகின்ற

எப்பிறப்பும் முற்செய் இருவினையால் நிச்சயித்துப்
பொறபுடைய தந்தைதாய் போகத்துட் - கர்ப்பமாய்ப்

15 புல்லிற் பனிபோற் புகுந்திவலைக் குட்படுங்கால்
எல்லைப் படாஉதரத் தீண்டியதீப் - பலவகையால்

அங்கே கிடந்த அனுதிஉயிர் தம்பசியால்
எங்கேனு மாக எடுக்குமென - வெங்கும்பிக்

காயக் கருக்குழியிற் காத்திருந்துங் காமியத்துக்
கேயக்கை கால்முதலாய் எவவுறுப்பும் - ஆசறவே

செய்து திருத்திப்பின் பியோகிருத்தி முன்புக்க
வையவழி யேகொண் டணைகின்ற - பொய்யாத

வல்லபமே போற்றிஅம் மாயக்கால் தான்மறைப்ப
நல்ல அறிவொழிந்து நன்குதீ(து) - [3]ஒலலையுரு

20 அக்காலந் தன்னிற பசியையறி வித்தழுவித்(து)
உக்காவி சோரத்தாய் உள்நடுங்கி - மிக்கோங்குஞ்

சிந்தை உருக முலையுருகுந் தீஞ்சுவைப்பால்
வந்துமடுப் பக்கண்டு வாழ்ந்திருப்பப் - பந்தித்த

பாசப் பெருங்கயிற்றுற் பல்லுயிரும் பாலிக்க
நேசத்தை வைத்த நெறிபோறறி - ஆசற்ற

பாளைப் பசும்பதத்தும் பாலனும் அப்பதத்தும்
நாளுக்கு நாட்சகல ஞானத்து - மூள்வித்துக்

கொண்டாள [4]ஆளக் கருவிகொடுத் தொக்கநின்று
பண்டாரி யான படிபோற்றி - தண்டாத

---

[1]மனமுதலாய். [2]இருவினையும். [3]எல்லையுரு. [4]வாழக்.

25 புன்புலால் போர்த்த புழுக்குரம்பை மாமனையில்
அன்பு[1]சேர் கின்றனகட் டைந்தாக்கி - முன்புள்ள

உண்மை நிலைமை ஒருகால் அகலாது
திண்மை மலத்தாற் சிறையாக்கிக் - கண்மறைத்து

மூலஅருங் கட்டில்உயிர் மூடமாய் உட்கிடப்பக்
கால நியதி யதுகாட்டி - மேலோங்கு

முந்திவியன் கட்டில்உயிர் சேர்த்துக் கலைவித்தை
அந்த அராக மவைமுன்பு - தந்த

தொழிலறி விச்சை துணையாக மானின்
எழிலுடைய முக்குணமும் எய்தி - [2]பொழியருளா

30 மன்னும் இதயத்துச் சித்தத்தாற் கண்டபொருள்
இன்ன பொருளென் றியம்பவொண்ணு - அந்நிலைபோய்க்

கண்டவியன் கட்டிற் கருவிகள்ஈ ரைந்தொழியக்
கொண்டுநிய மித்தற்றை நாட்கொடுப்பப் - பண்டை

இருவினையால் முன்புள்ள இன்பத்துன் பங்கள்
மருவும்வகை அங்கே மருவி - உருவுடன்நின்(று)

ஓங்கு நுதலாய ஓலக்க மண்டபத்திற்
போங்கருவி யெலலாம் புகுந்தீண்டி - நீங்காத

முன்னை [3]மலத்தினிருள் மூடா வகையகத்துள்
துன்னும்இருள் நீக்குஞ் சுடரேபோல் - அந்நிலையே

35 சூக்கஞ் சுடருருவிற் பெய்து தொழிற்குரிய
ராக்கிப் பணித்த அறம்போற்றி - வேட்கைமிகும

உண்டிப் பொருட்டால் ஒருகால் அவியாது
மண்டிஎரி யும்பெருந்தீ மாற்றுதற்குத் - [4]திண்டிறல்சேர்

வல்லார்கள் வல்ல வகையாற் றொழில்புரிதல்
எல்லாம் உடனே ஒருங்கிசைந்து - [5]சொல்காலை

முட்டாமற் செய்வினைக்கும் முற்செய்வினைக் குஞ்செலவு
பட்டோலை தீட்டும் படிபோற்றி - நட்டோங்கும்

---

[1]தோய்கின்ற. [2]அருளோடு, மருளோடு. [3]மலத்திருளுள்.
[4]திண்டிறலால். [5]செல்காலை.

இந்நிலைமை மானுடருக் கேயன்றி எண்ணிலா
மன்னுயிர்க்கும் இந்த வழக்கேயாய் - முன்னுடைய

40 நாள்நாள் வரையில் உடல்பிரித்து நல்வினைக்கண்
வாணாளின் மாலாய் அயனாகி - நீள்நாகர்

வானாடர் கோமுதலாய் வந்த பெரும்பதத்து
நானா விதத்தால் நலம்பெறுநாள் - தான்மாள

வெற்றிக் கடுந்தூதர் வேகத் துடன்வந்து
பற்றித்தம் வெங்குருவின் பாற்காட்ட - இற்றைக்கும்

இல்லையோ பாவி பிறவாமை என்றெடுத்து
நல்லதோர் இன்சொல் நடுவாகச் - சொல்லி இவர்

செய்திக்குத் தக்க செயலுறுத்து வீர்என்று
வெய்துற் றுரைக்க விடைகொண்டு - மையல்தருஞ்

45 செக்கி னிடைத்திரித்தும் தீவாயி லிட்டெரித்தும
தக்கநெருப் புத்தூண் தழுவுவித்தும் - மிக்கோங்கு

நாராசங் காய்ச்சிச் செவிமடுத்தும் நாஅரிந்தும
ஈராஉன் ஊனைத்தின் என்றடித்தும் - பேராமல்

அங்காழ் நரகத் தழுத்துவித்தும் பின்னுந்தம்
வெங்கோபம் மாறாத வேட்கையராய் - இங்கொருநாள்

எண்ணிமுதற் காணாத இன்னற் கடுநரகம்
பன்னெடுநாட் செலலும் பணிகொண்டு - முன்நாடிக்

கண்டு கடன்கழித்தல் காரியமாம் என்றெண்ணிக்
கொண்டுவரு நோயின் குறிப்பறிவார் - மண்டெரியிற்

50 காய்ச்சிச் சுடவறுக்கக் கண்ணூரிக்க நன்னிதியம்
ஈய்த்துத்தாய் தந்தைதமர் இன்புறுதல் - வாய்த்தநெறி

ஓடியதே ரின்கீழ் உயிர்போன கன்றாலே
நீடுபெரும் பாவம்இன்றே நீங்குமென - நாடித்தன்

மைந்தனையும் ஊர்ந்தோன் வழக்கே வழக்காக
நஞ்சனைய சிந்தை நமன்தூதர் - வெஞ்சினத்தால்

அல்ல லுறுத்தும் அருநரகங் கண்டுநிற்க
வல்ல கருணை மறமபோற்றி - பல்லுயிர்க்கும்

இன்ன வகையால் [1]இருவினைக்கண் நின்றருத்தி
முன்னைமுத லென்ன முதலில்லோன் - நல்வினைக்கண்

55 எல்லா உலகும் எடுப்புண் டெடுப்புண்டு
செல்காலம் பின்நரகஞ் சேராமே - நல்லநெறி

எய்துவதோர் காலம்தன் அன்பரைக்கண் டின்புறுதல்
உய்யும் நெறிசிறிதே உண்டாக்கிப் - பையவே

மட்டாய் மலராய் வருநாளில் முன்னைநாள்
மொட்டாய் உருவாம முறைபோலக் - கிட்டியதோர்

நல்ல பிறப்பிற் பிறப்பித்து நாடுமவினை
எல்லை யிரண்டும் இடையொப்பிற் - பல்பிறவி

அத்தமதி லன்றோ அளவென்று பார்த்திருந்து
சத்தி பதிக்கும் தரம்போற்றி - முத்திதரும்

60 நன்னெறிவிஞ் ஞானகலர் நாடுமலம் ஒன்றினையும்
அந்நிலையே உள்நின் றறுத்தருளிப் - பின்அன்பு

மேவா விளங்கும் [2]பிரளயா கலருக்குத்
தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப் - பூவலயந்

தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல
முன்நின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை - அன்னவனுக்

காதிகுண மாதலினால் ஆடுந் திருத்தொழிலும்
சோதி மணிமிடற்றுச் சுந்தரமும - பாதியாம்

பச்சை யிடமும் பவளத் திருச்சடைமேல்
வைச்ச நதியும் மதிக்கொழுந்தும் - [3]அச்சமற

65 ஆடும அரவும் அழகார் திருநுதல்மேல
நீடுருவ வன்னி நெடுங்கண்ணும - கேடிலயங்

கூட்டுந் தமருகமும கோல எரியகலும
பூட்டரவக் கச்சும புலியதளும் - வீட்டின்ப

வெள்ளத் தழுத்தி விடுந்தாளி னும்அடியார்
உள்ளத்தி னுமபிரியா ஒண்சிலமபும் - கள்ளவினை

வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலும்
ஒன்றும்உருத் தோன்றாமல் உள்ளடக்கி - என்றும்

---

[1]இருவினைகள். [2]பிரளயாகலர் மெய்காணத். [3]அச்சமுற.

இறவாத இன்பத் தெமைஇருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்து - நறவாருந்
70 தாருலா வும்புயத்துச் சம்பந்த நாதனென்று
பேரிலா நாதன்ஒரு பேர்புனைந்து - பாரோர்தம்

உண்டி உறக்கம் பயம்இன்பம் ஒத்தொழுகிக்
கொண்டு மகிழ்ந்த குணமபோற்றி - மிண்டாய

ஆறு சமயப் பொருளும்அறி வித்தவற்றிற்
பேறின்மை எங்களுக்கே பேருக்கித் - தேருத

சித்தந் தெளியத் திருமேனி கொண்டுவரும்
அத்தகைமை தானே அமையாமல் - வித்தகமாஞ்

சைவ நெறியிற் சமய முதலாக
எய்தும் அபிடேகம் எய்துவித்துச் - செய்யதிருக்
75 கண்ணருளால் நோக்கிக் கடியபிறப் பாற்பட்ட
புண்ணும இருவினையும் போய்அகல - வண்ணமலர்க்

கைத்தலத்தை வைத்தருளிக் கல்லாய நெஞ்சுருக்கி
மெய்த்தகைமை யெலலாம் விரித்தோதி - ஒத்தொழுகும்

சேணூர் இருள்வடிவும் செங்கதிரோன் [1]பால்நிற்பக்
காணு தொழியும கணக்கேபோல் - ஆணவத்தின்

ஆதி குறையாமல் என்பால அணுகாமல்
நீதி நிறுத்தும் நிலைபோற்றி - மேதக்கோர்

செய்யுஞ் சரியை கிரியா யோகத்தால்
எய்துஞ்சீர் முத்திபதம எய்துவித்து - [2]மெய்யன்பாற்
80 காணத் தகுவார்கள் கண்டால் தமைப்பின்பு
நாணத் தகுமஞான நன்னெறியை - வீணே

எனக்குத் தரவேண்டி எல்லாப் பொருட்கும்
மனக்கும் மலரயன்மால் வானோர் - நினைப்பினுக்குந்

தூரம்போ லேயணிய சுந்தரத்தாள் என்தலைமேல
ஆரும் படிதந் தருள்செய்த - பேராளன்

தந்தபொருள் ஏதென்னில் தான்வேறு நான்வேருய்
வந்து புணரா வழக்காக்கி - முந்திஎன்றன்

---

[1]பால் நிற்பார். [2]மெய்யன்பிற்.

உள்ளம்என்றும் நீங்கா தொளித்திருந்து [1]தோன்றிநிற்குங்
கள்ளம்இன்று காட்டும் கழல்போற்றி - [2]வள்ளமையால்
85 தன்னைத் தெரிவித்துத் தன்றருளி னுட்கிடந்த
என்னைத் தெரிவித்த [3]எல்லையின்கண் - மின்ஆரும்
வண்ணம் உருவம் மருவுங் குணமயக்கம்
எண்ணுங் கலைகாலம் எப்பொருளும்-முன்னம்எனக்(கு)
இல்லாமை காட்டிப்பின் பெய்தியவா காட்டி[4]இனிச்
செலலாமை காட்டுஞ் செயல்போற்றி - எல்லாம்போய்த்
தமமைத் தெளிந்தா ராய்த் தாமே பொருளாகி
எம்மைப் புறங்கூறி இன்புற்றுச் - செமமை
அவிகாரம் பேசும் அகம்பிரமக் காரர்
வெளியாம் இருளில் விடாதே - ஒளியாய்நீ
90 நின்ற நிலையே நிகழ்த்தி ஒருபொருள்வே
றின்றியமை யாமை எடுத்தோதி - ஒன்றாகச்
சாதித்துத் தம்மைச் சிவமாக்கி இப்பிறவிப்
பேதந் தனில்இனபப் பேதமுறாப் - பாதகரோ(டு)
ஏகமாய்ப் போகாமல் எவ்விடத்துங் காட்சிதந்து
போகமாம பொற்றருளி னுட்புணர்த்தி - ஆதியுடன்
நிற்க அழியா நிலைஇதுவே என்றருளி
ஒக்க வியாபகந்தன் னுட்காட்டி - மிக்கோங்கும்
ஆனந்த மாக்கடலில ஆரா அமுதளித்துத்
தான்வந்து செய்யுந் தகுதியினால் - ஊன்உயிர்தான்
95 முன்கண்ட காலத்தும் நீங்காத முன்னோனை
என்கொண்டு போற்றிசைப்பேன் யான். க

வெண்பா

போற்றி திருத்தில்லை போற்றி சிவபோகம
போறறியவன மெயஞ்ஞானப புண்ணியநூல - போற்றிஎங்க
வெம்பந்த வாழ்க்கைவிட வேறாய்வந் துண்ணின்ற [ள்
சம்பந்த மாமுனிபொற் றாள். உ



[1]தோன்றிநின்ற, தோன்ற நிற்கும். [2]வள்ளன்மையால்.
[3]எல்லைக்கண். [4]அதிற்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# 11. கொடிக் கவி*

கட்டளைக் கலித்துறை

ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடமொன்று[1]மேலிடிலொன்
றொளிக்கு மெனினும் இருளட ராதுள் ளுயிர்க்குயிராய்த்
தெளிக்கு மறிவு திகழ்ந்துள தேனுந் திரிமலத்தே
குளிக்கும உயிரருள் கூடும் படிக்கொடி கட்டினனே. க

வெண்பா

பொருளாம் பொருளேது போதேது கண்ணே(து)
இருளாம் வெளியே திரவே(து) - அருளாளா
நீபுரவா [2]வையமெலாம் நீஅறியக் கட்டினேன்
கோபுர [3]வாசற் கொடி. உ

---

*இதன் கீழுள்ள பாடல்கள் 3, 2, 1, 4 என்ற வரிசைப்படி ஒரு பிரதியில் காணப்படுகின்றன. மற்றொரு பிரதியில், 'அஞ் செழுத்தும' என்ற கடைசிப்பாடல் இல்லை;

'அந்த மலமறுத்திங் கான்மாவைக் காட்டியதற்
கந்த அறிவை அறிவித்தங் - கிந்தறிவை
மாறாமல் மாற்றி மருவுசிவப் பேறென்றும்
கூறாமல் கூறக் கொடி'

என்ற துகளறுபோத இறுதிச் செய்யுள் இரண்டாம் பாடலாகவும், மற்றப் பாடல்கள் 4, 3, 1 என்ற வரிசையிலும் காணப்படுகின்றன.

[1]மேவிடில். [2]வையமில்லை. [3]வாயிற்.

வாக்காலும் மிக்க மனத்தாலும் எக்காலும்
[1]தாக்கா துணர்வரிய தன்மையனை - நோக்கிப்
பிறித்தறிவு [2]தம்மிற் பிரியாமை தானே
குறிக்கும்அருள் நல்கக் கொடி. ௩

[3]அஞ்செழுத்தும்எட்டெழுத்தும்ஆறெழுத்தும்நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும் - நெஞ்சழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமற் [4]காட்டக் கொடி. ௪



[1]தாக்காலுணாவரிய, தாக்காதுணர்வாய. [2]தம்முள். [3]அஞ்செழுதநை எட்டெழுத்தை ஆறெழுதநை நாலெழுத்தைப், பிஞ்செழுதநை மேலைப் பெருவெழுத்தை. [4]கூறக்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

**உமாபதி சிவாசாரியர்**

அருளிச்செய்த

# 12. நெஞ்சு விடு தூது

கலிவெண்பா

## இறைவனியல்பு

பூமேவும் உந்திப் புயல்வண்ணன் [1]பொற்பதுமத்
தார்மேவும் மார்பன் சதுமுகத்தோன் - தாம்மேவிப்

பன்றியும் அன்னமுமாய்ப் பாரிடந்தும் வான்பறந்தும்
என்றும் அறியா இயல்பினன் - அன்றியும்

இந்திரனும் வானோரும் ஏனோரும் எப்புவியும்
மந்தர வெற்பும் மறிகடலும் - மந்திரமும்

வேதமும் வேத [2]முடிவின்விளை விந்துவுடன்
நாதமுங் காணா நலத்தினன் - ஓத

5 அரியான் எளியான் அளவிறந்து நின்ற
பெரியான் சிறியான்பெண் பாகன் - தெரியா

அருவான் உருவான் [3]அருவுருவ மல்லான்
மரியான் மரிப்பார் மனத்தான் - பரிவான

மெய்யர்க்கு மெய்யன் வினைக்குவினை யாயினன்
பொய்யர்க்குப் பொய்யாய பொய்யினன் - ஐயன்

படநாகம் பூண்ட பரமன் பசுவின்
இடமாய் நிறைந்த இறைவன் - சுடரொளியான்

---

[1]பொற்பமைந்த நாமேவு மாதுபுணர் நான்முகத்தோன். [2]முடிவும்விளை விந்துவுடன்; முடிவும் விளைவிந்து நாதமும். [3]அருவுருவு மில்லான், அல்லான்.

உயிரியல்பு

என்றுமுளன் அன்றளவும் யானும் உளனாகி
நின்றநிலை யிற்றரித்து நில்லாமற் - சென்றுசென்று

10 தோற்றியிடும் அண்டஞ் சுவேதசங்கள் [1]பாரின்மேற்
சாற்றுமஉற் பீசஞ சராயுசங்கட் - கேற்றபிறப்

பெல்லாம் பிறந்தும் இறந்தும் [2]இருவினைகள்
பொல்லாங்கு துய்க்கும் பொறியிலியேன் - கல்லா

உணர்வின் மிசையோ டுலகா யதனைப்
புணர்வதொரு புல்லறிவு பூண்டு - கணையிற்

கொடிதெனவே சென்று [3]குடிப்பழியே செய்து
கடிய கொலைகளவு காமம் - படியின்மிசைத்

தேடி யுழன்று தெரிவைத் தெரியாமல்
வாடி இடையும மனந்தனக்கும் - நாடிஅது

15 போன வழிபோகும் புந்திக்கும் புந்தியுடன்
ஆன திறலார் அகந்தைக்கும - மேனி

அயர [4]அயரும் அழிய அழியும்
உயிரின் துயரம உரையேன் - வயிரமே

பாசபந்தம்

கொண்டதொரு காமனுக்கும் கோபனுக்கும மோகனுக்
மண்டு மதமாச் சரியனுக்கும - திண்டிறலசேர் [கும்

இந்திரியம் பத்துக்கும் ஈரைந்து மாத்திரைக்கும்
அந்தமிலாப் பூதங்கள் [5]ஐந்துக்கும் - சிந்தைகவர்

மூன்றுகுற்றம் மூன்றுகுணம் மூன்றுமலம் மூன்றவத்தை
ஏன்றுநின்று செய்யும் [6]இருவினைக்குந் - தோன்றாத

20 வாயுஒரு பத்துக்கும மாறாத [7]வல்வினையே
யாய கிளைக்கும அருநிதிக்கும் - நேயமாம்

இச்சை கிரியை யிவைதரித்தங் கெணணிலா
அச்சங் கொடுமை யவைபூண்டு - கச்சரவன்

---

[1]மணணின்மேல். [2]இருவினையின். [3]குடிப்பழுதே. [4]அயா.
[5]ஐந்தினுக்கும். [6]இருவினைக்குத. [7]வல்வினையேனாய.

சீரில்நிலை நில்லாது திண்டாடும் பல்கருவி
[1]வாரில்அகப் பட்டு மயங்கினேன் - தேருங்கால்

உன்னை ஒழிய உறவில்லை என்னுமது
தன்னை அறிவை தனியறிவை - முன்னம்

*தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவர் என்று - நிலைத்தமிழின்

25 தெய்வப் புலமைத் திருவள் ளுவர்உரைத்த
மெய்வைத்த சொல்லை விரும்பாமல் - ஐவர்க்கும்

ஆவனவே செய்தங் கவர்வழியைத் தப்பாமற்
பாவமெனும் பௌவப் பரப்பழுந்திப் - பூவையர்தம்

கண்வலையிற் பட்டுக் கலவிக் கலைபயின்றங்(கு)
உண்மை [2]நிலையுணர்ச்சி ஓராமல் - திண்மையினால்

நாவிற் கொடுமை பலபிதற்றி நாடோறுஞ்
சாவிற் பிறப்பில் தலைப்பட்டிங் - காவிநிலை

நிற்கும்வகை பாராய் நிலையான நெஞ்சமே
பொற்பினுடன் யானே புகலக்கேள் - வெற்பின்மிசை

### இறைவன் நிலை

30 வந்திருக்க வல்லான் மதியாதார் வல்அரணம்
செந்தழலின் மூழ்கச் சிரித்தபிரான் - அந்தமிலா

வேத முடிவில் விளைவில் விளைவிலொளி
ஆதி யமலன் நிமலனருட் - போத

அறிவி லறிவை அறியு மவர்கள்
குறியுள் புகுதுங் குணவன் - நெறிகொள்

வெளியில் வெளியில் வெளியன் வெளியில்
ஒளியில் ஒளியில் ஒளியன் - ஒளியில்

அளியில் அளியில் அளியன் அளியில்
அளவில் அளவில் அளவன் - அளவிறந்து

35 நின்றான் அனைத்தும் நிறைந்தான் நினைப்பவர்பாற்
சென்றான் தெரியத் தெரியாதான் - குன்றா

---

*குறள், ௩௪௮. [1]வாரி. [2]அறிவுணர்ச்சி.

விளக்காய் நிறைந்த விரிசுடரான் [1]மண்மேல்
துளக்காமல் நின்றபெருஞ் சோதி - உளக்கண்ணுக்

கல்லாது தோன்று அமலன் அகிலமெலாம்
நில்லாமல் நின்ற நிலையினன் - சொல்லாரும்

ஈசன் பெருமை இருவினையேன் இன்றுனக்குப்
பேசுந் தகைமையெலாம் பேணிக்கேள் - பாசம்

தசாங்கம் - மலை

பலவுங் கடந்து பரிந்தருள்சேர் பண்பாற்
குலவி விளங்குகுணக் குன்றேன் - இலகவே

ஆறு

40 செய்ய தருமச் செழுங்கிரியின் மீதிழிந்து
வையம் பரவ [2]மகிழ்ந்தெழுந்தங் - கையம்

களவுபயம் காமம் கொலைகோபம் காதி
அளவில்[3]வினை யெல்லாம் அழித்திங் - குளமகிழத்

தொம்மெனவே எங்கும் முழங்கிச் சுருதிபயில்
செம்மைதரும் ஆகமங்கள் சேர்ந்தோடி - மும்மலத்தின்

காடடங்க வேர்பறித்துக் கல்விக் கரைகடந்தங்(கு)
ஓடுபல் பூதத் துணர்வழித்து - நீடுபுகழ்

மெய்வாய்கண் மூக்குச் செவியென்னப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை யவா[4]அகற்றி - நையும்இயல்

வாக்குப்பா தம்பாணி பாயுருபத் தம்பலவும்
45 நீக்கிச் செறிந்து நிறைந்தோடிப் - போக்கரிய

பந்தமெனுஞ் சோலை பறித்துப் பரந்தலைக்கும்
அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம் - சிந்திவிழ

மோதி [5]அருணீர்மை ஓங்கிவிறல் முக்குணமுங்
காதி உரோமமெலாங் கைகலந்து - சீதப்

புளகம் [6]அரும்பப் புலன்மயக்கம் போக்கி
விளைவில் புலன்முட்ட மேவிக் - களபதன

---

[1]விணமேல். [2]மகிழ்ந்தெழுந் தையம். [3]வினையை யழித்திங்கு.
[4]அழித்து. [5]அலைக்கும் அருணீர்மை முககுணமும். [6]அருமபிப்.

மாதர் மயக்கம் அறுத்துவளர் [1]மண்டலத்துச்
சோதியொரு [2]மூன்றினையுஞ் சோதித்து - [3]நீதியினால்

50 ஆதாரம் ஆறினுஞ்சென் றுறிஅடல் வாயுக்கள்
மீதான பத்தும் மிகப்பரந்து - காதிப்

பிருதிவிஅப் புத்தேயு வாயுஆ காய
உறுதி நிலமைந்தும் ஓடி - மறுவிலா

நான்முகன்மால் ஈசன் மகேசன் நலஞ்சிறந்த
தான்முகம் ஐந்தாஞ் சதாசிவமும் - ஆனதொரு

விந்துநா தங்கடந்து சுத்த வெறுவெளியில்
அந்தமிலாப் பாழுடங்கத் தேக்கியபின் - முந்திவரும்

அவ்வறிவுக் கப்பாலுஞ் சென்றகண்டம் [4]உள்ளடக்கிச்
செவ்வறிவே யாகித் [5]திகைப்பொழிந்திட் - டெவ்வறிவுந்

55 தானாய [6]வீடளித்துத் தன்னிற் பிறிவிலா
ஊனாகி எவ்வுயிர்க்கும் உள்புகுந்து - மேனியிலா

அஞ்சவத்தை யுங்கடந் தாயபெரும் பேரொளிக்கே
தஞ்சமெனச் சென்று [7]தலைப்பட்டு - வஞ்சமறத்

தான்அந்தம் இலலாத தண்ணளியால் ஓங்கிவரும்
ஆனந்தம் என்பதோர் ஆறுடையான் - [8]ஆனந்தம்

நாடு

பண்ணும் பயன்சுருதி ஆகமங்கள் பார்த்துணர்ந்து
நண்ண அரியதொரு நாடுடையான் - எண்ணெண்

ஊர்

கலையால உணர்ந்து கருத்தறிந்து காம
நிலையான தெல்லாமும் நீத்தங் - கலைவறவே

60 தேட்டற்ற சிந்தை சிவஞான மோனத்தால்
ஓட்டற்று வீற்றிருக்கும ஊருடையான் - நாட்டத்தால்

---

[1]மண்டலத்தின். [2]மூன்றும். [3]நீதிபுனை. [4]உள்ளாக்கிச்.
[5]திகைப்பொழிந்தங் கெவ்வறிவும். [6]வீடருளி. [7]தலைப்பெய்தி.
[8]வானந்தம் பண்ணின்.

*தார்*

'தெண்ணீ ரருவிவிழச் சிந்தைமயக் கந்தெளிந்(து)
உண்ணீர்மை [1]யெய்த உரோமமெலாம் - நண்ணும்

புளகம் புனைமெய்யர் பொய்யிற்கூ டாமல்
உளகம்பங் கொண்டுள் உருகி - அளவிலா

மாலா யிருக்கு மவர்மனத்தை வாங்கஅருள்
மேலாய் விலங்கலங்கல் மெய்யினன் - தோலாத

குதிரை

வானம் புவனம் மலைகடல்ஏழ் பாதாளம்
ஊன்ஐந்து பூதத் துயிருணர்ச்சி - ஞானமாய்

65 எலலாமாய் அல்லவாய் எண்ணுவார் [2]எண்ணத்து
நில்லாமல் நிற்கும்நீள் வாசியான் - சொல்ஆரும்

*யானை*

பாதாளம் ஊடுருவிப் பாரேழும் விண்ணேழும்
ஆதார மாகி அகண்டம்நிறைந் - தோத

அரிதாய் எளிதாய் அருமறையா றங்கத்
துருவாய் உயிராய் உணர்வாய்ப் - பெரிதாய

வெய்யதுயர்ப் பாசமற வீசியே வெம்பிறவித்
துய்ய கடலைத் துகளெழுப்பி - ஐயமுறுங்

காமக் [3]குரோதலோப மோகமதங் காய்ந்தடர்த்துச்
சாமத் தொழிலின் தலைமிதித்து - நாமத்தாற்

70 கத்துஞ் சமயக் கணக்கின்விறற் கட்டறுத்துத்
தத்தம் பயங்[4]கொலைகள் ஆங்கழித்தே - தத்திவரும்

பாசக் குழாத்தைப் படஅடித்துப் பாவையர்தம்
ஆசைக் கருத்தை அறவீசி - நேசத்தால்

ஆனவே கங்கொண் டருள்மும் மதத்தினால்
ஊனையார் தத்துவங்க ளுள்புகுந்து - தேனைப்

பருகிக் களித்துயர்ந்து பன்மறைநாற் கோட்டால்
மருவித் திகழ்ஞான ஆனையான் - இருமுச்

---

[1]எய்தி. [2]எண்ணததில். [3]குரோதமதமாச்சரியங். [4]கொலையை ஆஙகழித தெத்திவரும்.

*கொடி*

சமையங் கடந்து தனக்கொப் பிலாது
சுமைதுன்பம் நீக்குந் துவசன் - கமையொன்றித்

*முரசு*

75 தம்மை மறந்து தழலொளியுள் ளேயிருத்தி
இமமை மறுமை இரண்டகற்றிச் - செம்மையே

வாயுவை ஓடா வகைநிறுத்தி வானத்து
வாயுவையும் அங்கே யுறஅமைத்துத் - [1]தேயுவால்

என்றும ஒருதகைமை யாயிருக்கும் இன்பருளே
நின்று முழங்கும் நெடுமுரசோன் - அன்றியும்

*ஆணை*

மாலும அயனும் வகுத்தளித்த வையமெலாஞ்
சாலும்அதற் கப்பாலும எப்பாலும் - மேலை

உலகும் உலகால் உணரவொண்ணு ஊரும்
இலகி நடக்கும்எழில் ஆணையான் - அலகிறந்த

*இறைவன் பெருமை*

80 காட்சியான் காட்சிக்குங் காணுன் கலைஞான
ஆட்சியான் ஆட்சிக்கும் ஆயினுன் - சூட்சியான்

பாருந் திசையும் படரொளியா லேநிறைந்தான்
தூருந தலையுமிலாத் தோன்றலான் - வேராகி

வித்தாகி வித்தின் [2]விளைவாகி மேவுதனுச்
சத்தாதி பூதங்கள் தாஞகிச் - சுத்த

வெறுவெளியாய்ப் பாழாய் வெறும்பாழுக் கப்பால்
உறுபொருளாய் நின்ற ஒருவன் - பொறியிலியேன்

*ஞானுசிரியன்*

வெமபும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனியென் தமபிரான் - அம்புவியோர்

---

[1]தேயுவுற. [2]முளையாகி.

85 போற்றுந் திருவடியென் புன்தலைமே லேபொறித்தோன்
ஏற்றின் புறத்தமைந்த எங்கோமான் - சாற்றுவார்

சாற்றும் பொருளான் தனிமுதல்வன் தானல்லால்
வேற்றின்பம் இல்லா விளங்கொளியான் - போற்றுங்

குருவேட மாகிக் குணங்குறியொன் றில்லாப்
பெருவேட மாய்நிறைந்த பெம்மான் - கருவேடங்

கட்டுமுருக் கட்டறுத்தான் கற்றவர்வாழ் தில்லையான்
எட்டுமவர்க் கெட்டா இயல்பினான் - மட்டவிழ்தார்

### மல நீக்கம்

வானோன் பவனி வரக்கண்டு வல்வினையேன்
ஏனோரும் ஏத்துதல்கண் டேத்தினேன் - தான்என்னைப்

90 பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக்கொத்தையெல்லாம்
நீத்தான் நினைவுவே றாக்கினான் - ஏத்தரிய

தொண்ணூற் றறுவர்பயில் தொக்கிற் றுவக்கறுத்தான்
கண்ணூறு தேனமுதங் காட்டினான் - வெண்ணீறும்

வேடமும் பூசையுமே மெய்யென்றான் பொய்யென்றான்
மாடையும் வாழ்க்கை மனையுமே - நாடரிய

அஞ்செழுத்தின் உள்ளீ டறிவித்தான் அஞ்செழுத்தை
நெஞ்சழுத்தி நேய மயலாக்கி - அஞ்செழுத்தை

உச்சரிக்குங் கேண்மை யுணர்த்தி[1]அதன் உச்சரிப்பு
வைச்சிருக்கும் அந்த வழியாக்கி - அச்சமறச்

95 சென்று விளக்கை எழத்தூண்டிச் [2]செஞ்சுடரின்
ஒன்றி ஒருவிளக்கின் உள்ளொளியாய் - நின்ற

பெருவிளக்கின் [3]பேரொளியாய் உள்ளே பிரசம்
மருவும் மலர்போல் மதித்தங் - கருவினுருக்

கொள்ளா அருளைக் கொளுத்திக் குணங்குறியொன்
றில்லா இடத்தே இளைப்பாற்றி - விள்ளாத

---

[1]உணர்த்தியபின். [2]செழுஞ்சுடர்பால். [3]பேரொளியினுள்ளே.

உள்ளம் முதலாக உள்ளதெலாம் வாங்கஅருள்
வெள்ள மயலளித்து மேவினுன் - கள்ளம்

மறப்பித்தான் மெய்ஞ்ஞான மாக்கிமன மெல்லாம்
இறப்பித்தான் என்பிறவி ஈர்த்தான் - விறற்சொல்லுக்

100 கெட்டானை யார்க்கும் எழுதா இயற்குணங்கள்
எட்டானை ஆற்ற எழுத்தினுன் - மட்டாரும்

பாடலார் ஆடலார் பண்பலார் நண்பலார்
[1]ஆடலா ராடல் அகன்பதியாம் - கூடலார்

காணக் கிடையாதான் காண்பார்க்குக் காட்சியான்
பாணர்க் கிலகு பலகையிட்டான் - சேணிற்

சிறந்த உருவான் திருமாலுக் கெட்டான்
நிறைந்த திருவுருவில் நிற்போன் - கறங்குடனே

சூறைசுழல் வண்டு சுழல்கொள்ளி [2]வட்டமெனு
மாறு கருணையினுல் மாற்றினுன் - நீறணிந்த

105 மெய்யன் நிமலன் அமலன்அருள் வீடளிக்கும்
ஐயன்அறி வுக்கறி வாயினுன் - பொய்யர்பாற்

பொய்மையாய் நின்றுன் புரிந்தவர்தம் [3]நெஞ்சத்து
மெய்மையாய் நின்று விளங்கினுன் - கைமழுவன்

காணுமிடம்

அத்தன்பால் நீசென் றடையும் இடத்தையெலாம்
சித்தஞ்சேர் நெஞ்சமே செப்பக்கேள் - நித்தலுமே

பூசிமுடித் துண்டுடுத்துப் பூங்குழலார் தங்கலவி
ஆசைதனிற் பட்டின்ப ஆர்கலிக்குள் - நேசமுற

நின்று திளைக்கும் இதுமுத்தி யல்லது[4]வே
ருென்று திளைக்கும் அதுமுத்தி - [5]யன்றென்(று)

---

[1]பாடலா ராடலா ரும்பணியான். [2]வட்டமென மாறில்.
[3]நெஞ்சத்துள். [4]வேறின்று. [5]யென்றென்று.

110 இலகா இருளலகை போல்இகலே பேசும்
உலகா யதன்பால் உறாதே - பலகாலும்

தாம்பிரமங் கண்டவர்போல் தம்மைக்கண் டாங்கதுவே
நான்பிரமம் என்பவர்பால் நண்ணுதே - ஊன்தனக்குக்

கொன்றிடுவ தெல்லாங் கொலையல்ல என்றுகுறித்(து)
என்றும்அற மேதெய்வம் என்றென்று - வென்றிப்

பொறையே யெனும்புத்தன் பொல்லாத புன்சொல்
மிறையே விரும்பி விழாதே - நிறைமேவி [றித்துத்

வாழ்பவர்போல் [1]மன்னுடம்பில் மன்னும்உரோ மம்ப
தாழ்வுநிலை யாதுதுகில தான்அகற்றி - ஆழ்விக்கும்

115 அஞ்சும் [2]அகற்றும் அதுமுத்தி என்றுரைக்கும்
வஞ்சமணன் பாழி [3]மருவாதே - [4]செஞ்சொல்புனை

ஆதிமறை ஓதி அதன்பயன்ஒன் றும்அறியா
வேதியர்சொல் மெய்யென்று மேவாதே - ஆதியின்மேல்

உற்றதிரு நீறுஞ் சிவாலயமும் உள்ளத்துச்
செற்ற புலையர்பாற் செல்லாதே - நற்றவஞ்சேர்

வேடமுடன் பூசைஅருள் மெய்ஞ்ஞான மில்லாத
மூடருடன் கூடி முயங்காதே - நீட

அழித்துப் பிறப்ப தறியா தரனைப்
பழித்துத் திரிபவரைப் பாராதே - விழித்தருளைத்

தூது

120 தந்தெம்மை ஆண்டருளுஞ் சம்பந்த மாமுனிவன்
அந்தங் கடந்தப்பா லாய்நின்றேன் - எந்தைபிரான்

வீற்றிருக்கும் ஓலக்கம் எய்திஅடி வீழ்ந்திறைஞ்சிப்
போற்றி சயசய போற்றியென - ஆர்த்தகரி

---

[1]மண்ணுலகில். [2]அடக்கும். [3]மதியாதே. [4]செஞ்சொலால்.

அன்றுரித்தாய் நின்பவனி ஆதரித்தா ரெல்லாரும்
வென்றிமதன் அம்புபட வீழ்வரோ - நின்றிடத்து

நில்லாத செல்வம் நிலையென் றுனைநீங்கிப்
பொல்லா நரகிற் புகுவரோ - பல்லோரும்

கத்துஞ் சமயக் கணக்கிற் படுவரோ
சித்தம் பலகால் திகைப்பரோ - முத்தம்

125 பொருத நகைமடவார் புன்கலவி யின்பம்
மருவி மயங்கி வருவரோ - இருபொழுதும்

நாள்இருபத் தேழும் நவக்கிரக மும்நலியுங்
கோள்இதுவென் றெண்ணிக் குறிப்பரோ - வேளை

எரித்த விழியாய்நின் இன்பக் கடற்கே
தரித்து மதிமறந்த தையல் - வருத்தமெலாந்

தீராய் எனஉரைத்துச் செங்கமலப் பூந்திருத்தாள்
தாராய் எனப்பலகால் தாழ்ந்திறைஞ்சி - ஏர்ஆரும்

பூங்கொன்றை வாங்கிப் புகழ்ந்துபுரி நெஞ்சமே
ஈங்கொன்ற வாராய் இனி. க

வெண்பா

வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனிவன் தார்வாங்கி - அம்புந்தும
வஞ்சமே வும்விழியார் வல்வினையெல் லாமஅகல
நெஞ்சமே வாராய் நினைந்து. உ



சிவமயம்
திருச்சிற்றம்பலம்

சீகாழித் தத்துவநாதர்
அருளிச்செய்த

# 13. உண்மைநெறி விளக்கம்

## தசகாரியம்

### தத்துவரூபம், தரிசனம், சுத்தி

மண்முதற் [1]சிவமதீரும் வடிவுகாண் பதுவே ரூபம்
மண்முதற் [1]சிவமதீரும் மலம்சடம் என்றல் காட்சி
மண்முதற் [1]சிவமதீரும் வகைதனில் தானிலாது
கண்ணுத லருளால நீங்கல சுத்தியாய்க் கருது மன்றே. க

### ஆன்ம ரூபம், தரிசனம், சுத்தி

பாயிருள் நீங்கி ஞானந்
தனைக்காண்டல் ஆன்ம ரூபம்
நீயும்நின் [2]செயலொன் றின்றி
நிற்றலே தெரிச னநதான்
போய்இவன் தனமை கெட்டுப்
பொருளிற்போய் அங்குத் தோன்று
தாய்விடில ஆன்ம சுத்தி
அருள் நூலின் விதித்த வாறே. உ

### சிவரூபம்

எவ்வடி வுகளும் தானும் எழிற்பரை வடிவ தாகிக்
கவ்விய மலத்தான் மாவைக் [3]கருதியே ஒடுக்கி ஆக்கிப்
பவ்வமீண் டகலப் பண்ணிப் பாரிப்பான் [4]ஒருவ னென்றே
செவ்வையே [5]உயிருட் காண்டல் சிவரூப மாகு மன்றே. ங

### சிவதரிசனம்

பரைஉயிரில் [6]யானெனதொன் றறநின்ற தடியாம்
பார்பபிடமெங் குஞ்சிவமாய்த் தோன்றலது முகமாம்
உரையிறந்த சுகமதுவே முடியாகும [7]என்றங்
குண்மையினை மிகத்தெளிநது பொருள்வேறென் றின்றித்

---

[1]சிவமதீறாய். [2]செயலன்றென்று நீங்கலே. [3]கருவியில். [4]ஒருவ னென்று. [5]உயிரிற். [6]யானெனதென் றற. [7]என்றிவ் வுண்மையினை.

தரைமுதலிற் போகாது [1]நிலையினில்நில் லாது
தற்பரையில் நின்றழுந்தா [2]தற்புதத்தி னுகுந்
தெரிவரிய பரமானந் தத்திற் சேர்தல
சிவனுண்மைத் தெரிசனமாய்ச் செப்பும் நூலே. ச

### சிவயோகம்

எப்பொருள்வந் துற்றிடினும் அப்பொருளைப் பார்த்திங்
கெய்தும்உயிர் தனைக்கண்டிவ் வுயிர்க்கு மேலாம்
ஒப்பில்அருள் கண்டுசிவத் [3]துண்மை கண்டு
உற்றதெல்லாம் அதனாலே பற்றி நோக்கித்
தப்பினைச்செய் வதும்அதுவே நினைப்பும்அது தானே
தரும்[4]உணர்வும் பொசிப்பும்அது தானே [5]யாகும்
எப்பொருளும் அசைவில்லை யெனஅந்தப் பொருளோ
டியைவதுவே சிவயோகம் எனும்இறைவன் மொழியே. ரு

### சிவபோகம்

பாதகங்கள் செய்திடினும் கொலைகளவு கள்ளுப்
பயின்றிடினும் நெறியல்லா நெறிபயிற்றி வரினும்
சாதிநெறி தப்பிடினும் தவறுகள்வந் திடினும்
தனக்கெனஓர் செயலற்றுத் தான்அதுவாய் நிற்கில்
நாதன்இவன் உடல்உயிராய் உண்டுறங்கி நடந்து
நானுபோ கங்களையுந் தானகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானக்கி விடுவன்
பெருகுசிவ போகமெனப் பேசுநெறி இதுவே. சு

### பாயிரம்

எண்ணும் அருள்நூல் எளிதின் அறிவாருக்(கு)
உண்மை நெறிவிளக்கம் ஓதினன் - வண்ணமிலாத்
தண்காழித் தத்துவனார் தாளே புனைந்தருளும்
நண்பாய தத்துவநா தன்.

---

[1]தன்நிலைநில் லாது. [2](து) அற்புதத்தி லாகித், அற்புதமே யாகித். [3](து) உண்மையெனத் தெளிந்திங்(கு), உண்மை கண்டிங்(கு). [4]உணர்வு. [5]யாகி.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## உமாபதி சிவாசாரியார்

அருளிச்செய்த

# 14. சங்கற்ப நிராகரணம்

## காப்பு

திருந்திய அருந்தவம் பொருந்துபல [1]முனிவர்
கமையாக் காதல் அமையாது பழிச்சும்
நிகரில் செக்கர்ப் புகர்முகத் தெழுந்த
புனிற்று வெண்பிறைத் தனிப்பெருங் கோட்டுத்
5 தழைசெவி மழைமதப் புழைநெடுந் தடக்கை
வாட்டரு மும்மை நாட்டம் நால்வாய்ப்
பாசம் அங்குசம் தேசுறும் எயிறொண்
கனியிவை தாங்கும் புனித நாற்கரத்து
அங்கதம் கடகம் பொங்கிழை யாரம்
10 நிறைமணிச் சுடிகைக் கறையணற் கட்செவி
கொண்ட திண்பெரும் பண்டிக் குறுந்தாட்
களிறுதன் இருகழல் கருதா
வெளிறுறு துயரம் வீட்டினம் பெரிதே. ௧

## பாயிரம்

பெருங்கடல் உதவுங் கருங்கடு வாங்கிக்
கந்தரத் [2]தமைத்த அந்தமில் கடவுள்
பாலரை யுணர்த்தும் மேலவர் போலக்
கேட்போர் அளவைக் கோட்படு பொருளால்
5 அருளிய கலைகள் அலகில [3]வால்அவை

---

[1]முனிவர்க் கமையாக் காதல். [2]தடுத்த. [3]அதனால்.

பலபல சமயப் பான்மைத் தன்றே, அஃதால்
அந்நூற் றன்மை யுன்னிய மாநதர்
இதுவே பொருளென் றதன்நிலை அறைதலின்
வேற்றோர் பனுவல ஏற்றோர்க் கிசையா
10 மாறு பாடு கூறுவர் அதனாற்
புறச்சம யங்கள் சிறப்பில வாகி
அருளில் மாந்தரை வெருளுற மயக்கி
அலகைத் தேரின் நிலையில் தீரும்
ஈங்கிவை நிற்க நீங்காச் சமயம்
15 மூவிரு தகுதி மேவிய தாமும்
ஒன்றோ டொன்று சென்றுறும் நிலையில்
ஆறும் மாறா வீறுடைத் திவற்றுள்
எவ்வ மில்லாச் சைவநற் சமயத்து
அலகில ஆகமம் நிலவுத லுள[1]அவை
20 கனகம் இரணியம் காஞ்சனம் ஈழம்
தனம்நிதி ஆடகம் தமனியம் என்றிப்
பலபெயர் பயப்பதோர் பொருளே போலப்
பதிபசு பாச விதிமுறை கிளக்கும்
வாய்ந்த நூல்கள் ஆய்ந்தன ராகி
25 ஆசா றொகி வீசிய சமத்துடன்
ஏழுஞ் சிருநா றெடுத்த ஆயிரம்
வாழுநற் சகனம் மருவா நிற்பப்
பொற்பொது மலிந்த அற்புதன் ஆனி
ஆரும விழவிற் பொற்றே ராலயத்து
30 ஏறு [2]அறுவர் [3]நிரையி லிருப்ப
மயங்கு வாத மாயா வாதி
முயங்கிட ஒருதலை முதுவெதிர் மணிசேர்
பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதிதிகழ்
மெய்கண் டவன்அருள் கைகண் டவர்களில்
35 ஒருவர் [4]ஒருதலை மருவி யிருப்ப
வஞ்சப் பிறவிக் கஞ்சிவந் தொருவன்
ஏதிறை யருளென இதுவெனும் மாயா
வாதியை அயலினர் மறுதலைத் தருள்தர
மற்றவர் அயலினர் அவருரை மறுத்துச்

[1]வகை. [2]எண்மர். [3]நிரையினில். [4]ஓர்தலை.

40 சொற்றர [1]அயலரில் அவருந் தொலைவுற்று
இன்னே [2]எழுவரும் முன்னே கழிவுழி
[3]ஆங்கய லிருந்த அருளினர் அழகிது
நீங்கள் சங்கற்பம் நிராகரித் தமையென
மற்றவர் உரைத்த சொற்றரு பொருள்கொடு
45 வாத செற்பை விதண்டையும ஏதுவும்
ஓது நாலவகை உவமையுந திகழ்தர
அருள்சேர் மாந்தர் வெருள்சே ராமற்
தற்கமும் விடையமுங் கற்க
நற்கவி மாந்தர் நகநவிற் றுவனே. உ

## 1 - க. மாயாவாதி சங்கற்பம்

### பெத்த விலக்கணம்

நவிற்றிய நிரையில அவித்தையி ஞேன்உரை
நித்தன் அறிவன் சுத்தன் அகண்டிதன்
நிருவி கற்பன் நிர்த்தத்துவன் நிரஞ்சனன்
சொல்வகை எவையுந் தொடராத் தூய்மணி
5 வரமபில வேதச் சிரந்தரு பரம்பொருள்
சத்தாய் எவையுந் தானுய் அவித்தை
தொத்தா துயர்ந்த தொல்சுடர் மூவா
இன்ன தன்மையன் ஏகன் அனேகன்
கன்னற் பெருஞ்சுவை தன்னிற் பிறவாப்
10 பெற்றியி னிருந்து பொற்பணி யியலபினின்
வான்வளி அனல்நீர் மண்மருந் தன்ன
மான தாது ஆறைங் கோசத்
தொகுதி யாக்கைப் பகுதிய தொருபுடை
சுத்தி வெள்ளி யொத்தென மித்தையில்
15 தானென லாகுந் தன்மைத் [4]துலூதையிற்
சின்னூற் றகையின் வேற்றுமை மரீஇய
தென்னப் பன்மைய தெனின்இலை பழம்பூத்
தோல்நார் வயிரம் [5]தருத்தருந் தொன்மையின்

---

[1]அயலின ரிவரும். [2]எவரும். [3]ஆஙகய லிருந்தவர். [4]துலூதை.
[5]தருமரத தொன்மையின்.

வாஞு ரந்திரை நுரைதரு வாய்மையிற்
20 கூடும் அசித்தைச் சித்துத வாதெனின்
நெற்பதர் பலாலத் திற்பரம் தரும்இது
தன்னியல் பென்றும் விளையாட் டென்றும்
முன்னுள மறைகள் மொழிதலின் ஒருநூல்
பன்மணி நிலையும் பசுப்பால் எனவும்
25 பலஅகல் நீரில் அலர்கதிர் எனவும
கூவல் ஆழி குளம்சிறு குழிகால்
வாவி யாவையும் வருபுனல் எனவும்
அவ்வவற் றடங்கி ஆடியுள் நிழலெனத்
தோன்றி யாக்கைநற காந்தத் திரும்பும்
30 கனவிற் றீங்கும் கங்குலிற் கயிறும்
புனலிற் றோன்றும் பேய்த்தேர்ச் [1]செய்தியும்
[2]அன்னதும பின்னர் நன்னிறப் பளிங்கெனப்
பதிஞற் கரணத் தொருமூன் றவத்தை
நாளும் நாளும் நயந்துறும் இருபயன்
35 தன்னிற் சாராத் தொன்மைத் தன்மை
தற்பண நிழற்கண் குற்றிபாய்ந தற்றே.

சீவன்முத்தி யிலக்கணம்

இவ்வியற் பந்தப் பவ்வம தகல
விண்முதல் தந்த கொண்மூப் படலத்து
இருள்அற உதித்த [3]கால்தக விவேகந்
40 தன்னில் தோன்றிச் சாதக மனைத்தையும்
மன்அகப் பிரிப்பும் மடியிழை வாங்கலும்
போல ஞாலம் பொய்யறக் கழீஇத்
தானே தாஞய்த் தன்னில் தன்னைத்
தானே கண்டு தன்நலம் உற்று
45 வசையில் தத்துவ மசிபதத் தெளிவால்
அகமே பிரம மாயினன் எனஅறிந்து
அசல ஞகிநற் சலசல மதியெனக்
கண்டிடும்.

---

[1]செய்கையும். [2]அன்ன துன்பின். [3]கதிர்தக.

### பரமுத்தி யிலக்கணம்

உடலம் விண்டகல் கடத்து
மங்குல துடைதர எங்குமாம் தகைத்தே
50 இவ்வகை யுணர்ந்து செய்தொழில் அருத
மடவோர் தாமும் கடனு இயற்றுங்
கன்ம காண்டத் தொன்மைப் புரிவால்
தோற்றிய வித்தை மேற்கடை அரணியில்
எழுந்தெரி அவற்றை விழுங்கிய தென்னத்
55 தனனெழிந் [1]துள்ள தானு யொழியும்
அந்நிலை யன்றி அழிவறு முத்தி
ஏயா தென்றுதன் இயல்பை
மாயா வாதி வகுத்துரைத் தனனே.

## 1-உ. மாயாவாதி நிராகரணம்

### பிரமாண மறுப்பு - மறை பிரமாணமன்று

உரைதரு பிரமம் ஒன்றெனும உரைக்கண்
வருபிர மாணம் மறையெனில் அருமறை
[2]ஒன்றென்ற தன்றி இருபொருள் [3]உரைத்தல்
நன்றன் றபேதம் நாடிய பொருளேல்
5 பேதமும் அபேதமும ஓத வேண்டா
பேத மெனினும அபேத மெனினும
பேதா பேத மெனினும் அமையுமங்ின்
ஐயமில் உரையிற் பையவந் துளதாம்
திகழ்பிர மாண [4]இகழ்வுமுண் டன்றிப்
10 பெத்தம் பேதம் முத்தி அபேதமேல்
அநவத் திதமாம் அவையிரு திறனும்
இனிஅப் பழமொழி இரண்டல ஒன்றேல்
அன்றியும் பெத்தம் பேதத் தறைதலும்
ஒன்றிய முத்தி அபேதத் துரைத்தலும்
15 பழுதாம் இத்திறன் பதையா தாய்கமற்று

---

[1] துள்ளந் தானு யழியும். [2] ஒன்றென் றன்றி. [3] உணர்த்தல்.
[4] இகழ்வும் உண்டு அன்றப், என்றப், உண்டால் நற்.

எழுதா மொழியெனும் இப்பிர மாணம்
ஆாஉரை தானே யாயின தேல்உன
தேகம அனேக முறுமஇயம பாமற்
சத்த ரூபந் தகாதெனில் வானத்து
20 ஒத்தொலி உறழும் எனிலவறி துதியாது
அன்றியும் பதமும பாழியும் அனைத்தும
இனறிஓர் ஒலியாய் எழுந்திடும அதனுக்கு
அறிவில துருவில தறியா தறையாது
அனறியும அவ்வகை யகண்டிதம் அதுஇது
25 என்றது குறிப்ப தெவ்வகை யாவும
ஒன்றெனும் உரையும ஒழிந்தனை யன்றே
அருமறை பிரம வுரையெனில் அதற்குத்
தந்தம தாலு முதல்நவில் பொறியிலது
என்னில்ஓர் உடற்கண் மன்னிய அலகை
30 அறைந்தற் றென்ப தார்சொல தமலத்
திறமபெற் றின்றே செய்தோர் பெயராற்
சுயமபு வென்றுல கியம்புமஎன் றறிஇனித்
தறகீழ்த் தலைவரைத் தான்தொழு துரைக்குஞ்
சொறகேல் புரவலன் ஏவ லமைச்சரை
35 [1]அடியேம் மற்றெம் குடிமுழு தாள்மின்என்று
ஏத்தி இறைஞ்சிற் காப்பர்கள் என்றுங்கு
ஈசன் நாம்செயப் பேசினன் அன்றி
இனையவை பிறரிற் கனவினும் இலனே
தன்னைத் துதிக்குஞ் சொன்னலந் தானுமத்
40 துறைஅறி வாணர்க் கறைவதொன் றன்றியும்
தனக்குத் தானே தன்நலம் பகராது
அசத்துக் குரையா தார்க்குரை உயிர்க்கெனில்
உரைபிர மாணம் இறைபிர மேயம்
நீபிர மாதா நின்பிர மிதியென
45 நால்வகை யுளதுன தேகம்நன் றன்றே
நற்பிர மாணம் [2]நிற்பதொன் றுய்த்தன்று
அப்பிர மேயமும் அதன்இயல் பன்றே.

---

[1] அடிகள். [2] நிற்பதொன் றன்றால்.

### பிரமேய மறுப்பு - பிரமம் பிரமேயமன்று

கன்னற் சுவையில் அன்னியம் இலதால்
இனிமை தோன்றாத் [1]தன்மைத் தென்றனை
50 அறிவிற் குவமை அசத்தாம் கட்டி
பிறிவித் தொட்டினும் பேற துறாதே
தறபர விரிவு பொற்பணி தகுமெனில்
செய்வோ ரின்றிச் செய்வினை இன்மையிற்
பொன்பணி யாகை தன்பணி யன்றே
55 செய்வோர் போலாச் [2]செயப்படு பொருள்முதற்
செய்வோர் ஏயாச் செய்யவும் படுமே
சுத்தி வெள்ளியிற் றோன்றிற் றாயினும்
சத்துல கேதும தாரா தருமெனின்
உலகம் மித்தையென் றோரா துரைத்தனை
60 நிலவுநின் மரபு நினைந்திலை யாம்கொல்
விவகா ரத்தில வேண்டுதும் உலகம்
பரமார்த் தத்தில் பகராம் எனனில்
பரத்துள தேலஇவை யுமபர மார்ததம்
பரத்தில தேல்ஒழி முன்பகர் மாற்றம
65 அதன்முதல் இதுவென உதவுக அன்றியும்
விவகரிக் குங்கால் திகழ்பர மார்த்த
நிலைஅது தெரியின் இதுநீ நீயேல்
தெரியா தாயின் அஃதுந் தெரியாது
உரையார் அளவையும ஒழிந்தனை அன்றே
70 அளவை காண்டல் கருதல் உரையென
உளதவை மூன்றின் மொழிவழி நுழையின்
நினபிர மேயம என்பதெ ழுமகொல்.

### பிரமிதி மறுப்பு

பொற்பிதிர் பிதிர்ந்தும பொன்னே யாம்நின்
தற்பரம் அசித்தைத் தருமா [3]றென்னெனச்
75 சிலமபி நூல்தரு நலம்போற் றோன்றும்
என்றனை அதுவும் தன்தொழில அன்றியும்
ஒன்றதன் இயல்புல கோரியல் பன்றெனப்
பலமிலை பழம்பூப் பாதவந் தரும்நீர்

---

[1] தனிமைத்து. [2]செயற்படு. [3](று) என்னெனில்.

திரைநுரை திவலை சிலதரும் இவைபோல்
80 தானே பலவாம எனநீ சாற்றினை
சத்தசத் தாகவும் சத்தினில் அசத்தின்
கொத்துள தாகவும் கூறினர் இலரால்
வித்திலை கனிநனி விழுதால தருநெறி
சத்தல தொன்று தான்தர [1]வேண்டும்
85 நெற்பதர் பலாலத் திற்குபா தானமஎன்
காரண மின்றிக் காரியம பிறவா
பாரிடை ஒருபடம் பண்ணவும படுமே
அந்தமில பிரமம் அவித்தைகா ரணமெனத்
தந்தனை அவித்தை தானெய் துறுதல்
90 தன்னியல் பென்னில வன்னிதன் வெம்மையிற்
சததின தியல்புஞ் சத்தே அசத்தெனில
வைத்ததன் இயலபெனும வழக்கொழி அன்றியும்
இருள்பொதி விளக்கென வரும்இரு விளக்கிற்
கருமை பயந்த பெருகொளி தகுமெனில்
95 தன்னியல [2]பன்றென் உபாதி வசத்தால
மன்னிய தன்றிமைத் தான்[3]தனின் மாயாது
[4]ஒன்ருன் அசுத்த னன்ரும அன்றே
ஆங்கொரு காலத் தோங்கிய தாயின்
அந்தமில் அவித்தை வந்தணை வதறகோர்
100 ஏது வேண்டும் புயலியல பெனின்வீடு
ஓத வேண்டா ஒழிந்தோ ரினுமுறும
[5]களங்கம தறஉறும் அவித்தைதற கவித்தல்
விளங்கிய பிரம விளையாட் டாயின்
அவித்தை யென்பதொன் றன்னியாந தன்னில்
105 உதிக்கு மென்றமுன் உரையும மறந்தனை
நுணணூற் குடமபை நூந்துழி போலஉட்
படுநெறி அதனுல விடுநெறி இலதால
தலைமையும அறிவும் இலதென அவித்தையை
விடுத்தெடுத் தாணரும் வேற்ருே ரன்றே
110 ஒளிகொள் தாமிரங் குளிகைபெற் ருங்கதன்
அவித்தையை வித்தை தவிர்க்குமென் றுரைக்கில்

---

[1]வேண்டிடும். [2](பு) அன்றதன். [3]தனிமாயாது. [4]ஒன்ருனசித்தி னின்ரு மன்றே. [5]களஙகம தறஉறும்.

நித்தன் அறிவன் சுத்தன்என் றுரைத்த
வித்தகம் என்நீ வித்தையும் [1]வேறென்
எம்ம னோரில் ஒருவன் நின்இறை
115 அம்ம சைவந் தவன்நீ யன்றே.

பிரமாதா மறுப்பு - பெத்தம்

பன்மணி பசுநற் பாத்திர மெனவும்
நனனூல் பால்நீர் நற்கதிர் எனவும்
உடலையும் உணர்வையும் உவமித் தனையேல்
தடமணி சரடொடு தாம்கூ டலவே
120 உணர்வுணர் வொழியின் உலகுணர் வுறின்நின்
பாலும பசுவுஞ் சாலும சாலக்
கலமபல வன்றிச் சலம்பல இலதெனக்
கா ணுந ரின்றி [2]வீண்நீ விளமபினை
ஆடியுள் நிழல்போற் கூடுதல் கூறின்
125 தன்நிழல் கொண்டு தற்பணஞ் சலிக்கின்
மன்நிழல் கொண்டுடல் வந்தகன் றிடுமே
மன்அயக் காந்த மெனவுடல பிரம
சன்னிதி யளவிற் சலித்திடு மாயின்
[3]அகண்டிதஞ் சன்னிதி யலதில தெவையும்
130 நடநதிட வேண்டுங் கிடந்திடப் பெறுவே
காந்தத் திரும்பு காட்டுநர்ப் பெறில்அயம்
சோந்திடும் நீக்குஞ் செயல்அதற் கிலதே
கனுத்துயர் கயிற்றர வெனுச்சில தொடுத்தனை
கனவின் பயனும நனவின் பயனும்
135 வினையின் பயன்அவை பொய்யென வேண்டா
உடலமா ருட்டக் கடனது கருதுக
உற்ற புற்றும மற்றதிற் கயிறும்
உடலுங் [4]கூடமுச் சடமென அறிதி
அறிவு கயிறென் றறியா தன்றே
140 அச்சம தடைதல் கொச்சமை யுடைத்தே
இன்னும்அக் கனவில் இருளுறு கயிற்றிற்
பின்னுமநின் பிரமம பிரமித் திடுமே
துன்னிய வினையிற செமமலர்ப் பளிங்கெனத்

[1]வேறொன்று. [2]வீண்நனி. [3]அகணடிதன். [4]கூடச்.

தானுந் தகைமை யானல் மலரென
145 ஒருபய னன்றிப் பலபயன் மரீஇயது
இருவினை தருபயன் எனநனி வேண்டில்
ஆண்ட வித்தையும அவித்தைகொ டாக்கையும்
ஈண்டிரு [1]வினையும் இயம்பினை பரத்தைக்
கல்வரைப் பிணிகருங் காவல ரெனமுயல்
150 தொல்வினைத் தொடக்கில் தோன்றுடற் சிறையிட்டு
இருவினை யூட்டும [2]அருளுறும் எம்மான்
அருவினை உடற்கண் அவத்தைகள் உரைத்தனை
ஆர்உறு பவர்பரம் அகண்டிதம அடங்காது
ஓர்வில துடல்சடம உறுநெறி யாதென
155 மன்னிய கரண மாருட் டத்திற்
பன்னினம் என்னின் இவையோ பரமோ
முதலிய தாயின் இவைபிறழ் வெய்தாது
இவையெனில் உனது மொழிபழு துளதே
உடற்படு பிரமம [3]உறுமேற் சாளரத்து
160 இடத்தகும் உறுவிரல நுதியளி எறிதுயர்
அங்குலி தானே அருநதிடில் உடற்கண்
தங்கிய அறிவு தனித்துறு மன்றே
தற்பண நிழற்கட் குற்றிபாய்ந் தற்ருல்
நற்கணிற் றுயரம நணுகாத் தகைத்தெனில்
165 நின்மொழி விரோதமும காட்சி விரோதத்
தன்மையும் உறும்அவை தவறில ஆகா
யாமஉடைப் பதிவகை யாவரும் பலகலை
சொல்லுதல் எளிதரி தத்தொழில் புரிவெனப்
புல்லிய பழமொழி புதுக்கினை யன்றே
170 அகண்டித மெனநீ [4]பகர்ந்தமை தனக்குப்
பந்தம் இதுவெனத் தந்தமை கருதில்
வானில் நடக்குங் காலினைப் பிடித்துப்
பருவிலங் கிட்ட ஒருவன் நீயன்றே.

### சீவன்முத்தி மறுப்பு

பந்தம தகல [5]முந்து விவேகம
175 வான்வளி யெனத்தனில் தானே தோன்றின்

---

[1]பயனும். [2]எம்மான் அம்மான். [3]உறுமெனில். [4]பகர்ந்தது.
[5]உ.ந்து.

முன்புள தாயின் மயங்கா திலதெனிற்
பின்புள தாகா திலதுள தெனில்வெளி
மலரது [1]தருமஅனல் மரக்கண் இன் ருகித்
தருவது தகுமெனில் தானே தோன்ரு
180 விறகின் உதித்த கனல்தகு மாயின்
அவித்தையின் உதித்த வித்தை அம்மரத்து
உதித்த விவேகம் வித்தையென் [2]றுரைத்த
வெந்தழ லனைய விவேகம [3]துதித்த
இந்தன மனைய இறையிலன் றற்றே
185 இற்படப் பிரிப்பின் மெய்ப்படும் எவற்றையும்
இதுவன் றிதுவன் றெனக்கழி காலை
அதுவே தானே யாயின தென்றனை
வித்தை முன்னர் அவித்தையும் அவித்தைமுன்
வித்தையும நிலலா வியன்ஒளி இருளென
190 இருளல ஒளிக்கும் ஒளியல இருட்கும
ஒருகா லத்தும ஒருபயன் இலதால்
இரண்டையும் நுகரும் முரண்தரு விழியென
வித்தையும் அவித்தையும உய்த்ததொன் றுளதே
தானே தானும ஆறுற பயனென்
195 தன்னில் தன்னைத் தானே காணிற்
கண்ணிற் கண்ணைக் காணவும படுமே
தன்நல மதனைத் தானே நுகரும
என்னின் முன்நலம எய்தா திருந்ததென்
கட்டி போலெனக் கதறினை இன்பம[4]வந்து
200 ஒட்டிடும் வத்தை யுடையையா யிடினே
தத்துவ மசியென வைத்தமுப் பதத்திற்கு
ஒன்றே பொருளென் றன்றே பகர்வது
நீபுலி யாயினை யென்ருங் குணரில்
ஆயினை என்றதும் ஆகுவ மைத்தால்
205 நோயா யினமெனல் ஆயா யென்ருல்
அகமே பிரம மாயின தென்ருல்
சகமே அறியத் தான்வே றன்றே
உண்மையிற் [5]சலமிலம் உடற்சலம் சலமுறும்

[1] தகுமனல், தருமணம். [2] றுரைத்தல். [3] துதித்தது. [4] வந்தொட்டும் வித்தையை. [5] சலமில.

வெண்மதி போல [1]விளங்கின மென்றனை
210 அசல [2]ஞகிச் சஞ்சல சலத்துச்
சலனம மேவினம எனமதி காண
வேண்டும தன்றிக் காண்பவர் பிறரேல்
ஈண்டுன தேகமஎன் செய்த தியமபுக.

## பரமுத்தி மறுப்பு

உடல்விடக் கடத்துட் [3]படுவெளி போலெனில்
215 விட்டென் பெறஉடற் பட்டென் படமற்று
இகலற ஒருவன் இவ்வகை [4]தெளிய
அகிலமும் முத்தி யடைந்திட வேண்டும
அறிந்தோர் முத்தி யடைந்தோ ராயின்
பிறிந்தோர் உயிர்பல பேதத் தன்றே.

## பதிஞானம் வாராதென்றது

220 கன்ம காண்டங் காரண மாக
மன்னும் விவேகம என்னில அவித்தைக்கு
ஏது காரணம ஓதினை யில்லை
இதற்குக் காரணம் விதித்தல்வேண் டின்றே
அரணியி லுதித்த கனலவை கவர்வென
225 விரதத் துதித்த விவேகம தழித்தல்
வருந்தி யாயினுந் திருந்திய வேத
நீதி யெலலாம நீத்துப் போதமொன்று
[5]அறியார் தாமுமஇகழ் அவ்வழி நடத்தல
பொறியோ போத நெறியோ இதுபவம
230 நீங்கிடும நெறிதரு பாங்கினைப் பழித்தல்
நன்றி கொன்ற லன்றே அன்றியும
ஞால நீதியும நான்மறை நீதியும
பாலர்உன் மத்தர் பசாசரி லெனவும
உறங்கி னேன்கை வெறுமபாக் கெனவும
235 தானே தவிரா தாறற் புரியாது
ஒழிந்திடின் நிரயத் தழுந்துதல் திடமே
உய்ந்தோ னின்றி முத்தி யுரைத்தல்

---

[1]விளங்கிடும். [2]ஞகிநற் சஞ்சல சலத்து. [3]படுவொளி. [4]தெளியில். [5]அறியோர் தாமும் அவ்வழி, தாமும் இகழ்வழி.

பித்தோ பிரமஞ் செத்தோ பெறுவது
உடலையும் நீயே சடமெனச் சாற்றினை [னும்
240 வையினும் வாழ்த்தினும் கொய்யினும் கொளுத்தி
வணங்கினும் உதைபபினும் பிணங்குதல் செய்யாப்
பிரமத் தன்மை பெறுவதெக் காலம
இருக்கு நாள்சில எண்ணில்நூல் கதறித்
தருக்கம பேசித் தலைபறி யுற்றுக்
245 கண்டோர் ஈநத பிண்டமுண் டலறிப்
பல்நோய் யாக்கை தன்நோ யுற்றுடல்
விடவரும என்று நடுநடு நடுங்கி
விட்டோர் தெய்வத் தொட்டின் றன்றியும
யானே எவரும் ஆனேன் என்றலின்
250 அவ்வவர் சீறி அவ்வவர் வாழ்நாள்
செவ்வி தின் நிரயஞ் சேர்த்துவர் அதனல்
மாயா வாதப் பேயா உனக்குத்
தேவரில் ஒருவர் உண் டாக
மேவரு நரகம விடுதலோ அரிதே.

## 2 - க. ஐக்கியவாதி* சங்கற்பம்

### பெத்தம்

அரிதேர்ந் துணராப் பெரியோன் உரைத்த
பதிபசு பாசம விதிமுறை கிளக்கில
ஈசன் ஏகன் எண்ணிலி பசுக்கள்
பாசம் இருவகைப் பரிசின துலகத்
5 தாயவன் உயிர்க்கு மாயையின அருளால
இருவினைத் தகையின் உருவினைத் தருமால்
கருமுகில அடர இரிதரு கதிர்போன்று
அறிவாம உயிரிற் பிறியா தேயும
ஈட்டும இருபயன் ஊட்டிடும [1]நியதி.

### முத்தி

10 ஒரு[2]போ திருபயன் நுகர்வுற மருவுதல்
இன்மை [3]யாதல் முன்னிய காலைச்

*ஈசுர ஐக்க வாதி.

[1]நியதிக்கு. [2]பொழுது. [3]யாதென.

சத்தி நிபாதம் [1]உற்றிறை யருளால்
உருவுகொ டுலகு தெரிவுற மருவி
மாசுறு தூசு தேசுற விளக்குந்
15 தன்மையின் உணர்த்தும புன்மைகள் நீங்கி
நீரும் நீரும சேருந தகைமையின்
அறிவிஞே டறிவு செறிவுறப் பொருந்தி
ஒன்ருமெ என்பதை உலகோர்
நன்ரு முத்தி எனநவிற் றினரே. ரு

## 2 - உ. ஐக்கியவாதி நிராகரணம்

### பெத்த மறுப்பு

முத்தி என்பதை எவஞே சுத்த
அறிவெனிற் பாசம் செறியா மாயை
உருஇரு வினையால வருமஇரு வினையும்
உருவா லன்றி மருவா திவற்றின்
5 முந்திய தேதோ வந்தணை வதறகோர்
ஏது வேண்டும தான்இயல் பென்னின்
வீடுற் றவரினுங் கூடக் கூடும்
ஈங்கிவை நிற்க நீங்காக் கருவிகள்
கொண்டறி வறியக் கண்டது மன்றி
10 மருவிய உருவு துயிலபெறுங் காலைச்
சிறுபொறித் தறுகட் கறையணற சுடிகைத்
துத்திக் கடுவுள் துளையெயிற் றுரகக்
கொத்தயல கிடப்பினுங் குவைதரு நவமணி
ஒருபால் துதையினும பெருகார் வத்திஞேடு
15 அச்சமும் அணுகாக் கொச்சமை என்ஞே
கருவி யாவும பிரிவுறு நிலையேற்
பொறிபுல ஞதி குறைவற நிறைந்து
காட்சிய தளிக்கு மூட்சியின் முன்ஞக்
கொடுத்தோர் ஆழி [2]விடுத்தவன் நாடிக்
20 கொள்வோர்க் காணு துள்கி மீண்டுமித்
தந்தவற் கண்டாங கந்தமில அதனைத்
தருக என்னும் பெருமதி பிறங்குமஃது

[1]உய்த்திடும். [2]விடுத்ததை நாடி, விடுத்தத ஞடி.

அறிவி லாமைஎன் றனை அது மலமாக்
குறிகோ ளாளர் அறைகுவ ரன்றே.

### முத்தி மறுப்பு

25 அறிவிற் கறிவு செறியவேண் டின்றே
உண்மையில் இருமையும் ஒளியே எனில்ஒரு
தன்மை யாகமுன் சாற்றின ரிலரே
முன்பு நன்றுடன் ஒன்றிய காலை
இன்பம் எய்துதற் கிலதுயிர் ஆதலின்
30 நீயலை பொருத மாயா வாதி
ஆயினை அமையும் அருள்நிலை கேண்மதி.

## 3 - க. பாடாணவாதி சங்கற்பம்

மூல மலத்தாற் சாலு மாயை
கருமத் தளவில் தருமுரு இறைவன்
செறிந்திரு பயனும் நுகர்ந்திடும் உயிர்கள்
35 இருளுறு மலத்திற் பருவரற் படுதலின்
இடைஇரு நோக்குந் தடைபட் டோரில்
துயருறும அதனுற் செயிருறு துன்பம்
கொத்தை மாந்தர் [1]உய்த்துறுந் துயிலபோற்
காட்சி என்னக் காணுத் துயர
40 மாட்சியை முத்தி எனவகுத் தனரே. ௬

## 3 - உ. பாடாணவாதி நிராகரணம்

### பெத்த மறுப்பு

வகுத்துரை பெருகத் தொகுத்திடு முத்தி
நன்று நன்றிருள் ஒன்றிய மலத்தாம்
உளத்திற் குறுபொறி செறிபுலன் நுகர்தல்
விளக்கிற் றிகழும் மேன்மைய தன்றே
5 கருவிகள் அகல்வுழி மருவிய துயரமும்
நன்றெனலாகும் துன்றிய படலத்

[1] உய்தந்திறை.

திடைதடைப் பட்ட சுடர்விழி மாந்தர்
படலம் நீங்குதல் கடனு தலினே.

### முத்தி மறுப்பு

காட்சி யென்னக் காணுத் துயர
10 மாட்சியை முத்தி எனவகுத் துரைக்கிற்
கரணு பாவம் மரணம் கருமரம்
ஏய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே
இனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா
தனிதரு துயரம எனுமஇது திடனே
15 பாடா ணத்திற் கூடா முத்தி.

## 4 - க. பேதவாதி சங்கற்பம்

ஈசன தருளாற் பாசத் தொகுதி
செறிவுறு செம்பிற் கறையுறு களிம்பு
குளிகை தாக்க ஒளிபெற் றுங்கு
நித்த சுத்த முத்த ராக
20 வைத்தனர் உலகில் மறைவல் லோரே. எ

## 4 - உ. பேதவாதி நிராகரணம்

மறைக ளாகமத் துறைகள்மற் றெவையும்
நாசமில் பதிபசு பாசமென் றுரைத்தல்
அயர்த்தோர் குளிகைச் சயத்தால் தாமிரக்
காளித நாசம பாசத் தேய்த்தல்
5 கூடா தன்றியும் குளிகை சீருணம்
நீடா தழித்த [1]நிலைஇலை ஆதலிற்
பேத வாதம் ஓதுதல பிழையே
இன்னும் இன்னுயிர் ஏமங் குளிகை
தன்னில் அன்னியந் தருவது திடமே
10 வீடித் [2]திறத்தினிற் கூடக் கூடா.

---

[1] நிலைநிலை யாகலிற். [2] திறனிற்.

## 5 - க. சிவசமவாதி சங்கற்பம்

### பெத்தம்

பாசமும் பசுவும் ஈசனும என்றிம
மூவகை உணர்வு தாமமுதன் மையவாய்ப்
பாசம் ஐமபுலன் தேசுற உணர்த்தப்
பசுத்தனி ஞானம பொசித்திடு மன்றே
15 இனைய ஞானம பிரிவுற எரியாச்
செந்தழல் தகுமநெறி அந்தமஇல் உயிரும்
அறிவாய் ஒன்றும அறியா தன்றே.

### முத்தி

இவ்வா(று) ஒழுகும் [1]இனைய உயிர்க்கு
முன்னோன் தனது முதிர்ஒளி ஞானம
20 அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த
வண்டெனெ உயிரைக் கொண்டிடும உயிர்அது
தன்னை நோக்கித் தான்அது வாகி
ஐவகைத் தொழிலும மெய்வகை உணர்வும்
பிரியா வாறு பெற்றுத்
25 திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந் திடுமே.

## 5 - உ. சிவசமவாதி நிராகரணம்

### பெத்த மறுப்பு

சேர்ந்த முமமை வாய்நத ஞானமும்
ஒருகா லன்றித் [2]திரிவுற நிற்கில்
ஒண்பொருள் காணும பண்பினுக் கொருகாற்
பரிதியும மதியும எரிதரு விளக்கும்
5 வேண்ட லின்றே காண்தகு காலே
ஒன்றொன் றாக நின்றறி வுறுமெனில்
அன்னியம் அறியா மன்உயிர் பொறிபுலன்
தானே அறியா தலைவற் குலகினை

[1]ஏனைய. [2]தெரிவுற.

ஆறு அறிவால் அறியவேண் டின்றே
10 கொழுந்தழல் [1]தகுமேல் அழுந்திடும் அவத்தையில்
திரியாத் தலைவற் றெரியாத் தன்மைவந்து
எய்தல் ஆகா.

### முத்தி மறுப்பு - சரீரமின்று என்றது

மெய்யுறு பொருட்கு
முன்னர்க் கீடந் தன்னென எடுத்த
வேட்டுவன் இயல்பு கூட்டல் பெறாதே
15 வண்டுறும் பெடாஉட் கொண்டது தனக்கு
மந்திர வாதந் தந்ததும் இலதே
எடுத்திடும் அதனால் அடுத்ததென் றறையில்
கருமயிர்க் குட்டி இருசிறைப் பறவை
யாயின தெடுத்த தாயர்சாற் றிலரே
20 பிறவிப் பேதத் துறையிவை கிடக்க
ஏயும் இத்திறன் ஆயுங் காலை
யோகத் தகுதி யாகத் தகுமே
ஞான மின்மையென் றேதுவ தெவன்எனில்
உயிரும் உணர்வும் பயிலுத லின்றி
25 வேட்டுவன் உருவம் மென்புழு உணர்வு
கூட்டுத லாலஉருக் கூடுத லானும்
முத்தியில் இறையிற் பற்றுத லின்றித்
தன்உரு அணைந்த பின்அதன் [2]நினைவு
மாறுத லானும் ஊறுடைத் தன்றே.

### பஞ்சகிருத்தியமின்று என்றது

30 ஈசன தியல்பரு ளெய்துயிர் இயற்றல்
பேசுதல் தவறெனப் பெருமறை அறைய
ஐந்தொழில் உயிரும் தந்திடல் தகுமே
ஆவதென் முன்நாள் நாவலர் பெருமான்
பண்டொரு முதலை உண்ட மைந்தனை
35 வரவழைத் தனன்என் றுய்பிழைப் [3]பிலதநூஉம்
தந்திட வேண்டும் என்றன ரன்றே
இன்னவை கிடக்க முன்னவன் தன்மை

---

[1]தகுமெனில். [2]உணர்வு. [3](பு)இலதஃது.

எய்தினர் எல்லாச் செய்தியுஞ் செய்வர்
இரும்பெரி எய்தித் தருஞ்செயல் தகவெனிற்
40 பொருள்நிலை கிடக்க ஒருதிட் டாந்தப்
பேறே ஆயிற் சீருக் கதுவிய
புனல்ஒரு புடைசேர் கனல்தகு மாயினும்
வேறொரு பொருளை நீருக் கிலதே
நெருபபெனும் இதனின் உருத்தனி காட்டுக
45 அங்கியும் ஒன்றைத் தங்கிநின் றலலது
தன்தொழில் நடததா தென்றறி இனிநீ
இருமபனற் செய்தி தரும்பரி சுளதே
அதுவென்னை அலகை பொதிதருங் காலை
அதன்செயல் அனைத்தும் இவன்செயல் ஆமால்
50 அவன்இவன் ஆகில இவன்அவன் செய்திக்கு
என்அவை என்னிற் பின்னுறு செயலும்
அதன்செய லன்றி இவன்செய லாகில்
இவன்செயல் பேயின் தன்செயல் ஆகி
இருந்த வாஎனத் தெரிந்திட வேண்டும
55 தெரியா தாயிற் புரியிற் கடுங்கனல
எரிநத தென்னும இதுதகும அன்றியும
அவன்இவன் [1]ஆகில இவன்அவன் செய்தி
என்று செய்வான் ஒன்றிய [2]மதத்தாய்.

### சர்வஞ்ஞத்துவமின்று என்றது

எல்லாம் அறிதல் செல்லா துயிர்கள்
60 சிற்றறி வெனுமஇச் சொலதவ றுகும
என்பதென் அலகை தன்பத மடைந்தோர்
கொண்ட வாறு கண்டனம என்னில்
மூங்கை அந்தர்உற் றோங்கிய குணங்குறி
[3]செய்ததென் இன்னும பவ்வமுற் றழுந்தினும்
65 நாழி கொள்ளா தாழியில் அலைபுனல்
அதனுற் கருத்து முதலுள தாக
வேண்டும் அன்றே ஈண்டினி அமையும்
எல்லாம எனும்இச் சொல்லாற் படும்பொருள்
அனைத்துந் தாக்காத் தனிப்பரத் துற்றவர்க்கு
70 எவ்வகை உணர்வு செய்வதென் செப்புக

[1] ஆகி. [2] மதத்த. [3] செய்வதென்.

### பரமுத்தி மறுப்பு

ஒன்றின் ஒன்றும் ஒன்று துலகில்
நின்ற போதுயிர் நேராம் அன்றே
முத்தி உற்ற நற்றவர் அவையிடைச்
சேர்வர் என்றனை சார்தரு முத்தி
75 சாலோக் கியமோ [1]சாயுச் சியமெனில்
பந்த முற்ற கந்தல [2]கழித்த
அறிவினோ டறிவு பிறியாப் பெற்றி
வேண்டும என்பதற்(கு) ஈண்டிவர் இவ்வாறு
இருப்பர் என்பதற் குருத்தான் வேண்டும்
80 அண்ணல தருளின் நணணினர் இருப்பினும்
சீவன் முத்தரென் றோதினர் அகன்று
நீங்கியும உருவம நீங்கா தாயின்
ஓங்கிய முத்தி யாவதென் உரைக்க
செடியுடல அணுகாக் குடிலை கொடுக்குமென்று
85 ஓதினை நீயே பேதாய் பகட்டுரல்
ஒளிர்சினை முச்சித் தளிர்எனும் இதுதகும்
இச்சா ரூபம நச்சினர் என்னின்
மும்மலத் தேதும இன்மைய தன்றே
இதுவளர் முத்திப் பதமென [3]இயமபுவர்
90 ஈஙகிவை நிற்க.

## 6 - க. சங்கிராந்தவாதி சங்கற்பம்

### பெத்தம்

நீங்காது ஒளிர்உயிர்
விளக்கென நிற்கும அளப்புறும அறிவின்று
இறைவற் கேதும அறியவேண் டின்றே
மன்னும ஆன்ம சன்னிதி அளவிற்
காநத பசாசத் தேய்ப்ப வாய்ந்த
95 உயிர்உடல இயக்குஞ் செயலுறு பூட்டைப்
பலவகை உறுப்பும இலகிய தொழிலபோல்
ஐமபொறி புலன்கள் இன்புறு மன்றே

---

[1]சாயுச் சியமேல். [2]கழிதல். [3]விளம்புவர்.

இனைய வாயிலின் நிகழ்தரு பயனவை
அந்தக் கரணம் முந்தி உணர்ந்திடும
100 இவைஅகல் வுழிஐம பொறிபுலன் நிகழாது
உயிர்நீங் கிடிலஉடல செயலஇல தன்றே
இவ்வகை வினையின் [1]செவ்விதின் நடத்தும்.

முத்தி

பழமலம் நீங்க நிகழுங் காலை
ஏறறோர் முகஒளி தோற்றும் கலனெனத்
105 தலைவன தருளுயிர் நிலவிடும நிலவக்
காட்டத் தங்கி மாட்டத் தங்கிய
தன்மையும [2]அளத்துப் புலவையின் நீப்பும்
போன்றது வாகித் தோன்றிடும அதனாற்
பசுகர ணங்கள் சிவகர ணங்க
110 ளாக மாறி அறிவும
ஏக மாமஉயிர் யானென தின்றே.

கூ

## 6 - உ. சங்கிராந்தவாதி நிராகரணம்

பெத்த மறுப்பு

இன்றுன துரையின் நன்றி உயிர்[3]ஒளித்
தீபம போலத் தாபந தரிலஇருள்
செறியுந் தன்மைஎன் அறிவில தாகில்
ஒளியென உரைத்த தெளிவதற் கேதாம்
5 சன்னிதி யளவில மன்னுஞ் செயல்உடல்
காந்தம போல வாய்ந்த தென்ற
தன்மையும உணராப் புன்மையை யன்றே
உயிருடல் இயக்கில் துயிலபெறுங் காலைச்
செய்ததென் மனுதி எய்துயிா பொறிபுலன்
10 நடத்த ஆவியும சடத்தன ஆயின்
பூட்டையிற் பூணி கூட்டல பெறுதே
புலன்ஐம பொறியில நிலவிடும என்றனை
அஞ்சும ஒருகால் துஞ்சா தறிதற்கு

[1]செவவி. [2]அளதத. [3]ஒளிா.

அழிவென் நற்றருச் செழுமலர் இலைபலம்
15 கனிதரு வதுபோல் இனையவை ஐந்தும
ஒனறுென் றுக நின்றறி வுறுமெனில்
ஒன்றின் பயன்நனி ஒன்றறி [1]யாதால்
இதுவே யலலது கதுமென இருசெவி
இருகூற் றொருகால தெரியாத் தன்மைவந்து
20 எய்தும மனுதியும மெய்யிற் செயலுந்
தனக்கிலை யொருவற் கெனத்தெளி கிலையே.

## முத்தி மறுப்பு

நோக்கும் முகஒளி நீக்காத் தானெனக்
கவருந் தன்மை முகுரம போலக்
கொடுத்தது கோடற் கடுத்ததுண் டன்றே
25 காட்டத் தங்கி கூட்டக் கூடும
இந்தனத் தியற்கை வெந்தழல் தாங்கா
உப்பளத் தடுத்த புற்பலா லங்கள்
சடுத்த வேனுங் கொடுத்தது கொள்ளுந்
தன்மை உண்டுனக் கின்மைய தன்றே
30 அவமுறு கருவி சிவமய மாமனைக்
[2]கூறினை தாகம வேறுருக் கவராது
என்பதென் அவைமுற் றுன்பந் துடைக்குந
திருவருள் மருவ உரியன என்னில
அருளுரு மாயா இருளின தாங்கொல்
35 சத்தப் பரிச [3]ரூபரச கெந்தமென்று
எத்திறத் தினதருள் இயமபுக அன்றியும்
நிறைந்து நீயாய் நின்றனை [4]யேனும்
மறைந்தைம புலனுல் வாராய் என்றும
கரணம் எலலாங் கடந்தனை என்றும்
40 மரணம்ஐ யைந்தின் அப்புறத் தென்றும்
*முன்னருட் டலைவர் பன்னினர் எனவும்

---

*வரி 37-8 : கைலைபாதி காளத்திபாதி யந்தாதி சஅ. 39-40 : திருவாசகம் உஉங. 40 : அப்பர் தேவாரம் ச. ச. கo.

[1]யாத இதுவே. [2]கூறின. [3]ரூப ரசந்நறை. [4]யென்று.

இனையவை ஒழிய அறிகுவ தெவ்வாறு
என்ற நிற்கலிக் கொன்றிய இன்பம
கூறுதல் தகுமமருட் பேறினை அன்றே
45 ஏகம் உயிர்அறி வாக மொழிந்தனை
இருபொருள் ஒருமை மருவிய திலதே
இவ்வகை கிடக்க மெய்வகை கேண்மதி.

## 7 - க. ஈசுவர அவிகாரவாதி சங்கற்பம்.

### பெத்தம்

பஃறுளைக் [1]கடத்தி னுள்விளக் கேய்ப்ப
அறிவுள வாகும உருவுறும உயிர்கள்
50 கண்ணு லோசையுங் கரணமுங் கருத
ஒண்ணு தென்னும உணர்வுடை மையினுல்
அவவவ புலன்கட் கவ்வவ பொறிகள்
செவ்விதின் நிறுவிச் சேர்ந்தவை நுகரும.

### முத்தி

மூல மலத்தின் பாகம்வந் துதவுழி
55 இருள்தரும் இற்புக் கொருபொருள் கவரத்
தீபம் வேண்டு மானவா போல
மோக மாமலம போக ஞான
விளக்கரன் அருளால் துளக்கறப் பெற்று
நீர்நிழ லனைய சீர்பெறு கடவுளைச்
60 சலம்இல னுகிச் சார்ந்தவர்க் கென்றும்
நலம்மிக நல்கும் நாதனை அணைந்து
பூழி வெமமை பொருந்தா துயர்ந்த
நீழல் வாழும நினைவினர் போலத்
திருவடி நீழல் சேர்ந்து
65 கருவுறு துயரங் களைந்திருந் திடுமே. கம

[1]குடத்தின்.

## 7 - உ. ஈசுவர அவிகாரவாதி நிராகரணம்

### பெத்த மறுப்பு

இருந்ததுன் கேள்வி திருந்திடும உயிர்கள்
அறிவின வாயிற் பொறிபுலன் என்னை
மறறவை பற்றி உற்றறிந் திடுதலின்
அறிவென வழங்கும் உயிர்என உரைத்தல்
5 காணுங் கண்ணினன் கைதொடு தடவிப்
பூணும் பொருளின் பெயர்பல புகறல்
என்னுங் கிளவி தன்னொடு தகுமே
அவ்வவ புலன்கட் கவ்வவ பொறிகளைச்
செவவிதின் நிறுவலின் அறிவெனச் செப்பினை
10 அறிவி லாமைகண் டனமஅணை புலற்குப்
பொறிகள் ஏவலின் அறிவொடு பொருந்தில்
கண்டதோர் பொறியாற் கொண்டிட வேண்டும்
உதவிய தொன்றுற கதுமென இயற்றினர்
உண்டோ [1]என்னிற் கணடது மேலநாள்
15 கடவுளிற் கடிமலர் முடுகிய மதனன்
அங்கம் அனங்கம தங்கிடக் கிடந்தது
வையின் திரளிற் செய்ய சிறுபொறி
மாட்டி [2]மூட்டிய தன்றே மீட்டுந்
தேனமர் தவிசில நான்முகன் உச்சி
20 அறுத்ததும் கருவி பொறுத்தோ அன்றே
ஈசன தியல்பு பேசுதல் தவிர்க
காழி மாநகர்க் கவுணியர் கடவுள்
ஞான மாகிய நற்பதி கங்கள்
[3]எழுதுறு மன்பர்தம இன்புறு மொழியால்
25 களிறெனை அணைந்த கல்மனப் புத்தன்
முருட்டுச் சிரம்ஒன் றுருட்டினர் அன்றி
வாய்நத வாளொன் றேந்தினர் இலரே
என்றதும் ஈர்வாள் கொன்றதென் பதுபோல்
தனித்துணை அருளால் துணித்தனர் என்பர்
30 ஆதலின் வாயில் அளவினில் அறிதலின்
ஏதமில் அறிவுயிர்க் கெய்துதல் இலதே

---

[1]என்னக். [2]மூட்டியன்றே. [3]எழுதுமன்பர்.

### முத்தி மறுப்பு

இருட்கு விளக்கொன் றேந்தினர் போல
மருட்கு ஞானம மன்னுதல் உன்னும
என்றனை கருவிகள் யாவும அசேதனம
35 துன்றிய உயிருந் துரியத் [1]தண்மையன்
ஆதலின் அநதர் அனைவரும் கூடித்
தீதற அருநெறி தெரியுமென் றற்றே
நீர்நிழல் அனைய சீரபெறு [2]கடவுளைச்
சேர்நதவர்க் கின்பம வாய்ந்திடும என்றனை
40 பாதவம் என்றும சேதனம இன்மையின்
இளைத்தோர் வமமின என்பதும் துன்பம்
விளைத்தோர் [3]தமவயின் வெறுப்புமஒன் றிலதே
பொடித்திடு கொப்புள் வெடித்திடு பாதம்
வெய்ய [4]பூழியின் உள்ளுற அழுங்கி
45 ஆற்றுதல இன்றி யாறியங் குநர்முன்
தோற்றிடும என்று சொலலவும இலதால்
இவ்வகை கடவுட் கியமபுதல தவறே
[5]பாசஅஞ் ஞானப் பழிவழி ஒழிக
ஈசன தருள்வழி இயம்புவன் கேண்மதி.

## 8 - க. நிமித்தகாரண பரிணமவாதி சங்கற்பம்

### பெத்தம்

50 புவனம [6]யாவையும புனிதன துருவாம்
சிவமுஞ் சத்தியும எனத்தெளி அவற்றுள்
அசேதனம் என்றுரன் றறைதற் கிலதது
சேதனன் நுகர்பொழு திரண்டுமஓா திறத்தே
இதுவெனும ஒன்றை அதுவாய்ப் படுத்துப்
55 பொதுமையில நிற்கும் போதம்என் றறிக
பொற்பணிப் பேதம் புரைவழி ஒருவழி

[1]தன்மையன். [2]கடவுள். [3]தம்மில். [4]பூழியி னெய்யென
[5]பாச ஞானப். [6]யாவும்.

நற்பொனில் திகழ்வென் நயப்பதொன் [1]றன்றால்
ஆவதும ஆகா தொழிவதும் [2]என்றிப்
பாவகம் உண்மை பாரா தோர்க்கே
60 பாரா தோர்எனப் [3]பகர்தலிற் பல்லுயிர்
ஆராய்ந் துரைக்கின் அவைபிற அலல
பலபல பேதம இலஎன் போரும்இல்
[4]கண்ணின தொளிஅக் கண்ணின தெனில்அது
திண்ணிய இருளிற் செறிபொருள் தெரித்தலும்
65 இன்மை மின்மினி யெனஇரு கணமணித்
தன்மை தானுந தாவில ததறல்
கண்ணின துருவும அதிற்கதிர் ஒளியும
நண்ணருஞ் சத்தி சத்தர்கள் நடிப்பே
உலகேழ எனத்திசை பத்தென ஒருவன்
70 பலவாய் நின்ற படிஇது என்றும
ஊனாய் உயிராய் உணர்வாய் என்றும
மானக் கண்ணே மணியே என்றும
தாமே தானாச் செய்தனன் என்றும
நாமே சிவமாய் நண்ணினம என்றும
75 காயாய்ப் பழமாய்ச் சுவையாய் நுகர்வும்
ஓயா துண்போன் தானே என்றும
அறிவோன் தானும அறிவிப் போனும
அறிவாய் அறிகின் றோனும அறிவுறு
மெய்ப்பொருள் தானும் வியந்திது வெனப்படும்
80 அப்பொருள் யாவும் அவனே என்றும்
தாய்தலைப் பட்டங் கொன்றாய்த் தென்றும்
ஏத மறநான் கெட்டேன் என்றும
இன்னும் இன்னும இறையோர் அளித்தவை
பன்னில் எண்ணரும பான்மைத் தாதலின்

---

வரி 69-70 : திருவாசகம் ௩கக. 71-72 : அப்பர் தேவாரம் சு. சுஉ. உ, சு. சஎ. க. 73 : சம்பந்தர் தேவாரம் க. கஉசு. எ. 74 : திருவாசகம் உ௩அ. 75-76 : அப்பர் தேவாரம் சு. கூச. ரு. 77 - 80 : காரைக்காலம்மையார் அற்புதத் திருவந்தாதி உ0. 81 : திருவிசைப்பா க௩. எ. 82 : திருவாசகம் உருஉ.

[1] றற்றால். [2] என்னுமிப். [3] பல்லுயிர் பகர்தலின். [4] க்ண்ணின தொளியைக்.

85 தருபொருள் கொள்பொருள் தருவோன் கொள்
ஒருபொருள் இவ்வியல் உவப்பென உணர்க [வோன்
[1]நுகர்பொருள் சத்திது நுகர்வோன் சத்தன்என்று
இகலறும் உணர்வுவந் தெய்துதல் அரிதே.

### முத்தி

நான்அவன் எனுமிது நவைவழி நல்வழி
90 தான்அவன் ஆகை இதுசா யுச்சியம்
இத்திறன் தெளிய உய்த்திடு மளவும்
யாதொரு வகையால் நீதிய தாகத்
தான்அறி வழியே தலைநின் றென்றும்
ஊன்உயிர் சிவத்தில் ஒடுங்கிட நடத்தி
95 மூடு முழுமலம் வீடுங் காலைக்
கருவிகள் அளவில புரிதரும் அறிவு
சாக்கிரம் கனவு நீக்கமில சுழுனை
துரியம் என்றிவை [2]பயில்தரும் அறிவு
[3]துரியா தீதம் திரியாத் தனமையில்
100 இறையருள் உதவும் கறையற மாறி
அறிவே யாகும் பிறியாக் கருவிகள்
நிறைமுதல் அவத்தையில அறிவில தாகத்
[4]துரியா தீதந் தோற்றத்
திரியா ததுநற் சிவகதித் திறனே. கக

## 8 - உ. நிமித்தகாரண பரிணமவாதி நிராகரணம்

### பெத்த மறுப்பு

திறம்பெற நீஇங் கறைந்தமை கருதில்
புவனம் யாவையும் புனிதன துருஎனில்
அவன்முதற் காரணம் அன்றும் என்னில்
நிமித்த காரணம் [5]இனிநிகழ்த் தெனநீ
5 அவனே காரணம் அனைத்துமென் றறைந்தனை
மண்[6]தனிக் குலாலன் தண்டசக் கராதி

[1] நுகர்பொரு ளசத்து. [2] புரிதரும். [3] துரியா தீதத். [4] துரியா தீதத் தோற்றந் திரியாதது. [5] நிகழ்த்துக எனநீ. [6] தனித்.

காரணம் மூன்றும ஓர்பேர் அணேந்ததித்
தாரணி அதனிற் கண்டது சாற்றுக
அத்தன் இயற்றும் இத்தொழில் பிறர்க்கோ
10 தனக்கோ வீணே [1]எனக்கீ தியமபுக
வீண்எனிற் பித்தர் [2]மாணுறு தொழில்போல்
தலைமையும அறிவும இலதென இகழ்வர்
தனக்கெனில் அஃதும் இசைப்பதொன் றன்றே
தன்போல் அறிஞருந் தலைவரும இலரால்
15 மின்போல் நிலைமையை வேண்டலும் பழுதே
பிறர்க்கெனிற் பிறரும பிறர்க்காம பொருளும்
பொருட்கமை கருவியும அதற்குபா தானமும்
செய்கையும என்றோர் ஐவகைத் தானொடு
மாருச் சைவர் கூறுர் எனருல
20 நின்சித் தாநதம் [3]அவசித் தாந்தம
என்சித் தான்ற அசித்தைமற் றீனுது
அசித்தில தென்னில வசித்ததென் உலகில்
உலகா யதனும பூதக் கூட்டம
சலமேற் கொப்புள் தகுமெனச் சாற்றினன்.

## ஆன்மா உண்டென்றது

25 தீய கருமச் சீனர்சா வகர்பிறர்
நேயம இல்லென நிகழ்த்தினர் இலரே
காண்டல் விரோதம நிற்பிறர் [4]கதித்திலர்
ஈண்டுன துரைக்குமற் றியார்கரி உடலும
சித்தோ சித்தின் சேர்வாற் சித்தெனில
30 கடபடாதியும உடற்கட் [5]சிதைவென்
தாவர உயிர்போல தனுஒழிந் தவற்றுள்
மேவிய உணர்வு விரவிடும என்னில்
சடத்துயிர் போலெனச் சாற்றினே ஆகலின்
உடற்குயிர் [6]இறையை ஒழிந்துண டன்றே
35 தருதிட் டாந்தமுந் தாட்டாந் திகமும்
ஒருபொரு ளாகில் உவமை பெறுதே
ஒன்றே ஆகில் உடற்கிறை தாபரத்து

---

[1]எனக்கே(து). [2]மாண்பறும். [3]அவன்சித் தாந்தம். [4]கணித்திலர். [5]சிதைவெனத். [6]இறையையும்.

ஒன்றிய நிலையில் விசேடமென் உரைக்க
பூதச் சேர்வைப் பேதமென் றறையில்
40 சேர்வைப் பேதம என்கொடு செப்புக
கருமத் தளவில வருமஎனிற் பித்தர்
உரையில் திகழும உணர்வொழிந் தனையே
கருமஞ் செய்வோன் கடவுளன் றுடலும்
மருவிநின் றிருவினை வாளா நுகரா
45 கடவுளும உடலின் கண்படல துஞ்சல்
இடர்நலம உறுதல் இறங்குதல் ஏறுதல்
எவ்வகை யேனுஞ் செய்கைஇன் றுதலும்
பலகலை உலகில நிலவுத லானும்
எண்ணரும பொருளும இரவியும ஒழியக்
50 கண்ணென ஒன்று காண்கையி னாலும்
பாசப் பகுதியும ஈசனும ஒழியப்
பசுவும உணடென் றிசையவேண் டின்றே
இதுவெனும் ஒன்றை அதுவாய்ப் [1]படுத்தது
பொதுமையில் நிற்கும மாயையின் பொற்பெனப்
55 பொற்பணி யாவும பொன்னாந் தன்மையின்
நிட்கள சகளத் திருவுரு நிலையும்
ஈச னேஎனப பேசுவர் அன்றி
அருவுரு வாகி வருமஉல கென்னில
அனைத்தும மாயை எனத்தெளி கிலையே
60 ஆவதும ஆகா தொழிவதும இலதெனும
பாவகம் உலகா யதனது பான்மை
கட்கொலை வெகுளி காமம் களவுகள்
உட்படும் இவைவிட மொழியா தார்இலர்
சோம பானம சுராபா னங்கள்
65 ஆமென [2]நூலகள் ஆர்செவிப் பறைந்தன
மறையோன் புலைச்சியை மருவும என்பது
முறையோ [3]எனிலஅது புனைமொழி யென்னில்
சாதி பேத [4]நீயினித் தவிரினும
மேதியை ஏறு விழையா விரும்பும்
70 கணணின துருவும் அதிற்கதிர் ஒளியும்
நண்ணரும் [5]சத்தின் நாடகம் எனில்அதற்கு

---

[1]படுத்துப. [2]மறைகள். [3]என்ப ததுபுனை மொழிஎனில்.
[4]நீதிநீ. [5]சத்தா.

ஏதுவும் பயனும் ஓத வேண்டும்
நின்மொழி [1]விரோதம் நீடுல கியற்கையும்
தன்மசாத் திரமுஞ் சகலமும் என்செயும
75 உலகே மௌனஇறை பலவாந் தன்மை
கடமொடு [2]சராவம கலச மாதிகள்
அடலுறு குயவன் ஆயினன் என்றால்
தாமே யாகா அவைதான் ஆகான்
ஆயினன் என்ப தாக்கினன் எனவே
80 ஆனுய் என்ப தனைத்தும் அவ்வவை
தான்ஆ காமையைச் சாற்றிடும என்க
தாமே எனும்இத் தனிஏ காரம்
அழிந்திலர் அதுவே ஆய்த்திலர் அதுவிட்டு
ஒழிந்திலர் பிறிவிலர் எனும்இவை உணர்த்தும்
85 காயும பழமும சுவையும நுகர்வ
தாயவன் தானும் அவன்முதற் றென்னும்
அகிலமுந் தெளிய அறிவோன் தானும்
அகிலமும் அறிஞரை அறிவிப் போனும்
அறிஞர்க் கறிவாய் அறிகின் றோனும்
90 அறிவிற் கறிபொருள் ஆவோன் தானும்
அகிலமும் மேனி யானவன் என்னும [ன்
தருபொருள் கொள்பொருள் தருவோன் கொள்வோ
ஒருபொரு ளாயின் [3]உவப்புண் டென்க
நுகாவோன் தனக்கு நுகர்பொருள் வேண்டில்
95 இகலறக் கிடையா தொழிந்ததென் நிரயமும்
வேண்டா ராயினும மெய்யுறு வியாதிகள்
ஈண்டா தொழியா திறைக்கிவை ஈடல
சத்தியுஞ் சிவமும் தாமே நுகரும்என்று
இத்திறன் உணர்வுவந் தெய்துவ [4]தெவர்க்கே
100 தமக்கே என்னில தாம்உண ராமையும்
அமைப்பற உணர்தலும அவர்க்கடை வன்றே.

## முத்தி மறுப்பு

நானும் அவனும் நவையும் நலனும்
தான்அவன் ஆகையும் நின்[5]சா தனத்தில்

---

[1]விரோதமும். [2]சராப கலச மாதிகள், சராவம் அகல்சால் கலசம், கலசாதி கணங்கள். [3]உவப்பின் றென்க. [4](து)எவர்க்கோ. [5]சாதனத்திலைச்.

சகயோ கத்தைச் சாயுச்சி யம்எனப்
105 பகர்வது பதிபசு பாசத் தவர்க்கே
யாதொரு வகையென ஓதிய திறைநூல்
சொன்னவற் றொன் றன் றென்னில்வீ டெளிதே
தான்அறி வழியே தலைப்பொருள் [1]பிடிக்கின்
மேல்நிகழ் பலமும வீடளித் திடுமே
110 நிலையாக் கருவியை நிலையாக் கருதிப்
புலையா டுதலும உலகா யதன்பொருள்
குட்டியம் இன்றிநற் கோலம் எழுதுதல்
இட்டம தாயிற் கருவியும் இடங்களும்
கருத்துற உரைக்கத் தெரித்திடும் [2]அதீதத்து
115 அறிவொன் றிலலோர்க் கிறையருள் உதவுதல்
பிறிவறி வரிய செறிஇருள் இடத்தோர்
அந்தகற் காண வநதோர் எமமை
நீவிரும காண வேணும் என்றுங்கு
எடுத்தொரு தீபம கொடுத்ததை ஒக்கும்
120 இச்செயற் கிறைவன் கொச்சையன் அன்றே
கருவி வசத்தில் தெரிவுறக் காண
[3]வேண்டுநர் இலரால் ஈண்டறிவு யாவுஞ்
சிவமே என்று செப்பினை அவமஉறு
பொறிபுலன் அறியா அறிவது பிரமம்
125 எனறோர்க் குன்போல் இடர்ப்படல் இலதே
ஏற்றம கருவி இருபதோ டிரண்டும்
போற்றுமஓர் அவத்தையும புகலதிரி மலமும
ஈசனும உயிரும பேசினை அஃதொழிந்து
ஒன்றே யாகும் என்ற நின்இயலபு
130 தாயர் மனைவியர் தாதியர் தவவையர்
ஆயவர் எவரையும ஓர்மையிற் காணும்
கோகழி [4]தூர்த்தர் கொடுந்தொழில் தகுமே
ஆக மற்றதன் அருள்நிலை தன்நிலை
ஏக நாயகன் ஆகிய இறைநிலை
135 நாசமில் பாசம வீசிய வியன்நிலை
இனையவை யொன்றும நினைவினும் இன்றி
உண்டெனும் உணர்விற் கண்டது கருதில்

---

[1]பிடித்து. [2]மதித்தது. [3]வேண்டினர். [4]தூர்த்தக்.

இழுக்கெனும் புலன்வழி ஒழுக்கமும் அதுவாய்க்
கொண்டு பண்டையில எண்தரு மடங்கு
140 வந்தவா செய்யத் தந்ததை யன்றே
புன்மைகள் நீங்க உண்மை கேண்மதி.

## 9 - க. சைவவாதி சங்கற்பம்

### பெத்தம்

அறிவாய் அறியும அறிவுயிர் கேவலத்து
அறிவிலன் இருளொடும பிறிவிலன் அண்ணல்
கலைமுத லாக நிலவிய கருவிகள்
145 விளக்கென உதவும துளக்கறப் பொருந்தி
இருவினை நுகர்வில வருவினை செய்து.

### முத்தி

மாறிப் பிறந்து வருநெடுங் காலத்து
இருள்மல பாகமும சத்தி நிபாதமும
மருவுழி அருளுரு மன்னவன் அணைந்து
150 செலகதி ஆய்ந்து பல்பணிப் படுத்திக்
கருவியும் மலமும பிரிவுறப் பிரியா
ஞானம் நலகலும தான்அது நோக்கித்
தன்னையும் அதனையும தனமுதற பொருளையும
இன்னவென் றறியா இருவரும முயங்கி
155 ஒன்றாய் உறுபயன் உவப்பும
இன்றாய் நிற்கும இதுசிவ கதியே. கஉ

## 9 - உ. சைவவாதி நிராகரணம்

### பெத்த மறுப்பு

இதுகதி யாக முதல்அறி வுயிரேல்
பொறிபுலன் நீங்க அறிவுயிர் அன்றே
அடைகாய் நூறி னிடைசேர் சிவப்பென
இந்தியத் தொகையின் வநதறி வொன்றுநின்று
5 இன்றாம என்றல் அன்றே எந்தை

அறிவிலன் அதீதச் செறிவில் என்றுரைத்த
நின்மொழி விரோதமும் பின்முன் மலைவும
மன்வயின் நிகழா [1]மலம்இருள் இறையொளி
தான்அமர் விளக்கில் தகும்மருட் கலாதிகள்
10 ஈனமில் இவனிடத் தெவ்வா றிசைந்தன
இசைந்த தாயினும் இசையா தாயினும்
அசைந்திடும் முத்தி சாதனம் அவமே.

முத்தி மறுப்பு

சத்தி நிபாதமோ தகுமல பாகமோ
உய்த்த காரண காரியம ஓதுக
15 பாகம் [2]கார ண மாகில் மற்றது
காலா வதியிற் காயா வதியில
மேலா மென்னும் வினையுறும் அவதியில்
துயரென உயிர்க்குத் தோன்றிடும அவதியில்
நயமிகும் இறையவன் நல்கிடும் அவதியில்
20 ஏதிற் கூடும ஓதுக இருவினை
ஒத்த எல்லையில் வைத்தனர் என்னில
[3]அருவினை தூக்க உருவினை நிலலாது
ஒருவினை புரிகால் இருவினை ஆகா
ஒப்புறு மாறு செப்புக தேசிகன்
25 அருளுரு என்ற பொருளினை ஆயின்
மாயா [4]உருவினன் மாயா உருவினை
ஏயான் ஏய்ந்தவர் எம்ம னோரே
பல்பணி ஞான காரணம என்னில்
தொல்பணி தொறும்பயன் தொடுப்பத னாலும்
30 ஒருபணி செய்யாச் சிரபுரச் சிறுவரும
அரச ராகிய தருணத் தலைவரும்
முதிர்பர சமயத் திதமுறும அரசரும
ஞானம பெற்ற நன்மையி னாலும்
ஈனமில பணிஅருட் கேதுவன் றென்றால்
35 ஞானேற் பத்தி நிமித்தமஇத் தொழிலென
ஏனோர்க் கிறைநூல் இயம்பிற் றென்னும்
கருவியும் மலமும் பிரிவுற அருள்தரும்

[1]மலவிருள். [2]காரண மாக. [3]இருவினை. [4]உருவன்.

என்றனை கேவலத் தேதும் அறிவிலன்
துன்றிய சகலத் தருள்நிலை தோன்றாது
40 எவ்[1]வவ் வவத்தையில் இறையருள் பெறுகுவம்
செவ்விய ஞான தெரிசன மாவது
நால்வகை மாயைப் பால்வரு ஞானம
பண்டைஞானம் இதுபறி தரவரக்
கண்ட ஞானம் இதுவாக் காணில்
45 ஈனமில் ஞானிக ளென்போர் யாருமில்
ஞான வேற்றுமை நாடலும் அரிதே
தானும் ஞானமும் தலைவனும என்றனை
ஆனபின் இவனும இவனது ஞானமும்
பாசமும பாச ஞானமும் என்றிவை
50 பேசுவர் ஒன்ருப் பெற்றிய ஆகலின்
மும்மைப் பொருட்கும் மும்மைத் தன்மை
செம்மைத் தென்னிற் செலவுகள் எழுதுக
இருவரும கூடி ஒருபயன் ஆய்த்தென்று
அருளினை இவவா றபேதிகள் நிலையே
55 பதிபசு பாசம முதிர்அறி வுகளுடன்
ஆரு முன்னர்க் கூருப் பின்னர்
இருபொருள் நீத்துமற் ருெருநால் வகையையும
ஈனமில் ஞாதுரு ஞானம ஞேயம்என்று
இசைய மூன்ருய்ப் பசுபதி என்றவற்று
60 இரண்டாய் இரண்டும் ஒன்றின்ஒன் ருகத்
திரண்டாம் பயனெனும் திருவருள் தெளியில் [ம்
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்ரு
என்றிறை இயற்கை இயம்புதல் தகுமே
ஒன்ரும என்றல் அன்றியும உவப்பும்
65 இன்ரும என்ருல் என்பயன் இயமபுக.

முடிவு

என்றனை வினவும யாவும் விளங்க
வென்றிகொள் கருத்தில வேண்டினை யாயின்
நதிக்கரை ஆன்எனக் கொதித்தல் [2]மறந்து

---

வரி 62 : திருவாசகம் ௩௯௪.

[1]எவ்வவத் தையில். [2]அமர்ந்து.

வெண்ணெயம் பதிதிகழ் மெய்கண் டவன்அருள்
70 உள்நிலை யுடையோன் ஒருவன் உரைத்த
தவப்பிர காசத் தன்மையில் விரித்த
சிவப்பிர காசச் செழுந்தமிழ் உண்மையை
அருளுடன் ஆய்ந்து கொள்ளத்
திருவருள் வினவல் திருந்திடும் அன்றே. கந

வெண்பா

தராவலயத் துள்ளோர்கள் தந்தசங் கற்ப
நிராகரணம் என்னுல் நிகழ்த்தும் - பிரானை இனி
வெமபந்தம் நீங்கத் தொழுமின் வியன்மருதச்
சம்பந்தன் வந்தருளும் தான். கச



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

அருளிச்செய்த

# 15. துகளறுபோதம்

### காப்பு

*எல்லாம்பொய் என்றே எனைக்காட்டி எம்பிரான்
சொல்லாத பேரறிவு தான்சொலலி - நல்லதொரு
அறபுதமாம ஆனந்தம் ஆங்கருத்தல் செப்புதற்குக்
கற்பகத்தின் தாளிணையென் கண்.

## நூல்

### பாயிரம்

பதிபசு பாசந் தெரிந்தந்தப் பாச
விதிவழியை வென்றதனின் வேரும் - கதிவழங்கும
மெய்கண்டான் சந்தான [1]மேவிச் சிவானந்தங்
கைகண்டார் காணுர் கரு. க

உற்ற சரியை ஒழியாத நற்கிரியை
குற்றமிலா யோகக் குறிநெறியும் - முற்றிப்
பிறந்தார்கள் தாமறியப் பேசுகேன் அன்றிப்
பிறந்தார் அறியாத பேறு. உ

எல்லாங் கழற்றி இறைவ [2]னுடன்கலக்க
வல்லார்கள் [3]சொன்ன வழிபலவும - சொல்லரிய
[4]தம்பிரான் ஆகமத்திற் சாற்றும் அவதரமும்
எம்பிரான் தந்தான் எமக்கு. ங

---

* இச்செய்யுள் ஒரு பிரதியில் மாத்திரம் காணப்படுகிறது.

[1]மேவிற். [2]னெடுங்கலக்க. [3]கண்ட. [4]தம்பிரான் தாள்கள் தணவாத வாதனையும்.

## பூதப்பழிப்பு

மண்ணுக் குயிராகி வந்துரத்துத் தான்தரிக்கும்
எண்ணும்உரோ மாதிஇதன் காரியமாம - கண்ணிற்
பிறவுங் கடினமாய்ப் பேசியது தானும்
துறவுமுதற் பூதத் தொழில். ௪

நீர்க்குயிராய் நின்றே நெகிழ்ந்து குளிருமே
பார்க்கில்நீ ராதி பகர்கருமம் - கார்க்குரிய
[1]வெள்ள முதலாகும் மெய்யுணரின் அப்புத்தான்
அள்ள விடப்படா தாம். ௫

வன்னிக் குயிராகி [2]வந்துசுட் டொன்றுவிக்கும்
பன்னுபசி யாதி பயில்கருமம் - [3]மன்னும்
விளக்காகிப் பந்தமாய் [4]வேறுக நிற்கும
துளக்கமிலாத் தேயுத் தொழில். ௬

தேடப் பிரித்துத் திரட்டுவிக்கும் செய்கருமம
ஓடல்முத லோவா உயிர்மருத்து - நாடில்இவை
[5]யல்லவாம் வாயு அருட்குருவாற் காண்பதன்றிச்
சொல்லவா ராதே துணிந்து. ௭

இரந்தரமாய் நின்றே இடங்கொடுக்கும் வானம்
பரந்த குரோதமுதற் பார்க்கில் - விரிந்த
கருமமாய் வேறுகுங் காணலாம் உண்மைக்
குரவனு லென்றே குறி. ௮

வட்டம் அறுகோணம மாயாத முக்கோணம்
இட்ட பிறைசதுர மேவடிவம - எட்டரிய
வேதன்மால் மிக்க விடையோன் மகேசனுடன்
ஆதி அதிதெய்வ மாம். ௯

இப்படியே பூதத் தியல்பு தனைத்தெளிந்தே
அப்படிநீ [6]நிலலாமல ஆங்கறிந்திட் - டெப்படியுந்
தோன்றமல் [7]தேசிகன்முன் சொன்னபடி கண்டிருந்தால்
ஊன்று யதுவாம் உடமபு. ௧௦

---

[1]வெள்ளமுத லாதியுமாம். [2]வந்துசுட்டிங் கொன்றுவிக்கும். [3]என்றும். [4]வேறுகி. [5]யல்லவாய். [6]யல்லாமல். [7]தேசிகன்றன்.

### பொறியற வுணர்தல்

பூத [1]மிடமாய்ப் பொருந்தும் பொறிபுலன்கள்
நாதனரு ளாலேநீ நாடியவை - ஏதமெனத்
தத்தம் உருவுணரத் தான்அகலும் அப்போதே
சத்தமுத லாதிவிடும தான். கக

சத்தாதி யைந்தினையுஞ் சந்தித்து நீஅகல
அத்தால் வரும்பயன்கள் [2]ஆங்ககலும் - எத்தாலும்
காணமல் அவ்விடயங் கைகழலக் கைகழலும்
நாணைப் பிறப்பின் நவை. க௨

வாக்காதி அத்துடனே நீங்கவச ஞதிவிடும்
நீக்காத உட்கரணம் நீங்குமே - தாக்கி
மனது முதலாக வநதவந்த போது
தனது செயலுணரத் தான். க௩

### அந்தக்கரண சுத்தி

மன்னும் மகாரம் மனஞ்செலுத்தும் புத்தியினை
உன்னும் உகாரம் உபகரிக்கும் - முன்னுகும்
ஆங்காரந் தன்னை அகாரம் செலுத்தியிடும்
நீங்காத சித்தம்விந்து நேர். க௪

அந்தக் கரணம் அகல அதிற்கூடுந்
தொந்தக் கலாதித் துரிசறுமே - பந்திக்குஞ்
சித்த [3]மலமறுத்துத் தீர உனக்கேற
ஒத்த படியே உணர். க௫

### கலாதிஞான நிராகரணம்

பொங்கு புலனருந்தப் போதந் தருமாயை
தங்குகலை யாதி தருஞானம் - இங்கிதனை
நீங்குபடி மாணவக நின்போதம் [4]ஒன்றிரண்டு
தூங்குபடி நில்லாய் துணிந்து. க௬

கால நியதி கலையாதி தத்துவங்கள்
சாலஅறி விச்சைதொழில் தானமுத்தல் - மூலமாம்

---

[1]வுடம்பாய்ப். [2]ஆறும், ஆறுமே. [3]மயலறுத்துத். [4]ஒன்றிரண்டுந்.

மாயை மயக்கல் வரைத்தல் [1]வினைகூட்ட
லாயவிட லாமென் றறி. கஎ

### சுத்ததத்துவ தூடணம்

ஆன அதனுல் அழுந்திஞல் [2]ஆசதற்கேன்
ஈன வயிந்தவத்தின் எல்லைகாண் - ஊனமிலாப்
போகந் தருமாறுற் பொல்லாதோ புண்ணியத்தின்
ஆகந் துணையானூர்க் காம். கஅ

சுத்தவித்தை யாதிமுதற் சொன்னஏழ் தத்துவமும்
ஒத்து நடத்தியிடும் ஓவாமல் - வித்தைசெயல்
ஏறிக் குறைந்தொத்தல் எப்போதும் பார்த்திடவே
மாறிப் பிறந்தகலு மாறு. கக

### தத்துவாதீதம்

மண்முதலாம் நாதாந்த மாய்வந்த தத்துவத்தின்
உண்மையறிந் தெல்லாம ஒழிந்தாயே - எண்ணில்இவை
தத்துவா தீதமெனச் சாற்றுங்காண் சைவமறை
அத்துவா எல்லாம் அற. உ௦

இப்பரிசே ஐந்துசுத்தி எய்தியதால் எப்போதும
செப்பரிய மாயாதி தீருமே - அப்பரிசே
ஆங்கவற்றி ஞேடே அழியும வினைமலந்தான்
நீங்கவற்ரே நீங்கா நிலை. உக

### சகல தரிசனம்

நின்றுநின்று வந்த நிலைதோறும் நீஅறிந்த
தன்றிஅவை தன்னை அகன்ருயே - இன்றிவைதான்
முத்தி படுஞ்சகலம் முன்னம படுஞ்சகலம்
பெத்தமது வென்றுநீ பேசு. உஉ

அஞ்சு வகையாக ஆருறும் நீத்ததற்பின்
விஞ்சிவரும் ஆணவத்தின் மேலீடு - வஞ்சமறச்
சாற்றில்அது கேவலமாம் தான்கழித்துப் போந்தநிலை
சாற்றில் அதுசகலந் தான். உங

[1]வினைக்கூட்ட. [2]ஆசறற்கே.

## கேவலம்

அன்றிவந்த தத்துவங்க ளெல்லாம் அகன்றிடவே
ஒன்றிநின்ற ஆணவந்தான் ஒன்றுமே - என்றுந்தான்
நீங்கா இருள்விழிபோல் நிற்குமே ஆன்மாவும்
பாங்காக ஆங்கே பதிந்து. உச

பகலிழந்த வான்போற் பரவுமலம் நீயாய்
இகலறவே நின்றாய் இழந்தாய் - அகலறிவு
வாடாத முத்தியினில் [1]வாய்த்தஅருட் கேவலம்நீ
நாடாத கேவலமுன் ளுள். உரு

## கேவல தரிசனம்

ஒன்றுந் தெரியா ஒழியா இருளாகி
இன்றளவும் நின்ற [2]திதுவோதான் - ஒன்றாகிச்
செம்பிற் களிம்புபோற் சேர்ந்துநின்ற ஆணவந்தான்
அம்புநிழற் போலென் றறி. உசு

கருவி கரணங் கழன்றுங் கழலா
இருளின் பெருமையிது என்னே - இருள்தான்
விடிகைக் கிருண்ட மிகுதிபோல் மாசு
மடிகைக் கிருண்டதுகாண் மற்று. உஎ

## கேவலாதீதம்

வானில் இரவிவர வல்லிருள்போ மாறுபோல்
ஈன இருள்அகல்வ தெக்காலம் - மானே
அறிந்தாய் இருளென் றறியாமை தன்னைப்
பிறிந்தாயோ இல்லையோ பேசு. உஅ

இந்த இருள்ஒழிய ஏதும்நான் காண்கிலேன்
இந்த இருள்அகல்வ தெப்படியோ - இந்த
அறியாமை நின்றால் அதனைநீ காணாய்
அறியா தறிந்தனையோ அன்று. உகூ

---

[1] வாய்ந்தஅருட். [2] திசைவோதான்.

### தன்னுண்மை

அந்த மலமாம் அறியாமை கண்டாயே
அந்த அறிவுநீ ஐயனே - தொந்தஇருள்
போனதே [1]உன்னைவிடப் போக்கித் [2]திரோதையரு
ளானதே கண்டாய் அறி. ௩௦

வைத்த அவதரங்க ளெல்லாம் உடன்வந்தும்
அத்தகைமை கண்டும் அறியாயால் - முத்தனுப்
பாச அறிவும் பதியறிவு மன்றியே
ஆசறவே நின்றவன்நீ யாம. ௩௧

### சைதன்னிய தரிசனம்

கண்ணில்இருள் போனாலும் கண்தன்னைக் காணுபோல்
எண்ணும்இருள் போனால எனை அறிய - வொண்ணுதோ
கண்போற் சடமோநீ காட்டியதுங் கண்டறிந்த
ஓண்போதம் நீயென் றுணர். ௩௨

இருட்கும ஒளிக்கும் இடமாகும் வான்போல்
அருட்கும் மருட்கும் அகமாய்ச் - சுருக்கமிலா
நீசத் தசத்தன்று நேரே சதசத்த
ருய்சத் ததுவசத்த தாம். ௩௩

அறியும் அறிவுநீ யன்றோ உனக்குச்
செறியுமலம் நின்றதோ செப்பாய் - அறிவுதனைப்
பாராதே பார்த்தறிந்து பாசப் பழக்கமதில்
வாராத தன்றோ வழக்கு. ௩௪

### ஞான தரிசனம்

அறிந்தறிந்து வந்த அவதரங்கள் தோறுஞ்
[3]செறிந்தறிய நின்றதெது தேரின் - [4]பிறிந்ததனின்
நின்ற [5]தறியாமல நிகழ்த்தியது நீக்கிஉனை
இன்றறிய வைத்ததருள் என். ௩௫

அந்த அருள்உனக்கிங் காதார மாய்அல்லின்
இந்து வெனஎறித்திட் டேகமாய் - முந்தி

---

[1] உன்னைவிட்டுப். [2] திரோதைமருள். [3] செறிந்தறிந்து.
[4] பிறிந்ததனை. [5] தறியாமை.

உனை உனக்குத் தான்விளக்கி ஓவா துணர்த்தும
தனை[1]உனக்குக் காட்டுமே தான். ௩௬

எல்லாம்பொய் [2]என்றிங் கிருந்தேனும் நானன்றே
நல்லாய் எனைஅறிந்தேன் நானன்றே - சொல்லாடும்
நான்பிரம மன்றி நடுவே உணர்த்துதற்கு
வான்பிரமம் உள்ளதோ மற்று. ௩௭

அன்றுமுதல் இன்றளவும் அண்ணல்அறி விபபதன்றி
இன்றறிவேன் நான்என் றியம்புவதென் - என்றும
அவத்தை தனில்உணர்த்தி ஆங்கருத்தி இன்றித்
தவத்தில் உணர்ததினர்ஆர் தான். ௩௮

உன்அறிவை நீயே உணர்வையே யாமாகில்
இந்நெடுநாட் பாசத் தியையாயே - உன்அறிவை
நீங்கா அறிவாகி நீரும இரதமும்போல்
ஆங்காண் அரனார் அருள். ௩௯

உன்அறிவுக் குள்ளே உணர்வாய் ஒழியாத
தன்அறிவு தான்உனக்குத் தாரகமாய்ப் - பின்னமற
ஒன்றாய் ஒழியாமல் உள்ளடங்கி உள்ளபடி
நின்றால் அதுவாவை நீ. ௪௦

*இச்சை உயிர்க்கிரங்கல் ஞானம் இசைந்துணர்த்தல்
வைச்ச கிரியை வயநடத்தல் - நிச்சயமாஞ்
சத்தியிவை மூன்றினையுந் தந்ததொரு சத்திகாண்
முத்தனே பார்நீ முயன்று. ௪௧

பரைதரிசனம்

கிரியைஅறி விச்சை கிளர்நதசத்தி ஏதோ
பெரியபரா சத்தியெனப் பேசாய் - [3]தெரியிலதிங்
காரும அறியா அகண்டபரி பூரணமாய்ப்
பேரறிவாய் நிற்கும பெற. ௪௨

---

[1]உனக்குத் தான்விளக்கும். [2]என்றே இருந்தேனும். [3]தெரியிலது வாரும்.

*இப்பாடல் ஒரு பிரதியில் பரைதரிசனம் என்ற தலைப்பின்கீழ்.

அந்த அறிவும் அறிவன்றே இப்போது
தந்த அறிவும்அது தானன்றே - வந்த
அறிவிற் கிளைத்ததுகாண் அவ்வறிவிங் கேதோ
நிறைவிற் கிளைப்பற்ற நேர். ௪௩

அறிவார்க் [1]கறிவித்திங் கல்லாத தாகா
அறிவாய் விகற்ப மறியா - அறிவேகாண்
கண்பெற்றார் கண்ட கதிரொளிபோற் கண்டதனை
விண்பற்றாய் நில்லதிலே மேல். ௪௪

### பரையில் வியாத்தம்

விண்ணிற் கதிரோன் விளங்கி விரிந்ததுபோல்
கண்ணிற் கதிரோன் கலந்ததுபோல் - நண்ணிப்
பரைநிறைவில் நீயும பதிவையே யாகில்
உரையிறந்திட் டொன்றாவை யுற்று. ௪௫

### பரையில் யோகமும் போகமும்

விண்ணில் விகற்பமற மேவியகால் நின்றதுபோல
நண்ணும் பரையதனில நண்ணியே - எண்ணிறந்து
நீர்உறங்குந் தன்மைபோல் நிற்கைபரை யோகமஅதிற்
சீருறலே போகமெனச் செப்பு. ௪௬

### [2]சுத்தபராயோகமும் சாக்கிரமும்

நீங்காத [3]பேரறிவு நீங்காமற [4]கண்டநீ
நீங்காமல் நின்றபடி நின்றதனின் - நீங்காமல்
நின்றுவிட லன்றேதான் நின்மலன்தன் பேரறிவில்
ஒன்றுபடல் [5]என்னும உரை. ௪௭

எத்திசையும் [6]ஒன்றும் இறையறிவி லேஅழுந்தல்
சுத்தபரா [7]யோகமெனச் சொல்லுமே - [8]நித்தமறை
அத்தன்மை [9]கண்டால் அதுமுத்தி சாக்கிரமாம்
சித்த மயல்அறவே தேர். ௪௮

---

[1]கறிவித்தநகு. [2]முத்திசாககிரம், சுத்தபராயோகமும் முத்தி சாக்கிரமும். [3]பேரறிவின். [4]கண்டுநீ. [5]என்றறிநீ யுற்று. [6]ஒன்றாய். [7]யோக மெனத்துணிநீ. [8]சத்தியமே. [9]காண்டல்.

### [1]சாக்கிராதீதம்

நின்ற [2]அறிவறிகை நீங்காமை சாக்கிரமாம்
அன்றி அவிழ்தல் அதீதமாம் - [3]சென்றறிவை
நீங்காமை நின்று நெடிது துயில்கொளவே
வாங்கா தறிவாய் வர. ௪௯

### [4]பரையிலதீதம்

இவ்வறிவு [5]காண்டல் இருள்தீருஞ் சாக்கிரமாம்
அவ்வறிவு காணு ததீதமாம் - இவவிரண்டும்
பாராமல் நிற்றல் பரையி லதீதமாம்
ஆரா அறிவகன்ற தால். ௫௦

ஈசனறி வாகிஎல்லாம் இன்று கழன்றகன்ருய்
பாசம்மிக வைத்ததனிற் பற்ருதே - கூசாமல்
நேராக நீங்கிஅதில் நின்ற சுவடறவே
வாராய் சிவமேல் வர. ௫௧

### [6]சுத்தாவத்தை

அறிவடையச் சென்றங் கதீதமாய் நின்ற
குறியிறந்திட் டொன்றுங் குறியா - நெறியேது
சுத்தவத்தை மைந்தாஉன் தொல்லைமலம் இல்லைஇல்லை
[7]அத்துடனே செல்வதது வாம. ௫௨

### [8]சுகரூபம்

பைய இருந்து பதைப்பற்ற பின்உனக்குத்
துய்ய சுகப்பிரபை தோன்றுமே - ஐயனே
கண்டாய் சிவபூமி காட்சி யறக்கலந்து
கொண்டாள்வன் கண்டாய் குறித்து. ௫௩

விழுந்த அவதரத்தில் விஞ்சு சுகந்தான்
எழுந்ததிது எங்கே இறைவா - மொழிந்தருளாய்
மாமணியிற் சோதி மலர்ந்த பிரபைபோல்
ஆம்அரன்தன் பாலே அது. ௫௪

---

[1]முத்திசொற்பனம் சாக்கிராதீதம். [2]அறிவறிவை. [3]சென்றறிவி னீங்காமல். [4]முத்தி சுழுத்தி பரையிலதீதம். [5]கண்டால். [6]முத்தி துரியம் சுத்தாவத்தை. [7]அத்தனுடன். [8]சுகரூபம் துரியம்.

துன்பமற்ற [1]இந்தச் சுகப்பிரபை தன்னையே
இன்பசத்தி [2]என்றறிநீ எப்போதும் - அன்புறவே
நின்றதிலே ஆறி நிலாவு நிலாவுமபோல்
மன்றல் தரமணந்து வாழ். ருரு

தேனுரும் இன்பச் சிவவடிவம் இப்படியோ
வானுடர் காணுத மன்னவனே - ஞானு
இதுவும் ஒருசத்தி [3]இறைவர்க்க தானுல்
எதுமுத்தி சொல்லாய் இனி. ருசு

### [4]சுகாதீதம்

இந்தச் சுகத்தில் இனிநீ விழியாமல்
அந்த அறிவின் அயர்ந்ததுபோல் - தொந்தமறப்
போதாய் இதுவே சுகாதீதம் பொய்யற்ருேர்க்
காதார மான அருள். ருஎ

ஒன்றுஞ் சுகவடிவுக் குள்ளான தம்பிரான்
அன்றி ஒருபொருளும் ஆகாதே - நின்றமுழ்ந்திச்
சொல்லரிய இந்தச் சுகத்துக் கதீதமாய்
நில்அவன்தா னுமே நிலை. ருஅ

### [5]சிவப்பேறு

எல்லாங் கழன்ற இடமே சிவமென்று
[6]சொல்லா டுவர்கழன்ற தூயோர்கள் - நல்லாய்கேள்
நின்றபடி தானே நிலையா நிலையதனில்
நின்றுவிடு நேராக நீ. ருசு

வானகத்தில் வானும் மணத்தில் மணமும்போல்
[7]ஆனசுகப் பேற்றில் [8]அழுந்திஅது - தானுகும்
ஆண்டகுரு நாதா அடியேன் பெருவாழ்வை
மீண்டுசொல உண்டோ விதி. சுO

---

[1]இன்பச். [2]என்னு மிருக்காதி. [3]இறைவற் கிதனுல், இறைவர்க் கதனுல். [4]முத்திதுரியாதீதம் சுகாதீதம். [5]சுகப்பேறு. [6]சொல்லாடு முன்னே சுருதிமறை. [7]ஆனசிவப். [8]அழுந்தியவா.

நீயுஞ் [1]சிவமுமாய் நின்ருயோ நின்றிலையோ
ஆயஅடி யேனே அதிகாரம் - நாயனே
ஒன்றன் றிரண்டன் றிரண்டொன்று தானன்று
நின்றதொரு தன்மை நிலை. சுக

சாற்றில் அதற்குவமை தாடலைபோற் சன்மார்க்க
வேற்று விதிபலவும் வேணடாவே - போற்றரிய
நித்தனே சுத்தனே நித்தியா னந்தனே
அத்தனே முத்தனே ஆங்கு. சுஉ

அந்தச் சுகத்துக் கதீத அவத்தை யென்பர்
பந்தமற்ற முத்திப் பயனறியார் - அந்தோ
பிறியாத இன்பப் பெருமானைப் பெற்றும்
அறியாத வாதனையால் ஆங்கு. சுங

பரமானந்த தரிசனம்

*நின்ற நிலைசிவமாய் நின்ருயே நின்மலனும்
என்றும் பயனாய் இருந்தானே - அன்றே
அவனுக் கிதமே தவனாகி நின்ற
இவனுக் கிதமே தினி. சுச

அன்றே தொடங்கி அனைத்துயிரும் தானாகி
ஒன்ருகி நின்றவருக் கின்பூட்டிக் - குன்ருமற்
கொண்டுவிட லன்ருேநம் கோமாற கிதமென்று
[2]கண்டுகொள்நீ இநதக் கருத்து. சுரு

பார்க்கரிய இந்தப் பரம சுகந்தனைச்
சேர்ப்பன்உயிர்க் கென்றிறைவா செப்பினையே - மாற்றரிய
ஆனந்தம் ஆருயிர்கட் கண்ணல் அருத்துவது
தான்எங்குப் பெற்றவா சாற்று. சுசு

பெற்றருந்தி இன்பம் பிறர்க்கும் அருத்தினனே
உற்றபர மானந்தம் உள்ளதோ - மற்றிதுதான்
என்றுநீ கேட்கில் இறையுருவம் ஆனந்தம்
[3]அன்றிவே றென்றில்லை யாம். சுஎ

---

[1]சிவமாகி. [2]பண்டைமறை சொல்லும் பரிந்து. [3]என்றுரைக்கும் ஆகம நூல் இன்று.

*இப்பாடல் ஒரு பிரதியில் சிவப்பேறு என்ற தலைப்பின்கீழ்.

ஆனபர மானந்த மாகின்ற எல்லையே
ஊனமிலா உண்மைதனில் ஒன்றுபடல் - ஈனமஃறத்
தானுன போது தணவா தெழுந்தசுகம்
மானே அதுவா மதி. சுஅ

பரமானந்த யோகம்

விளைந்தபர மானந்த வெள்ளந் தனிலே
துளைந்துதுளைந் தாடியதில தோன்று - வளைந்துன்னை
நீர்போல் அமிழ்த்தியதன் நீள்நிழலபோல் தான்கரந்து
பார்போல் தரிப்பாகும் பார். சுகூ

பாராதே அந்தப் பரம சுகந்தன்னை
நேராகத் தானு [1]நிழல்போலத் - தீராச்
சுபாவம் [2]அதுவாகத் தோன்றிமறை யாதே
அபாவமாய் நில்லாய் அதில். எ௦

பரமானந்த போகம்

நின்றபர மானந்தம் நேரே அனுபவித்தங்
கொன்றுபட உள்ளுருகி ஓவாமல் - என்றும்
மதுவுண்ட வண்டுபோல் மாளாச் சுகத்தைப்
புதிதுண டிருந்துவிடிப் போது. எக

பருகத் தொலையாப் பரபோகந் தன்னை
உருகிஅடி யேன்அருந்த ஊட்டும் - குருவே
அழியாத இன்பம் அரன்அருந்தான் என்னும்
வழிஏது சொல்லீர் மகிழ்ந்து. எஉ

சர்க்கரைதான் ஆர்க்குமமதரும்இரதம் அவ்விரதம்
சர்க்கரைதான் கொள்ளுமோ சாற்றுங்கால்-சர்க்கரைக்கின்
றின்புருவ மன்றி எழிலுருவம வேறுண்டோ
இன்புருவ மேஇறைக்கும என். எ௩

நாவா ரிரதமது நாஅருந்த லல்லாதிங்
காவா இரதம அறியுமோ - ஓவாப்
பரமசுகம் உன்பாற் பலிப்பதே யன்றிப்
பரமசுகங் கொள்ளா பயன். எ௪

---

[1]நிலைபோலத். [2]அதுவாகித்.

இந்தச் [1]சுகம்ஆன்ம லாப மெனஅறிநீ
அந்தச் சுகமொழிந்திங் காராதே - இந்தச்
சுகமெலாம் அந்தச் சுகமாக்கில் உன்றன்
அகமெலாம் ஆனந்த மாம். எரு

### பரமானந்த மேலீடு

அண்ணலும்ஆ னந்தம் அருளும்ஆ னந்தம்உயிர்
எண்ணிலா ஆனந்தம் எவ்வுலகும் - பண்ணி
அளித்தழிப்பா ராகும் அவர்களும்ஆ னந்தம்
களித்ததுவே எப்போதும் காண். எசு

எங்குநிறைந் தானந்த மெல்லாம் அமிழ்த்திமிகப்
பொங்கிக் கரைபுரண்டு பூரணமாய் - [2]அங்கு
வளைத்த உலகுயிரும் வாய்த்த சுகமாம்
அளத்திற் புகுந்ததுபோல் ஆங்கு. எஎ

கண்ட இடமெல்லாம் கருணைக் கடலமுதம்
மொண்டுகொள லாய்நிறைந்த முத்திதனைப் - பண்டே
திருமால் அயனறியாத் தேசிகனார் பாதம
தருமாம் [3]அடியேற்குத் தான். எஅ

### பரமானந்த அவசம்

பரமபர மானந்தம் பார்கீழ்மேல் மற்றும்
அரவம்வா ராதே அகலும - புரணமாய்
ஆங்கே அமிழ்ந்தி அவசமாம் ஆனந்தம்
நீங்கா ததுவாகி நில். எகூ

உற்றபர மானந்தத் தொன்றாய் அதில்உறங்கி
முற்றுவதே முத்திமுடி வென்றுரைக்கும் - குற்றமிலா
வைதிக சைவம் வழிநூல் புராணமற்றுஞ்
செய்வனநூ லெல்லாம் தெளி. அ0

### அணுவகை

ஒன்றிரண்டு மூன்றுமல முள்ளஉயிர் மூவர்க்குஞ்
சென்றிவன்போல் நேரே சிவமாகி - நின்றநிலை

---

[1]சுகமாகில். [2]எங்கு. [3]அடியேற்குந்.

இவ்வகையே ஆளும் எழிற்குருவாம் ஈசனே
அவ்வகையை நீஅங் கறி. அக

பஞ்சாக்கர தரிசனம்

அஞ்செழுத்தும் அண்ணலருள் ஆன்மாத் திரோதமலம்
மிஞ்சி நமத் துரந்து மெய்யருள் வாத் - தஞ்சச்
சிகாரத்தில் யவ்வைவிடுந் தீதிலா இன்பப்
புகாரிற் புகுந்தருந்தப் போய். அஉ

குருத்துதி

பற்றிநின்ற பாசம் பறித்தகல வேவிழித்திட்
டுற்றஉயிர் காட்டி உணர்வுணர்த்தி - மற்றுஞ்
சிவப்பேறு தந்து சிவபோக வாரி
புகப்பே றளித்தவரைப் போற்று. அ௩

சீடவிலக்கணம்

இரவு பகல்நிழல்போல் இட்டபணி செய்து
குரவர்புகழ் வாயாரக் கூறித் - திருமுன்
விழுந்துவிழி நீர்பொழிய மெய்விதிர்த்து நின்று
தொழுந்தவத்தோர் காணுஞ் சுகர். அச

[1]முத்தனுக்கு முத்தியின்மை கூறல்

ஆகமுதல் நீங்கி அருளிற் கலந்துசிவ
போகம் விளையப் புணர்ந்தாலும் - வேகத்
தெரிவாய் நிரயத் திருப்பர் குருச்சொற்
பிரிவார் உலகிற் பிறந்து. அரு

குரு வழிபாடே பொருளெனக் கூறல்

ஆகம் உயிர்பொருள்கொண் டன்றே அருள்அளித்துச்
சோகமெனப் பாவிக்கச் சொன்னுரைத் - தாகத்தோர்
வேண்டும் பொழுதெல்லாம் வேண்டுபொருள் வந்ததுபோற்
பூண்டுதொழ லன்றோ பொருள். அசு

---

[1]முத்தனுக்கு முத்தியின்பங் கூறல்.

### திருமேனியருமை கூறல்

அன்றுமுத லாகவே ஆருயிர்கட் காருயிராய்
நின்றருளும் தம்பிரான் நீங்காமல் - என்றும்
கருவாய்ப் பிறப்பைக் கழற்றினரோ தாமே
குருவாய் அருளாமற் கூறு. அஎ

### குருவே சிவமென்றல்

பாசம் பசுபதியைப் பாரித்துப் பார்த்தனரே
ஆசில் அகலறிவாய் ஆங்ககன்று - பேசரிய
ஆனந்தம பெற்ருர் அருட்குருவே ஈசனென்பர்
மோனமே முற்றும் முயன்று. அஅ

### குருபணி செய்வாரை வழிபடுதல்

கருவேலை தன்னைக் கடப்பர் உலகில்
மருவாத இன்பத்துள் வைத்த - குருவின்
அடியார் அடியார் அடியார் அடியார்
அடியாரைச் சார்ந்த அவர். அகூ

### யோகம்

சன்மார்க்கம் ஈதாம் சகமார்க்கம் சாற்றுங்கால்
பன்மார்க்கம வாயுப் பகர்கருவி - தன்மார்க்கஞ்
சால ஒடுக்கித் தடுத்து வளியிரண்டும்
மாலறவே நிற்கை மகிழ்ந்து. கூ௦

அந்த மனத்தாலே ஆதாரம் ஆறினையும்
சந்தித் ததிற்பொருள்கள் தான்அறிந்திட் - டிந்துவில்
ஓவா ஒளிவைத் துருகும்அமு துள்நிறைக்கில்
ஓவா ஒளியாம உரு. கூக

நின்ற ஒளியுருவின் நீங்காமல் நிற்கவே
என்றும் அழியாமல் இன்புற்றுக் - கொன்றையந்தார்த்
தாணுவுருப் போலேபின் சாரூப் பியத்திலே
மாணவக வாழ்வாய்காண் மற்று. கூஉ

### கிரியை

புத்திர மார்க்கம் புகைஒளி மஞ்சனம்பூ
வைத்தமுது தாம்பூலம் மற்றெவையும - உத்தமமாய்த்
தேடிவைத்துப் பின்னைச் சிவபூசை செய்வதற்கு
நாடவத்திற் செல்லாமல நாள். கூ௩

சுத்திஐந்து செய்து துகள்தீரும் மந்திரத்தால
அத்தமது பத்துமுகம் ஐந்தாக - வைத்துவைத்து
வித்தியா தேகம விதிப்படியிற் ரூபித்துப்
பத்தியால் மேனிதனைப் பார். கூ௪

பர்ர்த்ததிரு மேனிப் படிகந் தனிற்பரனைக்
கோத்ததிரு மந்திரத்தாற் கொண்டுவந்து - பார்த்தருளச்
சொல்லிப் பராக்கறுத்துச் சோதிச் சிவாகமத்தின்
சொல்லிற் படியே தொடங்கு. கூ௫

சோராமற் பூசித்துச் சொன்னபடி நில்இதழித்
தாரார் சமீபத்தில தான்இருந்து - வாராமல்
தானே பரன்அளிக்குஞ் சங்கரனார் அம்முத்தி
தானே தரினுந் தரும. கூ௬

### சரியை

தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரனார் இன்புற்ற
பூதி திருவேடம் போற்றியே - நீதியினாற்
பூங்கா வனஞ்சமைத்துப் பூமாலை புண்ணியற்குப்
பாங்காகச் செய்கை பரிந்து. கூ௭

அலகு திருமெழுக்கிட் டாலயத்தில் அன்பால்
இலகு திருவிளக்கும் ஏற்றிப் - பலகாலும்
சென்று வணங்கித் திருவடிவா ரஞ்சேர்த்தி
நின்றிடுகை தொண்டர்பணி நேர். கூ௮

கொன்றையந்தார் வேணியற்குக் கோயில் பலசமைத்துப்
பொன்றியவை முற்றும் புதுக்குவித்து - நின்றார்

அவலோகந் தன்னில் அடையார் அடைவர்
சிவலோகந் தன்னிற் சிறந்து. ௯௯

[1]அந்த மலம்அறுத்திங் கான்மாவைக் காட்டியதற்
கந்த அறிவை அறிவித்தங் - கிந்தறிவை
மாறாமல் மாற்றி மருவுசிவப் பேறென்றுங்
கூறாமற் கூறக் கொடி. ௧௦௦

## நூற்பொருள்

சாக்கிரம் பத்தொன் பதுகனவு தானென்று
தூக்குசுழி யொன்று துரியமெட்டு - நீக்கு
துரியாதீ தம்மொன்று சுத்தவத்தை முப்பான்
சரியித் துகளறுபோ தம். ௧௦௧

# சித்தாந்த சாத்திரம்

## முற்றும்

[1]இது ஒரு பிரதியில் கொடிக்கவியின் கடைசிப் பாடலாகவும் காணப்படுகிறது.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சந்தானகுரவர் தோத்திரம்

## அகச்சந்தான குரவர்

அருட்குழக ரெழிற்கயிலை முழுக்காவல் நந்திபிரான்
அடிகள் போற்றி
தெருட்சிபெறு மனக்கமல சனற்குமர முனிவன் இரு
திருத்தாள் போற்றி
இருட்டுமலத் தகல்சத்ய ஞானதரி சனிசரண
இணைகள போற்றி
மருட்சியறு பரஞ்சோதி யருஞ்சில குருபரன்கால்
மலர்கள் போற்றி.

## புறச்சந்தான குரவர்

ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த மெய்கண்டார்*
இணைத்தாள் போற்றி
நாராண்ட பல்லடியாராக் கருள்புரிந்த அருணந்தி
நற்றுள் போற்றி
நீராண்ட கடந்தைநகர் மறைஞான சம்பந்தர்
நிழற்றுள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார் செம்பதுமத்
திருத்தாள் போற்றி.

---

*மெய்கண்டார் தோத்திரங்கள் இந்நூல் 62-ம் பக்கத்திலே தரப்பட்டுள்ளன.

### அருணந்தி சிவாசாரியர்

முப்பொருளின் ஈரியல்பும் ஓரியல்பா நுவலாது
முறைவெவ் வேருய்ச்
செப்புசிவா கமங்களின்றன் பொருளொருமை பெறவுணர்
திறமுன் னூலை [த்து
ஒப்பவிரி யாப்பதனுற் சித்தியெனும் வழிநூலாய்
ஒளிர்பிற காலத்(து)
இப்புவியோர் தெளித்துய்ய மொழிந்தஅரு ணந்திசிவன்
இணைத்தாள் போற்றி.

### மறைஞானசம்பந்த சிவம்

திருவளருஞ் சாமமறை திகழ்பரா சரன்மரபோன்
விரசுனர்பான் மறையுணர்வு விரிந்தொளிரப் புணர்த்துவோன்
மருதமொடு கடந்தையையாள் மறைஞான சம்பந்த
குருமணிதன் மருமலர்த்தாள் குறித்துருகிப் பரசிடுவாம்.

### உமாபதி சிவம்

அடியார்க் கெளியன் எனத்திலலை
யண்ணல அருளுந் திருமுகத்தின்
படியே பெற்றுன் சாமபாற்குப்
பரம முத்தி அப்பொழுதே
உடலுங் கரைவுற் றடைந்திடுவான்
உயர்தீக் கையினை அருள்நோக்காற்
கடிதிற் புரிகொற் றங்குடியார்
கமல மலரின் கழல்போற்றி.

---

உ

சிவமயம்

# பாட்டு முதற்குறிப்பகராதி

## சிறப்புப் பாயிரம் முதலிய பாடல்கள்

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 12 | 4 | அந்தத்தான் அத்தான் | அந்தத்தானத்தான் |



